# சந்திரிகா

## அத்தியாயம் 1

### சென்னைக் குடித்தனம்

பங்குனி மாதம். வெயில் வெகு கடுமையாய்க் காய்ந்தது. வாசல் புறத்து ரேழியில் பற்பல அபூர்வ இராகங்களில் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள் சேஷியம்மாள். சற்றுநேரத்திற் கொருமுறை கேட்ட நுங்கு விற்பவளின் குரலையும், பதனீர் விற்பவளின் குரலையும் தவிர, மற்றப்படி வேறு சந்தடியின்றித் தெரு அமைதியாயிருந்தது. புறக்கடையிலிருந்த எருமைக் கன்று மட்டும் உச்சஸ்வரத்தில் "ஙொய், ஙொய்" என்று பல்லவி பாடிக் கொண்டிருந்தது.

கூடத்தில் தூங்கிக்கொண்டிருந்த பதஞ்சலி சாஸ்திரிகள் எருமைக் கன்றின் சத்தத்தினால் கண் விழித்து, சோம்பல் முறித்த வண்ணம், "யாரடீ அங்கே? கன்றுக் குட்டிக்குக் கஞ்சி வைத்ததோ இல்லையோ? வைக்கோல் போட்டிருக்கிறதா? போய்ப் பார்" என்றார்.

"நான் காப்பிக்கொட்டை வறுத்துக் கொண்டிருக்கிறேன். குட்டிகள் யாராவது இருந்தால் கூப்பிடுங்கள்" என்று மிகுந்த மரியாதையுடன் உத்தரவிட்டாள் அவரது ஸஹதர்மிணி லக்ஷ்மியம்மாள்.

"சரி. உன்னைச் சொன்னால் நீ எனக்கு வேலை யிடுகிறாயா? நானே எழுந்து போகிறேன்" என்று கூறிய

வண்ணம் எழுந்து உட்கார்ந்தார். இதற்குள் மூத்த பெண் கல்யாணி, "அப்பா! காமுப் பூவைத் தைத்துக்கொள்ளச் சாமி மாமா அகத்துக்குப் போயிருந்தேன். மாமிக்கு கையிலே ஊர்சுத்து; கோடியாத்துக் கோமதியிடம் தைத்துக் கொள்ளச் சொன்னாள். அவ்வளவு தூரம் அம்மாவைக் கேட்காமல் எப்படிப் போகிறதென்று திரும்பி விட்டேன்" என்றாள்.

"சரி, சமர்த்து! படைப்படைக்கிற வெயிலில் ஓடாமல் வந்தாயே! எருமைக் கன்றுக் குட்டிக்கு வைக்கோல் போட்டானா என்று போய்ப் பார். பார்த்துவிட்டு நல்ல குளிர்ந்த தீர்த்தமாய்க் கொண்டுவா" என்றார் சாஸ்திரியார்.

இதற்குள் லக்ஷ்மியம்மாள் கைவேலையை முடித்து விட்டு, "எதற்குக் கூப்பிட்டீர்கள்?" என்று கேட்டவண்ணம் கையில் சீப்பையும் வாழை நாரையும் எடுத்துக் கொண்டு வந்து தாழ்வாரத்தின் ஓரத்தில் உட்கார்ந்தாள்.

"ஒன்றுமில்லை. கல்யாணி ஆமுடையானை லீவுக்கு இங்கே வரும்படி எழுதியிருந்தேனல்லவா? இந்தப் பட்டிக்காட்டில் தனக்குப் பொழுதுபோகாதென்றும், ஆனாலும் கல்யாணியைப் பார்க்கவேண்டுமென்றிருப்பதால் நாகராஜனையும் கல்யாணியையும் பட்டணத்திற்கே அனுப்பவேண்டுமென்றும் எழுதியிருக்கிறான். என்ன சொல்லுகிறாய்?" என்றார்.

"நன்றாயிருக்கிறது! பொழுது போகாமல் நிற்குமா? அதற்காக அவன்தான் என்னமோ சிறுபிள்ளைத்தனமாய் எழுதினானென்றால், என்னை வேறு யோசனை கேட்கவேண்டுமா? தாயாரா, தகப்பனாரா, ஒருவருமில்லை கேட்டுச் செய்ய. தனி வீட்டில் இது சிறிசு போய் என்ன செய்யும்?" என்று சொல்லிக் கொண்டிருக்கையில், நடையிலிருந்த சேஷியம்மாள் "ஏண்டா ஐயா, (ஐயாவெ(

ரது சாஸ்திரியாரின் செல்லப்பெயர்.) என்ன சங்கதி?” என்று கேட்டுக்கொண்டே எழுந்து வந்தான்.

சாஸ்திரியார் விஷயத்தைச் சொல்ல, “போதுமே சவரனே! சீமை சீமை என்று தான் குதித்துக்கொண் டிருக்கிறான். நான் வேண்டாமென்றால் நிற்பீர்களா? பையை பாய்ப் பணத்தைக் கொட்டிக் கொடுத்து, என்ன கலெக்டர் வேலையேண்டி யிருக்கிறது? அதிர்ஷ்டமிருந்தால் எத்தனையோ பெயர்கள் படிப்படியாய் உயர்ந்து ஜில்லா ஜட்ஜி வேலை பார்க்கவில்லையா? எங்கப்பாவுந்தான் இரட்டைத் தாசில் பண்ணினார். தாசில்தார் சுந்தரமய்யர் என்றால் அழுத பிள்ளை வாய்மூடும். நாக்கு அசைந்தால் நாடே அசையும். என்னமோ வேலை வேலை என்று பறக்கிறதுகள் இந்த நாளிலே. அடுத்தாத்துக் காக்காக் குஞ்சுகூட மதிக்கிறதில்லை. இதற்கு நூறு நூறாய்க் கொட்டிப் படிக்கிறது. நான் சொன்னால் ‘பாட்டி மகா கருமி; மனசாகாது’ என்பீர்கள். படித்துப் பாஸ் பண்ணினவர்கள் எத்தனையோ பெயரைப் பார்த்தாயிற்று, வெறும் டம்பம் டம்பந்தான். நிற்க நிழலில்லை; சாயச் சுவரில்லை; அகமுடையான்களுக்குப் பங்களூர் புடவையும், வைரக்கம்மலும் வாங்கி மாட்டியாய் விடுகிறது. நாங்களெல்லோரும் எங்கள் தாத்தா லக்ஷலக்ஷமாய்ச் சேர்த்திருந்தபொழுதுகூடச் சாதா ஓலை ஜிமிக்கிதான் போட்டுக்கொண் டிருந்தோம். பூவாளூரான் புடவை எட்டு ரூபாய்க்கு அதிகம் வாங்க மாட்டார்கள். நான் சொல்லுவது இப்பொழுது வேம்பாயிருக்கும். பிறகு ஒரு காலத்தில் நான் இல்லாவிட்டாலும் ‘சேஷி சொன்னாளே’ என்று நினைத்துக் கொள்ளுவீர்கள். இந்தப் பயல்கள் பத்தாவது மட்டும் நன்னிலத்திற்குப் போய்ப் படிக்கட்டும். அதற்குள் பேபர் கீபர் படிக்கத் தெரிந்துவிடும். பண்ணையைப் பார்த்துக்கொண்டு வீட்டோடு வாசலோடு ராஜபோகமாய் இருக்

கலாம் என்றால், ' நான்தான் படிக்கவில்லை; பிள்ளைகளாவது பெரிய படிப்புப் படிக்கட்டும் ' என்கிறாய். அந்த ஆசையைத்தான் கெடுப்பானேன்? பட்டண வாச சௌகரியத்தையும் கொஞ்ச நாள் பார்க்கிறது. மாப்பிள்ளையும் ஜில்லா கலெக்டர் பண்ணட்டும். அந்தப் பெருமையும் எனக்கில்லையா? ' பனங்குடி, பனங்குடி ' என்று இவ்வளவு நாள் பனங்குடியில் கழித்தாயிற்று. மீதி நாட்களைப் பட்டணத்துக் குழாய்த் தண்ணீரில்தான் கழித்தால் போகிறது " என்று சொல்லி நிறுத்தினாள் சேஷியம்மாள்.

இதற்குச் சாஸ்திரியார், " அம்மா! நீ சொல்வது வாஸ்தவம்தான். ஆனால் காலத்தை அனுசரித்துத்தானே போக வேண்டும்? நாகராஜன் ஆனர்ஸ் பி. ஏ. படிக்கவேண்டுமென்று ஆசைப் படுகிறான். இந்தக் காலத்தில் யார் படிக்கவில்லை? அவல்கார அம்மாளு பிள்ளைகூட பி. ஏ. தேறியிருக்கிறான். நம் குழந்தைகளுக்குமாத்திரம் அந்தக் குறையை வைப்பானேன்?" என்றார்.

சேஷியம்மாளாவது லக்ஷ்மியாவது ஒன்றும் வாயே திறக்கவில்லை. இத் தருணத்தில் வாத்தியார் ராமபத்ர தீக்ஷிதர் வந்து சேர்ந்தார்.

" வாருங்கள்! வாருங்கள்!" என்று உபசரித்தார் பதஞ்சலி சாஸ்திரிகள். லக்ஷ்மி சற்று மறைவில் கொல்லைப் புறத்து நடையை அடுத்து உட்கார்ந்து இவர்களது சம்பாஷணையை உற்றுக் கேட்கலானாள்.

" ஏண்டா ராமு, ஏது அத்தி பூத்தாற்போலே! அமாவாசை யன்று பார்த்தால் மறு அமாவாசைக்குத்தானே வருவாய்? என்ன காரியமோ? 'சோழியன் குடுமி சும்மா ஆடுமா?'" என்று கேட்டாள் சேஷியம்மாள்.

தீக்ஷிதர் முகம் சிறுத்துவிட்டது. " என்ன அம்மாமி ஒரே போடாய்ப் போடுகிறீர்கள்? நான் என்ன, புது மனி

தனு? நான் இப்பொழுதும் சாப்பிடுவது உங்களுடைய அன்னந்தானே? உங்களுடைய ஆசிர்வாத பலன்தான் பிரம்ம சாரியாய் ஓடிவந்த நான் இரண்டு வேலி குடித்தனக்காரனாய், பூர்வீகக்குடியில் நாலு பெயருக்கு நடுவிலிருக்கிறேன். நீங்களே என்னைப் பார்த்து இப்படிச் சொல்லலாமா?" என்றார்.

"அடே! இந்தப் பசப்பலெல்லாம் உன்னை யார் கேட்டார்கள்? வந்த காரியமென்ன? அதை விட்டுவிட்டு இல்லாத அரட்டைக்கல்லி பேசாதே. அடே ஐயா! பஞ்சாங்கத்தை எடு" என்றாள் சேஷியம்மாள்.

சாஸ்திரிகள் தமது கட்டைமணைக்கு அருகிலிருந்த பஞ்சாங்கத்தை எடுத்துத் தீக்ஷிதரிடம் கொடுக்க, தீக்ஷிதர் எதற்கென்று விளங்காதவராய் விழித்தவண்ணம் பஞ்சாங்கத்தைக் கையில் வாங்கிக்கொண்டு "அம்மாமி! உங்களுக்கு என்ன பார்க்கவேண்டும்?" என்றார்.

"பட்டணத்திற்குக் குடிபோக வேண்டுமென்கிறான், ஐயா. அதற்கு நல்ல நாளாய் ஒரு நாள் பார்த்துச் சொல்லு. அவன் நக்ஷத்திரம் தெரியுமோ இல்லையோ?—அவனுக்கு ஸ்வாதி; அவளுக்கு உத்திராடம். நன்றாய்ப் பார்த்துச் சொல்லு" என்றாள் சேஷியம்மாள்.

"பார்க்கிறேன். நான் கேட்க வந்த விஷயத்தை நீங்களே ஆரம்பித்து விட்டீர்கள். பட்டணம் போகப் போவதாகக் கோபு என்னிடம் சொன்னான். எனக்குத் தெரியாதென்றேன். 'போடா போ! உனக்குத் தெரியா திருக்குமா? பொய் சொல்லுகிறாய்' என்றான். கேட்போமென்றுதான் வந்தேன்" என்று சொல்லிவிட்டு இடது கைவிரல்களினால் கணக்கெண்ணிப் பஞ்சாங்கத்தைப் பார்க்கலானார் தீக்ஷிதர்.

இதுவரையில் பேசாதிருந்த சாஸ்திரிகள், "சித்திரை பதினைந்தாம் தேதி எப்படி இருக்கிறது? சொல்" என்றார்.

"அண்ணாவை பார்த்துவிட்டுத்தானா என்னைக் கேலி பண்ணுகிறீர்கள்? அம்மாமி! அண்ணா பார்த்தபிறகு நான்கூடப் பார்க்கவேண்டுமா?....நீங்கள் ஊரை விட்டுப் புறப்படுகிறீர்கள் என்றால் எனக்கென்னமோ ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. சாக்ஷாத் இராமசந்திரமூர்த்தியும் சரி, அண்ணாவும் சரி. அவரில்லாமல் இந்தப் பணங்குடி ஸ்ரீ ராமரில்லாத அயோத்தி மாதிரிதான். ஆனால் இதெல்லாம் எதிரில் சொல்லுகிற வார்த்தையன்று. நீங்கள் என்ன நினைத்துக் கொண்டாலும் சரி. அண்ணா இல்லாமல் ஊரே வெறிச் சென்றிருக்கும்" என்று நிறுத்தினார்.

இதற்குள் சேஷியம்மாள் "லக்ஷ்மி! லக்ஷ்மி! ஐயாவுக்கும் ராமுவுக்கும் முறுக்கும் பொரிவிளங்காயும் கொண்டு வா" என்றாள்.

லக்ஷ்மி இரண்டு வெள்ளித் தட்டுகளில் முறுக்கு, சீடை, பொரிவிளங்காய் முதலியவைகளைக் கொண்டுவந்து வைத்தாள். இருவரும் பக்ஷணங்களைக் கணக்குப் பார்க்கப் புகுந்தனர்.

பாட்டி ராமஸ்மரணை செய்தவண்ணம் தூணில் சாய்ந்து, கால்களை நீட்டி கண்களை மூடிக்கொண்டாள்.

பக்ஷணத் தட்டுகள் காலியானவுடன் நீர்மோரையும் குடித்துவிட்டுத் தீக்ஷிதர், "அண்ணா! நீங்கள் பட்டணம் போவதானால், வண்டிமாடு, வெள்ளாமை விவசாயமெல்லாம் யாருடைய மேற் பார்வையில் விடப் போகிறீர்கள்? இங்கிருந்து பண்டமாய்ப் பட்டணத்திற்கு அனுப்புகிறாப் போலவா, அல்லது விற்றுவிட்டுப் பணமாய் அனுப்புகிறாப் போலவா, எப்படி?" என்று கேட்டார்.

தீக்ஷிதர் இவ்வளவு பரிவாய்க் கேட்பதைக் கண்டு சேஷியும், "அடாடா! தீக்ஷிதருக்கு நம் குடும்ப விஷயத்தில் எவ்வளவு அக்கறை!" என்று மனதிலெண்ணி,

"ஏண்டா ஐயா! என்ன யோசனை செய்திருக்கிறாய்?" என்றாள்.

"பெட்டி வண்டியையும் மாட்டையும் பேரளம் டாக்டருக்கு நூற்றைம்பது ரூபாய்க்கு கொடுத்து விடலாமென்று எண்ணியிருக்கிறேன். நிலங்களை யாராவது நாணயமுள்ளவர்களாய்ப் பார்த்து வருஷத்தில் நான்கு வண்டி நெல்லும் மாதம் ஏழு ரூபாயும் கொடுப்பதாய்ச் சொல்லி மேற்பார்வைக்கு வைத்துவிட்டுப் போகிறது" என்றார் பதஞ்சலி சாஸ்திரி.

தீக்ஷிதர் மனம் குளிர்ந்து விட்டது. ஆனாலும் வெளியே காண்பித்துக் கொள்ளாமல், "ஊர் போக்கிரிப் பயல் ஊர். அதுவும் நீங்களும் ஊரிலில்லாவிட்டால், பெரியவர்களா பெருந்தலையா ஒன்றும் கிடையாது. எனக்கு நீங்களுமில்லாமல் எப்படியடா காலந்தள்ளப் போகிறோமென்று ஏக்கம் பிடித்துவிட்டது. உங்கள் முகத்துக்காகக் கொஞ்சம் அடங்கியிருக்கிறார்கள். உங்கள் தலை மறைந்ததோ இல்லையோ, வலுத்துவிடும். போன வருஷம் அந்தப் பரதப் பயல் காணிக்கல்லைப் பிடுங்கி இரவுக்கு இரவே என் நிலத்தில் தள்ளி நட்டுவிடவில்லையா? மகராஜன் உங்கள் புண்ணியத்தில் பஞ்சாயத்துப் பண்ணி வைத்தீர்கள். என்னமோ, நீங்கள் வைத்த மரம், நீங்கள் என்னென்ன செய்யச் சொன்னாலும் செய்கிறேன். உங்களுடைய கைங்கர்யத்திற்கல்லாமல் இந்தச் சரீரம் என்னத்திற்கு?" என்று சொல்லி நிறுத்தினார்.

"அதையேதான் நானும் சொல்ல வாயெடுத்தேன். ஏண்டா ராமு. நீதான் நிலபுலன்களை பார்த்துக்கொள்ளேன். அயலான் வாங்கிக்கொண்டு போவதை நீதான், அடையக் கூடாதா? சம்சாரி, பாவம்!" என்றாள் சேஷியம்மாள்.

இவ்வளவு சுலபத்தில் தம் எண்ணம் பலிக்குமென்று தீக்ஷிதர் எதிர்பார்க்கவில்லை. ஆனாலும் உடனே ஒப்புக் கொண்டால் சந்தேகத்திற்கு இடம் என்று எண்ணியவராய், "அம்மாமி! நானென்ன, அவ்வளவு அனுபவமுள்ளவனா? ஏதோ மூன்றேமுக்கால் காணியை வைத்துக்கொண்டு திண்டாடுகிறேன். இவ்வளவு பெரிய மிராசை மேற் பார்வை யிடுகிறதென்றால் சாமான்யமா? ஊசிமுனைகூடக் களவு போகாமல் காப்பாற்ற வேண்டுமே! ஊரோ திருட் டுப்பயல்கள் ஊர். விழித்துக்கொண் டிருக்கும் பொழுதே விழியைத் தோண்டி விடுவார்கள்" என்று சொன்னார் தீக்ஷிதர்.

யோசிக்கிற தென்ன? எப்படியும் நாகராஜன் தவறா மல் பாஸ் செய்தாலும்கூட நாலு வருஷம் பட்டணத்தில் இருக்கவேண்டி யிருக்கும். அதற்குள் மாப்பிள்ளையும் சீமைக்குப் போய்விட்டு வந்துவிடுவார். அதற்குள் என்ன பிரமாதம்? நீங்கள் முதலில் பார்த்துக் கொள்ளுங்கள். சரிப்படா விட்டால் வேறு யாரிடமாவது குத்தகைக்கு விட்டுவிட்டால் போகிறது" என்றார் பதஞ்சலி சாஸ்திரி கள்.

"அண்ணாவாகப் பார்த்து என்ன செய்யச் சொன்னா லும் நான் செய்ய வேண்டியதுதான். நீங்கள் செய்திருக்கிற உதவிக்குத் தோலைச் செருப்பாய்த் தைத்துப் போட்டா லும் தகும்" என்றார் தீக்ஷிதர்.

தீக்ஷிதர் போனபிறகு லக்ஷ்மி உள்ளிருந்து வந்தாள். அவளுக்கு ஒரு புறம் சென்னைக்குச் செல்லவேண்டுமென்று ஆவல். மற்றொரு புறம், "இவ்வளவு நாளாய் வசித்த வீடு, மாடு, கன்று இவைகளைப் பிரிந்து போகிறோமே; அங்கே என்ன சௌகரியங்க ளிருக்குமோ, என்ன இராதோ?" என்று கவலை. என்ன செய்வது என்று தெரியாதவளாய்

"வருஷாந்தர சாமான்களை யெல்லாம் கொண்டுபோக வேண்டுமோ, இல்லையோ? பசுவையும் ஓட்டிப் போக லாமா?" என்றாள்.

பதஞ்சலி சாஸ்திரிகள் "உன்னுடைய பூனைக்குட்டி, நாய்க்குட்டி, மண் குமட்டி, குதிர் எல்லாவற்றையும்தான் கொண்டுபோனால் போகிறது. சுந்தரி! உன்னுடைய மரப் பாச்சி, ஆனைச்சோழி, மாக்கல், சியாமளத்தின் சொப்புக்கள் ஒன்றும் விடாமல் பத்திரப்படுத்திக்கொள். அடி குட்டி கல்யாணி! உங்க அகத்துக்காரருக்கு என்ன வேண்டுமோ அவைகளை யெல்லாம் எடுத்து ஒருவருக்கும் தெரியாமல் பெட்டிக்கடியில் போடு. ஓடு, ஓடு, சீக்கிரம்!" என்று கூறி விட்டு, "சூரியன் குஞ்சு சங்கதியாய் எதையாவது எடுத்து வைத்துவிடப் போகிறதுகள்" என்றார்.

"போங்கோப்பா! இதற்குத்தான் கூப்பிட்டீர்களாக் கும்!" என்று தலைகுனிந்த வண்ணம் தூண் ஓரமாய் நின் றாள் கல்யாணி.

லக்ஷ்மிக்கும் மற்றும் வீட்டிலுள்ளவர்கள் யாவருக்கும், இவ்வளவு நாட்களாய்ப் பழகிய வீடு வாசல்களையும், மனிதர் களையும் விட்டுச் செல்லவேண்டுமே என்று மிக வருத்தமா யிருந்தது.

# அத்தியாயம் 2

## கடற்கரை

**சா**யங்காலம் சுமார் ஐந்து மணியிருக்கலாம். மேரியாசி கலாசாலைக் கெதிரில் மணலில் முழந்தாள்களைக் கட்டிக்கொண்டு கடலை நோக்கியவண்ணம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார் பதஞ்சலி சாஸ்திரிகள். லக்ஷ்மி சற்றுத் தூரத்திலிருந்த பெண்களிடம் பேசிய வண்ணம் மணலைக் கைகளினால் அள்ளி அள்ளிக் கீழே போடுவதும், கலைத்துக் கலைத்து ஏதோ கோலம் போடுவதுமாயிருந்தாள். கல்யாணியும் மற்றக் குழந்தைகளும் அலையில் சென்று நிற்க வேண்டுமென்று பிடிவாதம் பிடிக்கத் தொடங்கின. சாஸ்திரியார் என்ன சொல்லுவாரோவென்று திரும்பி அவரை நோக்கினாள் லக்ஷ்மி. அவர் கண்மூடி மௌனியாய் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தார் என்பதைக் கண்டாள்.

கல்யாணி கடலோரம் சென்று அலைகள் வந்து கால்களில் மோதும்படி கரையில் நின்றுகொண்டிருந்த உற்சாகத்துடன் உடனிருந்தவர்களையும் அழைக்கலானாள். சுந்தரி, கல்யாணியை நோக்கி "என் அக்கா! அத்திம்பேர் சென்னப்பட்டணத்தில் விக்டோரியா ஹாஸ்டலில் இருக்கிறார் என்று சொல்லவில்லையா? இது சென்னப்பட்டணம் தானே? இங்கே காணோமே? என் நம்மாத்துக்கு வரவேயில்லை?" என்றாள்.

சுந்தரியின் வார்த்தைகள் கல்யாணியின் மனதைத் துன்புறுத்தின. "நாளை, நாளன்னறைக்கு வருவார். பேசாமலிரு" என்று அவள் தலையில் ஒரு குட்டுக் குட்டினாள். ஆனால் மனதிற்குள், "நாம் சென்னைக்கு வரு

கிருரென்று கடிதம் எழுதி யிருக்க, வீடு வாசல் பார்த்து ஏற்பாடு செய்யா விட்டாலும், ஊரில்கூட இராமல் எங்கேயோ போய் உட்கார்ந்திருக்கிருரே? நாளைக்காவது வர மாட்டாரா? குழந்தைகள் கேட்கும்பொழுது வெட்கமும் துக்கமும் உண்டாகிறதே!'' என்று எண்ணி வருந்தினாள்.

“என்னைக் குட்டுகிருயா? இரு, இரு. அத்திம்பேர் வரட்டும். சொல்லிக் கொடுத்து உன்னை அடிக்கச் சொல்லுகிறேன், பார்!'' என்று கூறிச் சுந்தரி கைகொட்டி நகைத்தாள்.

இதற்குள் யாரோ ஒரு பெரியவர் தொலையிலிருந்து கைகளைத் தட்டி, “பதஞ்சலி! பதஞ்சலி!'' என்று கூப்பிடுவது கேட்டது. சாஸ்திரியார் கண்விழித்துப் பார்த்தார். மேலகத்துச் சோமசுந்தரமையர் தமையன் கைலாசத்தின் மாமனுர் என்று தெரிந்து கொண்டவராய் எழுந்து சென்ருர்.

அருகில் சென்று “நமஸ்காரம். ஏது மாமா! இப்பொழுது பட்டணத்தில்தான் வாசமோ?'' என்ருர்.

“இல்லை, என் மருமான் பெண்ணுக்கு வரன் தேட வந்திருக்கிறேன். போனது போக இன்னும் நூறு வயது உனக்கு. நேற்றுச் சாயங்காலம்தான் நீ இங்கே வந்திருப்பது தெரிந்தது. முக்கியமாய் உன்னுடன் கொஞ்சம் தனிமையில் பேசவேண்டுமென்று நினைத்தேன். தேடப் போன மருந்து காலில் அகப்பட்டதுபோல் இங்கேயே பார்த்துவிட்டேன்.''

“என்ன, வரன் விஷயமாகவா? என் பையன் நாகுவுக்கு இப்பொழுது தானே பதினெட்டு வயது ஆகிறது?''

“அது தெரியாதா எனக்கு? இது வரன் விஷயமன்று. வேறு குடும்ப விஷயம். உன் க்ஷேமத்தைக் கோரித்தான்

சொல்ல வந்தேன். நீ நல்ல பிள்ளை. வித்தியாசமாய் ஒன்றும் நினைத்துக்கொள்ள மாட்டாயென்று தெரியும். ஆனால் நான் சொல்லப் போகும் விஷயத்தை மனதிலேயே வைத்துக்கொண்டு, நீயாகக் கவனித்துப் பார்த்து, நான் சொன்னது சரியா தப்பா வென்பதைக் கண்டு கொள். வேறு ஒருவருக்கும் தெரிய வேண்டாம்.''

"விஷயம் இன்னதென்று சொல்லாமல் பீடிகை பலமாய்ப் போடுகிறீர்களே. சுற்றி வளைக்காமல் நேராய் உடைத்துச் சொல்லி விடுங்களேன்.''

ஈசுவரய்யர் பின் வருமாறு சொல்லலானார் :—

"உன் மாப்பிள்ளைக்குச் சோழவந்தானில் கொஞ்சம் நிலம் இருந்ததே, தெரியுமா? அதையும் குருவித்துறை நிலத்தையும், கா. மு. ப. வ. வெள்ளையன் செட்டியாரிடம் அடகு வைத்து ரூ. 5,500 கடன் வாங்கி யிருக்கிறான். ஆளைப் பார்த்தால் எப்படி யிருக்கிறான் தெரியுமா? சாக்ஷாத் துரை மகன் தோற்றான். வாயிலே எப்போது பார்த்தாலும் சுருட்டு. கண்டால் சகிக்கவில்லை. இந்த லக்ஷணத்தில் இன்னொரு கூத்து வேறு. (அருகில் வந்து மெதுவாய்) எவளோ ஒருத்தி ஸினிமாவில் ஆடுகிறவளாம்; நம்ம தெற்கத்திக் கைம்பெண்டாட்டிதானும். மறுபடி தலைமயிர் வளர்த்துக்கொண்டு, குங்குமம் இட்டுக்கொண்டு, 'மிஸ் லீலா' வென்று பெயர் வைத்துக்கொண்டு திண்டாடுகிறாள். அவளோடுகூட உன் மாப்பிள்ளையும், மருங்காபுரி மைனரும் இன்னொரு காவாலியும் பீச் ரோட்டோடு வந்துகொண்டிருந்தார்களாம். மைனர் பூர்த்தியாய் மதுபானம் பண்ணினவன். எதிரில் வந்த ஒரு சட்டைக்காரன் காரோடு மோதி, கார் தவிடு பொடியாகி, அவனுக்கும் மைனருக்கும் ஏகக் காயமாம். இவன் குதித்தோடி வந்து ஹாஸ்டலில் ஒளிந்து கொண்டானும். பெரிய கேஸாய் வந்து அமர்க்கள

மாகி யிருக்கும். மருங்காபுரியான் ஆயிரம் ஆயிரமாய் வாரிக்கொட்டி விஷயம் வெளியே வராமல் அமுக்கி விட்டான். நீ (பாவம்!) தெய்வமேன்னு அடைத்துக் கிடக்கிறாய். பிள்ளையாண்டான் செய்தி இப்படி இருக்கிறது! நான் சொன்னதாக வெளியில் தெரியவேண்டாம். மேல் நடக்க வேண்டியவைகளைக் கவனித்துக் கொள். நான் வேறு என்ன சொல்லப் போகிறேன்?"

பதஞ்சலி சாஸ்திரியாருக்கு அடிவயிற்றில் இடி விழுந்தாற் போலாகிவிட்டது. என்ன செய்வது என்று தெரியாமல் தீயில் விழுந்த புழுப்போல் துடிக்கலானார். "லக்ஷ்மியிடம் சொல்லலாமா? வேண்டாமா? கல்யாணிக்குத் தெரியக்கூடாது" என்று பலவிதமாய்த் தமக்குத் தாமே ஆக்ஷேப சமாதானங்கள் சொல்லிக்கொண்டார்.

* * * *

அன்றிரவு பதஞ்சலி சாஸ்திரிகள் தூக்கம் பிடிக்காமல் எண்ணமிட்டவராய்ப் படுக்கையில் புரண்டுகொண்டிருந்தார். சேஷிப் பாட்டி கூடத்தில் விசுப்பலகையின்மீது படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தாள். லக்ஷ்மி, சமையலறையைச் சுத்தம் செய்துவிட்டு, குழந்தைகளை ஒழுங்காய்ப் படுக்க வைத்து, போர்வையைப் போர்த்திவிட்டு, வெற்றிலைத் தாம்பாளத்துடன், "அப்பாடா!" என்று சொல்லியவண்ணம் கட்டிலுக் கருகில் கீழே கால்களை நீட்டிக்கொண்டு உட்கார்ந்தாள்.

அவள் வெற்றிலையை மெல்லும் வரையில் காத்திருந்த சாஸ்திரிகள் தணிந்த குரலில், "கல்யாணி தூங்கிவிட்டாளா? நாகுவும், சுந்தரியும் தூங்கிவிட்டார்களா?" என்றார்.

"அடாடா! ஏது இவ்வளவு அக்கறையாய் விசாரிக்கிறீர்கள்? சாயங்காலம் முதல் ஒரு மாதிரியாய் இருக்கிறீர்களே, ஏன்? உடம்பு சரியாயில்லையா?" என்றாள் லக்ஷ்மி.

"உடம்பு சரியாகத்தானிருக்கிறது. மனஸுதான் சரியா யில்லை. அந்தக் கதவைச் சாத்து. நாம் பேசுவது கல்யா ணிக்குக் காது கேட்கப் போகிறது" என்றார்.

லக்ஷ்மி எழுந்து கதவை மூடும்பொழுது, எண்ணெ யிடப்பட்டு நாளானதாகையால் 'கிரீச்' என்று சத்தம் உண்டாயிற்று. இவள் அதைக் கவனியாமல் கதவை மூடி விட்டு வந்து உட்கார்ந்தாள்.

அரைத் தூக்கமும் விழிப்புமாயிருந்த கல்யாணியின் காதில் இவர்கள் வார்த்தை சொப்பனத்தில் கேட்பதுபோல் தோன்றிற்று. கதவு கிரீச்சிட்டதில் நன்றாய் விழித்துக் கொண்டு கதவின் அருகே போய் நின்றுகொண்டு உள்ளே பேசுவதைக் கவனித்தாள்.

ஊர் ஓசை அடங்கிவிட்டது. நெடுந் தூரத்திலிருந்த மாதாகோயில் மணி டாங் டாங் என்று பன்னிரண் டடித் தது. சாஸ்திரி இன்னது சொல்வது, இப்படி ஆரம்பிப்ப தென்று தோன்றாதவராய்ச் சிறிது நேரம் தயங்கிச் சும்மா இருந்தார். பிறகு ஒருவாறு ஆரம்பித்தார். அவர் கூறிய வார்த்தைகள் கல்யாணியின் காதில் நன்றாய் விழுந்தன. "சாயங்காலம் பீச்சில் ஈசுவரய்யர் வந்திருந்தாரே, அவர் உன் மாப்பிள்ளையைப் பற்றிய வள்ளல்களை யெல்லாம் சொன் னார். ஈசுவரய்யர் நல்ல மனுஷ்யர்; வீணாய்ப் பொய்சொல் லக் கூடியவரன்று. நம்முடைய துரதிருஷ்டத்துக்கு யாரென்ன செய்வார்கள்? நீயும்தான் 'ஆனை, குதிரை, இந்தி ரன், சந்திரன்' என்று பெருமை யடித்துக் கொண்டாய். எந்த மூதேவிகளின் வார்த்தையையோ கேட்டுக்கொண்டு அழுகக் குழியிலே காலை வைத்தாய் விட்டது. இனிமேல் என்ன செய்வது? 'மாப்பிள்ளைக்கு அது தெரியும், இது தெரி யும்' என்று பெருமையடித்துக் கொண்டாய். அந்த அழகு போல் தானிருக்கிறது. ஐயர்வாளுக்குச் சுருட்டுக்கூடக் குடிக்

கத் தெரியுமாம். தாசித் தெருவுக்குப் போகக்கூடத் தெரியுமாம். அடாடா! என்ன அற்புதமான மாப்பிள்ளை வந்துவாய்த்ததடி. அம்மா! கேட்கக் கேட்க உடம்பு ஒரு சாணாய்க் குன்றிப் போகிறது. சாதாரணமா யிருக்கிறவனா யிருந்தால் நாம் சென்னைக்கு வருகிறோமென்று தெரிந்தும் வெளியூருக்குப் போவானா? என்ன கர்மமோ, என்னமோ?" என்று சொல்லி மருங்காபுரி மைனர் சம்பவத்தைப் பற்றித் தாம் கேள்விப்பட்டதைக் கூறினார்.

லக்ஷ்மிக்கு ஒன்றுமே விளங்கவில்லை. ஆச்சர்யத்துடன், "என்ன! உண்மையா யிருக்குமா? இந்த மாதிரி சங்கதிகளை யெல்லாம் கேட்பார் பேச்சைக் கேட்டு நம்ப முடியுமா? ஈசுவரய்யர் வகையராவில் யாருடனாவது இவனுக்கு மனஸ்தாபம் ஏற்பட்டிருக்கலாம். அதனால் இப்படிச் சொல்லி மித்ரபேதம் பண்ணுகிறாரோ, என்னமோ? யார் குணம் எப்படி என்பதை நாம் எப்படி நிச்சயமாய் நம்பலாம்?" என்றாள்.

"உனக்கு எல்லாம் சந்தேகம்தான். என்னதான் விரோதமா யிருந்தாலும், தேடிப் பிடித்து ஒருவனைப் பற்றி நிந்திக்கக் கூடியவர் ஈசுவரய்யர் அல்ல" என்றார் சாஸ்திரி.

"விடிந்தால் தெரிகிறது மாப்பிள்ளை சமர்த்து. அதற்குள் நாம் வாதம் செய்வானேன்?" என்று பெருமூச்செறிந்தாள் லக்ஷ்மி.

கல்யாணி எல்லாவற்றையும் கேட்டுக்கொண் டிருந்தாள். என்ன செய்வாள், பாவம்! ஆடிக்காற்றில் அகப்பட்ட துரும்புபோல் அவள் மனம் தத்தளித்தது. இருதயம் படபடவென்றடித்துக் கொண்டது. அழுது அழுது தலையணை ஒரே தெப்பமாய் நனைந்துவிட்டது. தான் எவ்வளவோ மனக் கோட்டைகள் கட்டி யிருந்ததையும், ஒரு கணத்தில் அவை யாவும் தரை மட்டமானதையும் நினைக்க நினைக்க

அவள் இருதயம் படீர் படீர் என்று சம்மட்டி கொண்டடிப் பதுபோல் அடிக்க ஆரம்பித்தது. புரண்டு புரண்டு படுப்பதும், எழுந்து உட்காருவதும், மறுபடி படுத்துக் குமுறிக் குமுறி அழுவதுமாய்த் தவிக்கலானாள்.

நள்ளிரவு. தூங்காமல் தனியே விழித்திருக்கவும் அஞ்சி, தவித்துத் தத்தளித்தவளாய், அம்மாவை எழுப்புவோ மென் றெண்ணி எழுந்தாள். எழுப்பினால் ஏதாவது காரணம் சொல்ல வேண்டுமே? "விஷயத்தை நாம் தெரிந்து கொண்டதாகவே காண்பித்துக் கொள்ளவேண்டாம். என்ன நடக்கிறதோ பார்ப்போம். எப்படியும் நாளை, நாளனன்றைக் காவது வராமல் போகிறாரா?" என்று எண்ணமிட்டவளாய் மறுபடியும் படுக்கையில் படுத்தாள்.

கூடத்திலிருந்த கடிகாரம் நான்கு மணி அடித்தது. "சரி, நான்கு மணி யாகிவிட்டதா? இனிமேல் தூக்கம் வருமா? நாளைக்காவது அவர் வந்துவிடலாகாதா? வந்து ஏதாவது மனம் அமைதி அடையும்படி சமாதானம் சொல்ல மாட்டாரா?" என்று எண்ணியவண்ணம் கண் அயர்ந்தாள்.

* * *

காலை மணி ஏழு. பதஞ்சலி சாஸ்திரியார் காலைக்கடன்களை முடித்து விட்டு வாசல் தாழ்வாரத்தில் உலாவிய வண்ணம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். ஒரு சிறுவன் சைகிளில் வந்து "பனங்குடியிலிருந்து வந்திருக்கிறார்களாமே. இந்த வீடுதானா?" என்று கேட்டான்.

இவர் "ஆம்" என்றதும், "உங்கள் மாப்பிள்ளை கடிதம் எழுதி உங்களுக்குக் கொடுக்கும்படி கூறி யிருக்கிறார்" என்று சொல்லி ஒரு கவரை நீட்டினான். சாஸ்திரி மிகுந்த ஆவலுடன் அதை வாங்கிப் பிரித்து படிக்கலானார்:—

" மாமா அவர்களுக்குக் கோபாலன் சாஷ்டாங்க நமஸ்காரம். உபயக்ஷேமோபரி. உங்களுடைய விலாசம் சரியான

படி தெரியாததனால் என் நண்பனுக்கு இக் கடிதம் அனுப்பி உங்களிடம் சேர்ப்பிக்கச் சொல்லி யிருக்கிறேன். கல்யாணி யும் மற்ற குழந்தைகளும் சுகமென்று நம்புகிறேன். என் சிநேகிதன் சங்கரனுக்கு பெரியம்மை போட்டிருந்ததினு லும், ஹாஸ்டலில் இருக்கமுடியாததினாலும், கார்பொரே ஷனுக்குத் தெரிந்தால் தொத்துநோய் ஆஸ்பத்திரிக்கு அழைத்துபோய் விடுவார்களாதலாலும் அவன் திருக்கழுக் குன்றத்திலிருக்கும் தன் தாய் தந்தையரிடம் சேர்த்துவிடும் படி மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். அவனை டாக்ஸி வைத்து இங்கே அழைத்துக் கொண்டு வந்தேன். நானும் மற்றவர்களும் மறுபடி அம்மை குத்திக்கொண்டிருக் கிறோம். என்னைப்பற்றி நீங்கள் கவலைப்படவேண்டாம். நான் இன்னும் இரண்டு நாளில் அங்கே வந்து சேருகிறேன். மாதுஸ்ரீ பாட்டி அவர்களுக்கும் மாமி அவர்களுக்கும் நமஸ் காரம். குழந்தைகளுக்கு என் அன்பான முத்தம். வேணும், அநேக நமஸ்காரம்.

இப்படிக்கு,
கோபாலன்."

படித்து முடிந்ததும், "அயோக்யப் பயல்! வரட்டும் சொல்லுகிறேன்! என்ன துணிச்சல்! என்ன ஸாகஸம்!" என்று தமக்குள்ளேயே முணுமுணுத்துக்கொண்டார். ஆனா லும் கல்யாணிக்கும் பாட்டிக்கும் ஒரு சமாதானமாக இருக் கட்டும் என்று மனதிலெண்ணி "அம்மா, கல்யாணி! இந்தா, மாப்பிள்ளை கடிதம் எழுதியிருக்கிறார். பாட்டிக்குப் படித் துக் காண்பி" என்றார்.

சாஸ்திரியார் தம் புதல்வன் நாகராஜனைத் தனிமையி லழைத்துத் தாம் கேள்விப்பட்டவைகளைச் சுருக்கமாய்க்கூறி, "அடே நாகு! எதற்காக உன்னிடம் இவைகளைக் கூறினேன்

தெரியுமா? நீ இன்னுனென்பதைக் காண்பித்துக்கொள்ளா மல் இரண்டு மூன்று நாட்களுக்குள் எனக்கு உண்மையான தகவல்களைத் தெரிவிக்கவேண்டும். இந்த விஷயத்தை உன் பொறுப்பில் விட்டுவிட்டேன். நீ யாரைப் பார்ப்பாய், என்ன செய்வாய் என்பது எனக்குத் தெரியாது. அவன் வருமுன் அவனைப்பற்றிய தகவல்கள் ஊசிமுனைகூட விடாமல் எனக் குத் தெரிந்தாகவேண்டும். உன் புத்திக்கு எப்படிச் செய் வது உசிதம் என்று படுகிறதோ அப்படிச் செய். அந்தக் குழந்தையின் க்ஷேமத்தை உத்தேசித்து நீ இதைச் செய்யக் கடமைப்பட்டவன், என்ன? நான் சொல்வது புரிந்ததா?" என்றார்.

## அத்தியாயம் 3

# மாப்பிள்ளை வருகை

அன்று வெள்ளிக்கிழமை. கல்யாணியும் சுந்தரியும் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்துவிட்டுத் தோட்டத்தில் ஏதேதோ பேசியவண்ணம் தலையை ஆற்றிக்கொண்டிருந்தனர். வாசலில் மோட்டார்கார் 'பம் பம்' என்று சப்தித்தது. பக்கா ஆங்கிலேயரைப்போல் உடை உடுத்திருந்த மாப்பிள்ளை மோட்டாரிலிருந்து கீழே இறங்கினார். "அக்கா! அக்கா! அத்திம்பேர் வேஷம் போட்டுக்கொண்டிருக்கிறார்!" என்று கத்தினாள் சியாமளி. சிரித்த முகத்துடன் கோபாலன் உள்ளே நுழைந்தான்.

சாஸ்திரியார் மனத்துள் பொங்கியெழுந்த கோபத்தை வெளிக்காட்டாதவராய், "வாருங்கள்! வாருங்கள்! உட்காருங்கள்!" என்று உபசரித்தார். "வாடாப்பா, திடமாயிருக்கிறாயா?" என்று கேட்டுக்கொண்டு சேஷியம்மாள் வந்தாள்.

"அம்மா! கல்யாணம்! மாடி அறையில் மாப்பிள்ளையின் சாமான்களை வைக்கச்சொல்லு. அங்கே இருந்த படுக்கைகளையெல்லாம் எடுத்தாய்விட்டதா? போட்டது போட்டபடி கிடக்கின்றதா?" என்று சாஸ்திரியார் கூறி, மாப்பிள்ளையைப் பார்த்து, "பல் தேய்த்தாய்விட்டதா? காப்பி கொண்டு வரச் சொல்லட்டுமா?" என்றார்.

"வேண்டாம், ஸ்டேஷனிலேயே காப்பி சாப்பிட்டாய் விட்டது. கொஞ்சம் குளிர்ந்த ஜலமட்டும் போதும்" என்றார் மாப்பிள்ளை துரை.

இதற்குள் சேஷியம்மாள் அவனுடைய உடல் நலத்தைப் பற்றியும், சென்னையிலுள்ள சௌகரிய அசௌகரி

யங்களைப் பற்றியும் விசாரிக்க ஆரம்பித்தாள். இதுதான் தருணமென்று சாஸ்திரிகள் நழுவி விட்டார்.

கல்யாணி பெரியோர்கள் முன்னிலையில் தன் சணவனுடன் பேசும் வழக்கமில்லாதவளாகையால், அவர் எப்பொழுது மாடிக்கோ, இரண்டாங்கட்டிற்கோ வரப் போகிறாரென்று ஆவலுள்ளவளாய், இடைக்கட்டு வாசல்படிக் கருகில் நின்று எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள். பாட்டிக்கும் கோபாலனுக்கும் நடந்த சம்பாஷணை முடிய சுமார் ஒரு மணியாயிற்று. அதன் பிறகு மாப்பிள்ளை மாடிக்குச் செல்ல, "அத்திம்பேரே, இதென்ன வேஷம், துரை வேஷமா?" என்று கேட்டுக்கொண்டு கூடவே மாடிப்படி ஏறினாள் சியாமளி. ஏது தருணமென்று காத்திருந்த கல்யாணி கையில் காப்பிக் கூஜாவுடன் பாதசரங்கள் கல்லென்று ஒலிக்க மாடிக்குச் சென்றாள்.

கோபாலனைக் கண்ட உடன் இன்னது பேசுவதென்றறியாமல் துக்கம் நெஞ்சை அடைக்க தாரை தாரையாய்க் கண்ணீர் சொரிந்தாள் கல்யாணி.

"ஏன் அழுகிறாய்?" என்று மிகப்பரிவான குரலுடன் கேட்டான் கோபாலன். கல்யாணி வாயே திறக்கவில்லை. என்ன பேசுவது, எப்படி ஆரம்பிப்பதென்று தெரியாமல் திகைக்கலானாள்.

"என்ன, கல்யாணி! என்மேல் கோபமா? பேசாதிருக்கிறாயே? நீ வரும்பொழுதே ஸ்டேஷனுக்கு வந்து எதிர்கொண்டு வரவேற்க வில்லையே என்று வருத்தமா? இவ்வளவு நாள் எங்கேயோ போய்விட்டு மெதுவாய் வந்தேனே என்று கோபமா?" என்று கோபாலன் கொஞ்சிய குரலில் கேட்டான்.

அவனை எதிரில் கண்டு, அவனது 'பசப்பல்' வார்த்தைகளைக் கேட்டதும், கல்யாணி மயங்கி விட்டாள். அவளை

எளிதில் ஏமாற்றக் கூடுமென்பதைக் கண்டு கோபாலன், "என் கடிதம் கிடைத்திருக்குமே. நீ பார்க்க வில்லையா? அல்லது மாமா உனக்குச் சொல்லவில்லையா? என்னுடைய நிலைமை அக் கடிதத்திலிருந்து உனக்குத் தெரிந்திருக்குமே. இத்தகைய சந்தர்ப்பங்களில் பிறருக்கு உதவி செய்வது பெரிதா? அல்லது, 'பெண்டாட்டி யாத்தே பெரியாத்தே' என்று சிநேகிதனைக் கைவிட்டுவிட்டு உன்னைக் காண வரு வது பெரிதா? நீயே சொல். எனக்கே எப்பொழுதடா வரப்போகிறோம், உன்னைப் பார்க்கப் போகிறோமென்று துடித்துக் கொண்டிருந்தது—கடவுளுக்குத் தெரியும். நீ ஏதோ இப்பொழுது புதுப் பெண்போல் பேசுவதற்குக் கூட பலே கிராக்கி பண்ணிக் கொள்கிறாய்" என்றான்.

கல்யாணி வெளுத்ததெல்லாம் பால் என்று எண்ணக் கூடியவள். கொஞ்சம் கொஞ்சமாய் அவன் மந்திரம் தலைக் கேற, அவன்மீது அதுகாறும் தோன்றிய சந்தேகங்கள் அனைத்தும் பஞ்சாய்ப் பறந்தன. "ஆகா! இத்தகைய நற் குணமுள்ள புருஷனைக் கண்டபடி நிந்திக்கிறார்களே!" என்றெண்ணியவளாய், "பேசாமலென்ன, எனக்கென்ன கிராக்கி வந்திருக்கிறது? என்ன பேசுவதென்றே தோன்ற வில்லை. சந்தோஷத்தினால் நெஞ்சு அடைத்துவிட்டது. எப்படியாவது உடம்பு ஒன்றுமில்லாமல் வந்து சேரவேண் டுமே என்றுதான் தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தேன். எதைப்பற்றிக் கேட்பதென்று எனக்கே தெரியவில்லை. தாயார், தகப்பனார், தங்கை, தமக்கை, யாராவது ஒருவரிருந் தால் அவர்களுடைய யோக க்ஷேமத்தை விசாரிப்பேன். அதுதான் ஒருவருமில்லை. உங்கள் நண்பர்களுக்குப் பரீக்ஷை தேறுமா என்று கேட்கட்டுமா?" என்றாள்.

இதற்குள் "ஸார், ஸார், மிஸ்டர்!" என்று நாகராஜன் கூப்பிடும் குரல் கேட்டது. கல்யாணி அவசரமாய்க் கீழே

வர எதிரே வந்துகொண்டிருந்த நாகராஜன்மேல் மோதிக் கொண்டாள்.

"ஓகோ! ஒன்றும் தெரியவில்லை போலிருக்கிறது.

'உச்சி குளிர்ந்ததடீ—சகியே—உடம்பு நேராச்சு
மச்சிலும் வீடும் எல்லாம் முன்னைப்போல்—
மனதுக்கோத்ததடீ!

என்று பாடத்தொடங்கினான். கல்யாணி நாணத்தால் முகம் சிவக்க, "போ அண்ணா! என்னைப் பரிகாசம் செய்யாவிட்டால் உனக்குத் தூக்கம் வராது என்று சொல்லிக்கொண்டே மாடிப்படியினின்றும் குதித்தோடினாள்.

கூடத்திலிருந்த பாட்டி, "நன்றாயிருக்கிறது, பெண்ணை வளர்த்திருக்கிற சவரணை! ஊரார் பிள்ளை மாடிமேலிருக்கிறானென்று கொஞ்சமாவது பயம், அச்சம் ஒன்றுமில்லாமல் முதுகுப் புடவையைத் திறந்துகொண்டு குந்தாணிபோல் மாடிப் படியிலிருந்து ஓடுகிறாளே! அதிசயமடி ஆவடை, கொதிக்கிற கஞ்சி சிரிக்கிறது!" என்று ஜபமணியை உருட்டியபடி கூறினாள்.

*   *   *   *

அன்றிரவு சாப்பிடும்பொழுது கோபாலன் மெதுவாய்ச் சீமைக்குப்போவதைப் பற்றிப் பேச்சு எடுத்தான். அதற்கு சாஸ்திரிகள், "எங்களுக்கெல்லாம் இஷ்டம் இல்லை. இங்கேயே மெடிகல் காலேஜிலோ, லா காலேஜிலோ சேருவதுதான் நலம். ஏதோ இருக்கிற சொத்தை வைத்துக்கொண்டு, சொற்ப வருமானம் வந்தாலும் போதும். சுகமாயிருக்கலாம். சீமைக்குப் போன உடனே என்ன பிரமாதமான பதவி வந்துவிடப் போகிறது? சாமர்த்தியமிருந்தால் அதே வருமானத்தை வேறு தொழில் செய்து சம்பாதிக்க முடியாதா? இருக்கிறபடி

ஒழுங்காயிருந்தால், எங்கேயும் முன்னுக்கு வரலாம். தூர தேசம், காலைத் தலையை வலித்தால் கிட்டவா, முட்டவா? எல்லாவற்றையும் பார்த்தால் சீமைக்குப் போவது அவ்வளவு உசிதமாய்த் தோன்றவில்லை. 'என்னிடம் பணமிருக்கிறது; நான் அப்படித்தான் போவேன், உமக்கென்ன ஐயா!' என்று கேட்டால், அதற்குமேல் பேச நான் தயாராயில்லை. தோளுக்கு மிஞ்சினால் தோழன். எனக்குத் தோன்றியதைச் சொல்லி விட்டேன். பிறகு அவரவர்கள் இஷ்டம்" என்று கூறினார்.

பாட்டியும், "என்னமோ, ஜில்லா கலெக்டர் என்றால் பெருமைதான். ஆனாலும், பறையனோடு பறையனாய் மூன்று வருஷம் இருக்கவேண்டுமாமே. நடுவிலே வருகிற திவசம், திங்கள், நல்லது, பொல்லாதது எல்லாம் கோவிந்தார்ப்பணம் தான். ஆயிரம் ஆயிரமாய்ச் சம்பாதித்தாலும் சீமைக்குப் போனால் இளப்பம்தான்" என்றாள்.

"உங்கள் ஊர் லக்ஷ்மண கனபாடிகள் பேரன் சீமைக்குப் போய்விட்டு வந்தானே. அவனை யார் 'பிரஷ்டம்' செய்தார்கள்? உங்காத்து நிமந்தரணத்துக்குக்கூட அவன் தகப்பனாரைச் சொல்வதில்லையா? அவன் போகலாம்; நான்போகக் கூடாதா?" என்று கேட்டான் கோபாலன்.

"அவன் போகும்பொழுது பம்பாய் வழியாய்ப் போனான். வரும்பொழுது கொளும்பு வழியாய் வந்து, பிராயச்சித்தம் பண்ணி, புனருபாயனம் செய்து, விடுபட்டுப் போன சிராவணம், சிராத்தம், தர்ப்பணம் எல்லாவற்றையும் செய்து, குடுமி வைத்துத்தான் ஊருக்கழைத்துக்கொண்டு வந்தார்களாம்" என்றாள் சேஷியம்மாள்.

"ஏன், அதே மாதிரி நாமும் செய்து விட்டால் போகிறது" என்றான் கோபாலன்.

"கும்பகோணத்தில் ஒருவன் சீமைக்குப் போனான். அவர்கள் வீட்டுத்திவசத்திற்கு ஒருவரும் சாப்பிட வரவில்லை.

வெள்ளிச் சொம்பும் ஒரு சவரன் தக்ஷிணையும் என்று விளம்பரப் படுத்தினுன். வந்து விட்டார்கள். 'ரஜத மயம் பாத்ரம்' என்று அவர்கள் சாப்பிடும் வரையில் பார்த்துப் பார்த்து ஆனந்தப்பட்டதுதான் மீதி. போகும்பொழுது சேவகனை விட்டு எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டானும்'' என்றான் நாகராஜன்.

"நாகு! போதும் உன் பிரசங்கம். வர வரப் புத்தி உலக்கைக் கொழுந்தும் குந்தாணி வேருமாகிறது. பெரியவர்களையும் சாஸ்திரத்தையும் நிந்திக்கலாகாது. ஏவனோ நூற்றுக்கொருவன் துஷ்டனு யிருக்கலாம். அதுவா உதாரணம்?'' என்றாள் பாட்டியம்மாள்.

"உதாரணம் சொல்லவில்லை. இந்தக் காலத்தில் சீமைக்குப்போவது சர்வசாதாரணம். நீ வீணுய்ப் பயப்படவேண்டிய அவசியமே இல்லை. சீமைக்குப் போய் வந்தவனை ஒருவரும் பகிஷ்கரிக்கவுமில்லை. அதெல்லாம் மலையேறி வெகு நாளாய் விட்டது'' என்றான்.

சாஸ்திரி ஒரு வார்த்தையாவது சொல்லவில்லை. நாகு கோபாலனிடம் ஏதோ தெரிந்து கொள்வதன்பொருட்டு அவனுக்கு அனுகூலமாய்ப் பேசுவதாக ஊகித்துக்கொண்டு சும்மா இருந்தார்.

* * * *

சிறுபெண்களுக்கு யாரிடம் என்ன சொல்லலாம், எதைச் சொல்லக் கூடாதென்று தெரிகிறதில்லை. முதலில் அன்பின் மிகுதியினால் கணவரிடத்தில் எது அவசியம், எது அனுவசியம் என்பதைக்கூட யோசியாமல் பிறந்த வீட்டைப்பற்றியும் தெரிவிக்கவேண்டாத குடும்ப விஷயங்களைப்பற்றியும் சொல்லி விட்டு, பிறகு அதனால் பெரிய பெரியசண்டைகளும், சச்சரவுகளும் நேரிடும்பொழுது என் சொன்னேமென்று வருந்துவது உண்டு. கல்யாணி அத்தகைய பெண்தான். அன்றி

ரவே கோபாலனைப்பற்றித் தன் தகப்பனார் கேள்விப்பட்ட வைகளையெல்லாம் ஒன்றுவிடாமல் ஒப்புவித்து விட்டாள்.

கோபாலனோ ஒருவிதத்தில் திகிலடைந்தானானாலும் கபடமற்ற அவ்விளஞ்சிறுமியை எளிதில் வஞ்சித்துத் தனது காரியத்தைச் சாதித்துக்கொள்ளலாமென்று தீர்மானித்தவனாய், "என்ன, கல்யாணி! அவர்கள்தான் முட்டாள்தனமாய் உளறினாலும் நீயுமா இதை நம்பினாய்? அட கிரகசாரமே! நான் உன்மேலே வைத்திருக்கும் பிரேமையின் அளவை நீ அறியவில்லை. உன்னை எப்பொழுது காணப்போகிறோமோ வென்று தவியாய்த் தவித்திருந்தது எனக்குத் தெரியும். நீங்களோ ஊரிலிருக்கின்ற வீண் வம்புக்காரர்களுடைய வார்த்தையை நம்பியதுமன்றி என்னையும் சந்தேகிக்கிறீர்கள். உங்களுக்கு வேண்டுமானால் நாளைக்கே என் சிநேகிதன் பார்த்தசாரதி, குலசேகரன் எல்லோரையும் அழைத்து வருகிறேன். நீங்களே நேரில் எல்லாவற்றையும் விசாரித்துக் கொள்ளுங்கள். என்னைப் பற்றி இவ்வளவு உயர்ந்த அபிப்பிராயம் வைத்துக் கொண்டிருக்கும் உங்கள் வீட்டு வாசல்படி ஏறிவந்ததே பிசகு. அதிலும் சாப்பிடும்பொழுது உன் தகப்பனார் என்னை அவமானப் படுத்திய பிறகு இங்கே நான் இருக்கவே கூடாது. சீமைப் படிப்புக்குப் பணம் கொடுப்பதாய்ப் பெருமை பேசினாரே; அபிப்பிராயம் எப்படி யிருக்கிறது பார்ப்போமென்றுதான் ஆரம்பித்தேன். அதற்குத்தான் முதலிலேயே முட்டுக்கட்டை போட்டுவிட்டார். இந்த ஆயிரம், இரண்டாயிரம் யாரைக் கேட்டாலும் கிடைக்கும். நான் வாயை அசைத்தால் போதும்; கொடுப்பதற்கு எவ்வளவோ பேர் காத்திருக்கிறார்கள். இப்பொழுது இவ்வளவு பேசுகிறாரே, இவர் தயவில்லாமலே நான் போய்வந்து கலெக்டர் வேலையிலிருந்தால் 'என் மாப்பிள்ளை, ஐ. ஸி. எஸ்.,

ஆனே, பூனே' என்று பெருமை யடித்துக் கொள்ளமாட்டாரா? இந்தக் கதைகளெல்லாம் ஒருவரும் சொல்லியிருக்க மாட்டார்கள். பணங் கொடுக்காமலிருக்க ஒரு சாக்கு. இல்லாவிட்டால், நீயும் உன் தாயாரும் பணங் கொடுக்கும்படி வற்புறுத்துவீர்கள். அதற்காக இந்தக் கதையைத் தாமே கற்பித்துக்கொண்டு 'ஈசுவரய்யன், விஷ்ணுவயன்' என்று புருடை விடுகிறார். பணங்குடியாரே மகா கருமிகள். அறுந்த விரலுக்குச் சுண்ணும்பு கொடுக்காத மகாப் பிரபுக்கள்" என்றான்.

கல்யாணிக்கு ஒன்றுமே தோன்றவில்லை; அவர்கள் சொல்வதைக் கேட்டால் அதுவே உண்மையென்று தோன்றுகிறது; இவர் சொல்வதைக் கேட்டால் இதுதான் உண்மை போலிருக்கிறது. எதை நம்புகிறதென்று விளங்காமல் திகைத்தாள்.

அப்பொழுது கோபாலன் இதுதான் அவளைப் பின்னும் ஏமாற்றக்கூடிய தருணமென்று கண்டுகொண்டவனாய், தலை குனிந்திருந்த அவள் முகத்தை மெதுவாய் நிமிர்த்தி முன்னெற்றியில் புரளும் கூந்தல் சுருள்களைத் தன் கையினால் கோதியவண்ணம் "கல்யாணி! நீ ஏன் வீணாய் மனதைப் புண்படுத்திக் கொள்ளுகிறாய்? இவ்வளவு விஷயங்களும் தெரிந்த பிறகு ஒரு விநாடி கூட இங்கே தங்குவதற்கு எனக்கு இஷ்டமில்லை. ஆனாலும் எல்லாவற்றையும் சகித்துக்கொண்டு, நான் போய்விட்டால் உன் மனம் நோகுமோ என்றஞ்சி இங்கேயே இருப்பதாய்த் தீர்மானித்து விட்டேன். அப்படியிருக்க, நீயாக ஏன் உன் மனதைப் புண்படுத்திக் கொள்ளுகிறாய்? சொல்லு" என்று மிகவும் கொஞ்சலாய்க் கேட்டான். கல்யாணியின் கன்னங்கள் குழிந்தன. மாசற்ற வதனத்தில் இளநகை அரும்பிற்று.

## அத்தியாயம் 4

# சுருவியாண்டி.

**ப**கல் மூன்று மணி யிருக்கும். சாய்வு நாற்காலியில் படுத் திருந்த சாஸ்திரியார் கண்விழித்துச் சோம்பல் முறித் துக்கொண்டு, "அடியே லக்ஷ்மீ! என்ன செய்துகொண் டிருக்கிறாய், காப்பி ஆயிற்றா?" என்றார்.

லக்ஷ்மி ஒரு செம்பில் தண்ணீரும் ஒரு கூஜாவில் காப் பியும் எடுத்து வந்தாள். சாஸ்திரிகள் முற்றத்திலேயே வாய் கொப்பளித்து விட்டு, சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து, காப்பியை ருசிபார்த்து, "ச்சூ! டிகாக்ஷன் குறைவு" என்று மதிப்புரை கூற, "இன்னும் கொஞ்சம் கொண்டு வரட் டுமா?" என்றாள் லக்ஷ்மி.

மலையாளத்தார் சொல்வதுபோல் 'ஒண்ணாந்தரமாய்'த் தானிருந்தது அன்று காப்பி. ஏதாவது கோளாறு சொல்லா விட்டால் லக்ஷ்மி தன் வேலைகளைக் கருத்துடன் செய்யமாட் டாள் என்பது சாஸ்திரிகளின் அபிப்பிராயம்.

"என்ன செய்தாலும், எவ்வளவு நன்றா யிருந்தாலும் இவர் குற்றம் சொல்லாமல் இருக்கமாட்டார். இவர் வார்த் தைக்கு மதிப்பே கிடையாது" என்று தானே சொல்லிக் கொள்வாள் லக்ஷ்மி.

"மாப்பிள்ளை எதற்கு அப்ளிகேஷன் போடப் போகி றானும், கேட்டாயா?" என்றார்.

"ஏன்? நீங்கள்தான் கேட்கிறதுதானே? அவன் பேசாவிட்டால் கிடக்கிறான். நாகுவையாவது கேட்கச் சொல்லக் கூடாதோ? அவள்தான் அல்லி அரசாணி. நாம் கேட்டாலும் ஒன்றும் சரியாய்ச் சொல்லுவதில்லை" என்று

சொல்லிக்கொண் டிருக்கையில், பழைய பாக்கிக்காரனுன சுருளியாண்டித்தேவன் வெற்றிலை பாக்கு மென்றவண்ணம் வந்து நுழைந்தான்.

"சாமி, தண்டம்! நீங்க இங்கே வந்த சங்கதி தெரியாமல் நான் பனங்குடிக்குப் போய் அலைஞ்சு திரிஞ்சு, அங்கே காரியம் பார்க்கற ஐயாவை விலாசம் கேட்டுக்கிட்டு, இங்கே வந்தேன்" என்று சொல்லிக் கும்பிட்டான்.

"சரி, எப்பொழுது வந்தாய்? காப்பித்தண்ணி குடித்தாயா? சோறு தின்றாயா?" என்றார்.

"நேத்து ரயில் ஏறினது. இன்னும் பச்சைத்தண்ணி பல்லிலே குத்தலை. காலையிலேயே வண்டி வந்திடிச்சு. திக்குத் திசை தெரியாமல் அலைஞ்சுவிட்டு வந்தேனுங்க" என்றான்.

"அடியே, முதலில் இவனுக்குக் கொஞ்சம் பழையது இருந்தால் போடு. இல்லாவிட்டால் காப்பியாவது கொடு" என்றார்.

"சோறு வேண்டாம், சாமி. காப்பித்தண்ணி போதுமுங்க. தலையை உடைக்குது. நான் எழுதிக் கொடுத்த நோட்டு காலாவதி யாகுதல்ல? அதான் இந்தத் தடவை பணத்தையும் கொடுத்துட்டு, சாமியையும் கண்டுகிட்டுப் போலா மின்னு வந்தேனுங்க. தம்பி மாயாண்டி 'இஜிஷ்டர்' பண்ணலா மின்னானுங்க. அது என்ன கழுதையோ, நம்பளுக்கு வளக்க மில்லிங்க. சாமியாப் பார்த்து அடமானங் கூட இல்லாமல் நம்பிக் கொடுத்ததாச்சே. கொண்ணாந்து ஒப்பிக்கா போனு அந்தக் கருப்பனுக்கு வகை சொல்லவேண்டாம்? சாமி கையிலே ஒப்பிச்சு நோட்டை வாங்கிக் கிளிச் செறிஞ்சாத்தான் தூக்கம் வருங்க" என்று சொல்லி மூட்டையை அவிழ்க்கலானுன்.

எப்பொழுதுமே இரும்புப் பெட்டிச் சாவியும் மற்றச் சாவிகளும் கல்யாணியிடம்தான் இருப்பது வழக்கம். வீட்

டுக்கு வேண்டிய சாமான்கள் வாங்குவதோ, செலவிடுவதோ எல்லாம் கல்யாணியேதான் செய்வது. ஆகையால் சாஸ்திரி யார், "கல்யாணம்! இரும்புப் பெட்டியிலே ஓரத்துப் புறக் கூண்டிலே ஒரு கவர் இருக்கிறது பார். அதை எடுத்துக் கொண்டுவா" என்றார்.

கல்யாணி மாடியிலிருந்து இறங்கி வந்து நோட்டைக் கொண்டுவந்து கொடுத்தாள்.

சுருளியாண்டி கொண்டுவந்த பணத்தை எண்ணிப் பார்த்து, கத்தையாய்க் கட்டி, "அம்மா! பத்திரமாய்க் கீழ் டிராயரில் வைத்து வை. இன்று சனிக்கிழமை யல்லவா? திங்கட்கிழமை பாங்கில் கட்டினால் போகிறது" என்று கூறிய வராய்ப் பிராமிஸரி நோட்டை அவன் கையில் கொடுத்தார்.

கல்யாணி பணத்தைவைத்துப் பூட்டி, சாவியை இடை யில் சொருகிக்கொண்டு சமையலறைக்குள் சென்றாள்.

* * * *

இரவு எட்டுமணி யிருக்கும். என்றுமில்லாத பூரிப்புட னும் ஆனந்தத்துடனும் காணப்பட்டாள் கல்யாணி. ரங்க நாதனும் சுந்தரியும் மிகுந்த சந்தோஷத்துடன் "கிரிக்கெட்" விளையாட்டைப்பற்றித் தர்க்கித்துக் கொண்டிருந்தனர். பாட்டியம்மாள் அப்பொழுதுதான் பலகாரத்தை முடித்து விட்டு "சம்போ! மகாதேவா! கைலாஸ பதே!" என்று சொல்லிக்கொண்டே விசுப்பலகையின்மேல் உட்கார்ந்தாள். சுந்தரிக்கு நிச்சயிக்கப்பட்டிருக்கும் வரனைப்பற்றியும் அவர் கள் குடும்ப யோக க்ஷேமத்தைப்பற்றியும், லக்ஷ்மி விவரித் துக்கொண்டிருந்தாள். வெளியே சென்றிருந்த சாஸ்திரிகள் வருவதற்கு நேரமாகுமென்று கருதி லக்ஷ்மி, நாகராஜனையும் கோபாலனையும் சாப்பிடும்படி சொல்லிவிட்டுக் கல்யாணியைப் பரிமாறும்படி கூறி, தான் மாமியாருடன் கூடத்தில் வந்து உட்கார்ந்தாள்.

சாப்பிடும்பொழுது கோபாலன், " இவ்வளவு நாளாய்க் கலியாணப் பேச்சையே காணோம். வைகாசி கடைசியில் ஜாதகம் பார்க்கிறாரே " என்றான்.

" பணம் கைக்கு வராவிட்டால் மேலைக்குப் பார்த்துக் கொள்ளலாமென்றிருந்தார். சுருளியாண்டி இரண்டாயிரத்தையும் கொடுத்து விட்டான். குட்டையன் செட்டியும், அகமத்தம்பி ராவுத்தனும் நாளை வருவதாகக் காயல் பட்டணத்திலிருந்து தகவல் வந்திருக்கிறது. அதனால் இந்த வருஷமே சுந்தரிக்குக் கல்யாணம் செய்துவிட்டால் அடுத்த வருஷம் மாட்டுப்பெண் வருவதற்குச் சரியாயிருக்கும் " என்று சொல்லி நாகுவை நோக்கிச் சிரித்தாள் கல்யாணி.

" மாட்டுப்பெண் வந்தால் கன்றுப் பெண்ணுக்குக் கலியாணம் செய்யலாகாதா ? அது என்ன சாஸ்திரம் ? எனக்குத் தெரியாதே ?" என்றான் நாகு.

" வரக்கூடாதென்று சொல்லவில்லை. செலவுமேல் செலவுதானே? உன் அகமுடையாளுக்கு வைரவளை வேண்டுமென்பாய். தோடு ஒட்டியாணம் எல்லாம் போடும்படி நேர்ந்தால் நாலைந்தாயிரம் ஆகிவிடாதா ?"

" ஆனால், நாட்டுப்பெண் தோடு ஒட்டியாணம் ஒன்றுமில்லாமல் சர்வ மூளியாய்த்தான் வருவாளோ ?"

கல்யாணி மேலே பேசாததைக் கண்ட நாகு, " என்ன? கல்யாணம் ? பதிலே இல்லை. அது போனால் போகிறது. மாப்பிள்ளைக்கு இலையைப்பார்த்துப் பரிமாறு. இன்றைக் கென்ன ? ரொம்ப குஷியாய் இருக்கிறாப்போலிருக்கிறதே. என்ன சங்கதி ? கொஞ்சம் சொல்லேன். நானும் கொஞ்சம் அதில் பங்கிட்டுக்கொள்ளுகிறேன்."

" புதியதாய் என்ன குஷி வந்திருக்கிறது? அதெல்லாம் ஒன்றுமில்லை."

"அதென்னமோ எனக்குத் தெரியாது. என்னென்னமோ பாட்டெல்லாம் முணகுகிறாய். புது ஸில்கு, புது மோஸ்தர் பின்னல், எல்லாவற்றையும் பார்த்தால் ஏதோ விசேஷம் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது."

"நான் பார்க்கும் பொழுதெல்லாம் இப்படித்தானிருக்கிறாள்" என்றான் கோபாலன்.

"போ! அண்ணா! உனக்கும் வேலையில்லை; அவருக்கும் வேலையில்லை" என்று சொல்லி உள்ளே சென்றாள் கல்யாணி.

* * * *

இரவு சுமார் இரண்டுமணியிருக்கும். எங்கும் ஒரே நிசப்தம். கோபாலன் வந்தபிறகு மாடியில் கல்யாணி, கோபாலன், நாகராஜன் இவர்கள் மட்டுமே படுப்பது வழக்கம். சாஸ்திரியாரும் சேஷியம்மாளும் கூடத்திலும், லக்ஷ்மி தாழ்வாரத்திலுமாகப் படுத்திருக்கின்றனர். திடீரென்று ஏதோ கெட்ட கனவு கண்டு கண் விழித்தாள் கல்யாணி. கோபாலனிடம் சொல்லுவோமென்று திரும்ப, படுக்கையில் அவனைக் காணோம். சற்றுப் பொறுத்துப் பார்த்தாள். மிகுந்த கலக்கமும் பீதியும் அடைந்தவளாய் உரத்த குரலில் "அண்ணா! அண்ணா!" வென்று கூவினாள்.

வெளித் தாழ்வாரத்தில் படுத்திருந்த நாகு திடுக்கிட்டான். எழுந்து அவளருகில் வந்து "கல்யாணம்! என்ன சங்கதி? ஏன் கத்துகிறாய்?" என்று கண்களைக் கசக்கியவண்ணம் கேட்டான்.

"ஏதோ கெட்ட கனவு கண்டேன். வேறொன்றுமில்லை. நான் கீழேபோய் அம்மாவிடம் படுத்துக்கொள்ளுகிறேன். மாப்பிள்ளை எங்கேயாவது போவதாக உன்னிடம் சொன்னாரா?" என்று இரகசியமாய்க் கேட்டாள்.

அதற்கு அவனும் "என்னிடம் சொல்லவில்லை. ஆனால் வாசல் கதவு தாளிட்டிருக்கிறதாவென்று பார்த்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கீழே சென்று வாசல் கதவு திறந்திருந்ததாகவும் தான் தாளிட்டு வந்திருந்ததாகவும் கூற, "சரி, நான் கீழே போனால் மாப்பிள்ளை எங்கே என்ற கேள்வி வரும். ஆகையால் நான் கீழே போகவில்லை. நீ உன் படுக்கையை என் அறைக்கே கொணர்ந்து போட்டுக் கொள்ளுகிறாயா?" என்றாள்.

"இராத்திரி எப்படியிருந்தான்?"

"சாதாரணமாய் எப்பொழுதும்போல்தானிருந்தார்."

சற்றுநேரம் இருவரும் மௌனமாயிருந்தனர்.

"கல்யாணம், சாவிக்கொத்து இருக்கிறதா பார்!"

கல்யாணி தலையணையைத் தூக்க, சாவிக்கொத்து வழக்கமாய் வைக்குமிடத்திலில்லாமல் ஓர் ஓரமாய்க் கிடந்தது. பளிச்சென்று அவளுக்கு யாரோ சாவிக்கொத்தை எடுத்துக் கொண்டு பூனைப்போல் சத்தப்படாமல் சென்றது போலவும், மறுபடி கொணர்ந்து வைத்ததுபோலவும் கனவில் நடந்தது போல் ஞாபகம் வந்தது.

இடியோசை கேட்ட நாகம்போல் திகைத்துவிட்டாள் கல்யாணி. எல்லாம் புரிந்துவிட்டது. தன் கணவன் சுருளியாண்டி கொண்டுவந்திருந்த பணத்தை அடித்துக்கொண்டு ஓடிவிட்டான்! இனி அவனைக் கண்டுபிடிப்பது கஷ்டம். இன்னது செய்வதென்று அறியாமல் துடிதுடித்த வண்ணம் அவ்வறையில் உலாவினாள் கல்யாணி. கண்களினின்றும் கண்ணீர் மாலை மாலையாய்ப் பெருகியது. மழை பாட்டம் பாட்டமாய்ப் பெய்வதுபோல் ஐந்து நிமிஷம் விம்மி விம்மி அழுவதும், மறுபடி சற்று ஓய்வதும், மறுபடி ஒரு பாட்டம் அழுவதுமாயிருந்தாள். துக்க மிகுதியினால் படீர் படீரென்று

இதயம் துடித்து அப்படியே நின்றுவிடுவதுபோல் அவளுக்குத் தோன்றிற்று.

அவளது பரிதாபகரமான நிலைமையைக் காணச் சகியாத நாகராஜன், "அடி அச்சே, எங்கே போயிருப்பான்? 'கழுதை கெட்டால் குட்டிச் சுவர்' என்று எங்கேயாவது சுற்றிவிட்டுக் காலையில் வந்து நிற்பான். இதற்காக இவ்வளவு பிரமாதமாய் அழுது உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே. பேசாமல் தூங்கு. நான் இங்கேயே இருக்கிறேன். நீ அழுவதுடன்கூட அப்பா, அம்மா எல்லோருடைய மனதையும் குழம்ப அடித்து விடாதே" என்றான்.

அவன் மனதிற்குள், "கணவன் வேறு பெண்ணுடன் நட்புக் கொண்டிருக்கிறானோ, எங்கே போயிருக்கிறானோ என்ற சந்தேகத்தினால் அழுகிறாள்" என்று எண்ணினான்.

இவளோ கீழே போய் இரும்புப் பெட்டியைப் பார்த்துவிட வேண்டுமென்னும் ஆவலால் தூண்டப்பட்டாலும், நாகுவுக்குத் தெரிந்துவிட்டால் பின்னர் என்ன நேருமோ வென்று பயந்தவளாய்ச் சொல்லவும் மாட்டாமல் மெல்லவும் மாட்டாமல் பரம சங்கடமான நிலைமையில் அகப்பட்டுக்கொண்டு தத்தளிக்கலானாள்.

# அத்தியாயம் 5

## சாஸ்திரியாரின் கோபம்

பொழுது விடியும் தருணம். சுமார் நான்கு மணி இருக்கும். வழக்கம் போல் சேஷியம்மாள் எழுந்திருந்து பால்பாத்திரங்களைத் தேய்த்த வண்ணம் 'சுகமுனியும் சொன்னாரே நாராயண ராம, பரீக்ஷித்தும் கேட்டுமதை நாராயண ராம', என்று மெதுவாய்ப் பாடிக் கொண்டிருந்தாள். லக்ஷ்மி கூடத்திலில்லை. கல்யாணி மெதுவாய் அடிமேல் அடிவைத்துப் பூனை போல் நடந்து வந்து, இரும்புப் பெட்டியை ஓசைப்படாமல் திறந்து, நோட்டுக்கள் வைத்திருந்த டிராயரை இழுத்துப் பார்த்தாள். காணோம்! ஏற்கனவே எதிர்பார்த்த விஷயமானாலும் துக்கம் பொங்கிவிட்டது. ஆனாலும் பொறுத்துக்கொண்டு மெதுவாய் மாடிக்குச் சென்று இழுத்துப் போர்த்துக்கொண்டு படுத்துவிட்டாள்.

நாகராஜனோ சுகமாய்த் தூங்கிக்கொண்டிருக்கிறான். கல்யாணி இரண்டு மூன்று முறை அவனை எழுப்பி விஷயத்தைச் சொல்லி விடலாமா வென்று எண்ணினாள். ஆனால் தைரியமுண்டாகவில்லை.

பொழுது விடிந்து விட்டது. கல்யாணி எழுந்து வரக் காணோம். "அடே நாகு! கல்யாணம் ஏன் இன்னும் எழுந்து வரவில்லை? மாடிப் படியிலிருந்தே ஒரு குரல் கூப்பிடு!" என்றாள் லக்ஷ்மி.

சுந்தரி, "என்னை மட்டும் ஒரு நாள் நாழி கழித்து எழுந்தால் கேலி செய்கிறாளே? நான் போய்த் திருப்பள்ளியெழுச்சி பாடுகிறேன். கதவை வெளிச்சங்கிலி போட்டு விடுகிறேன்" என்றாள்.

இதற்குள் எதிரே வந்த நாகு "உஸ், அசட்டுப் பிசட்டென்று உளறுதே! தானே இறங்கி வருவாள்" என்று கடுகடுத்த குரலில் கூறி, அவளை விழித்துப் பார்த்தான்.

மணியும் எட்டடித்தது. பதஞ்சலி சாஸ்திரிகள் காப்பி சாப்பிட்டாய் விட்டது. "நாகு எங்கே? மாப்பிள்ளை இன்னும் இறங்கி வரவில்லையா? சிமைத்துரை, பல் தேய்க்காமலே, பெட்காபி சாப்பிடுவார்" என்றார்.

நாகு, அங்கிருந்தால் ஏதாவது சொல்ல நேரிடுமென்று மெதுவாய் எங்கேயோ நழுவிவிட்டான். இதற்குள் சுந்தரி, "நாகு யாரோ பையன் வீட்டிற்குப் போய் விட்டான். அத்திம்பேரும் அக்காவும் இறங்கியே வரவில்லை" என்றாள்.

"குட்டி, சுந்தரி, போய்ப் பார்!" என்றார் சாஸ்திரிகள்.

"போய்ப்பார்த்தேன். அக்காதானிருக்கிறாள். உங்களைக் கூப்பிடுகிறாள்."

"என்னடீ இது? என்னைக் கூப்பிடுவானேன்? அம்மாவை வரச்சொன்னாளா?"

"இல்லேப்பா, 'அப்பாவை வரச் சொல்லு' என்று தான் சொன்னாள்."

அவரைக் கண்டவுடன் "அப்பா!" என்றலறிக்கொண்டே எழுந்தாள் கல்யாணி.

"என்னம்மா! என்ன?" என்று கேட்க, "கதவைச் சாத்துங்கள், சொல்லுகிறேன்" என்றாள்.

கதவைச் சாத்தித் தாளிட்டார் சாஸ்திரிகள்.

"மாப்பிள்ளை..........உங்கள் மாப்பிள்ளை......." என்று மேலே சொல்ல அறியாதவளாய்த் தவிக்கலானாள் கல்யாணி.

"என்னடீ? என்ன? மாப்பிள்ளைக்கு என்ன வந்து விட்டது?"

"ஓடிப் போய் விட்டார்."

"ஓடிப் போய் விட்டானா? எங்கே? எப்பொழுது?"

"நேற்றிரவு."

"நீ ஏன் உடனே சொல்லவில்லை?"

"சொல்லி என்ன லாபம்? ஒன்றும் பயனில்லை. அவர் இதற்குள் கொழும்புக்குப் புறப்படும் கப்பலில் ஏறி யிருப்பார். அங்கிருந்து சீமை......."

"அதெல்லாம் வீண் பிரட்டல், உன்னைத் தூண்டிவிட்டு என்னிட மிருந்து பணம் பறிக்கலாமென்று. அந்தப் பாச்சா வெல்லாம் இங்கே பலிக்காது. அந்தத் திருநெல்வேலிப் பருப்பு பனங்குடித் தண்ணீரில் வேகாது. என்னை அவன் வீட்டுக் கிள்ளுக்கீரை என்று நினைத்துக் கொண்டானோ? வரட்டும் சொல்லுகிறேன்!" என்றார்.

இந்த வார்த்தைகள் அவள் நெஞ்சைப் பின்னும் புண்ணாக்கின.

"எப்படிப் போவான்? வெறுங்கை முழம் போடுமோ? பணம் ஏது?" என்று கேட்டார்.

"நான் கொடுத்தேன்" என்று மிகவும் ஈனமும் பயமும் கலந்த குரலில் கூறி, "அப்பா, கொடுத்து விட்டேன். மன்னிக்க வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே தடாலென்று அவர் கால்களில் விழுந்தாள் கல்யாணி.

பதஞ்சலிசாஸ்திரிகள் சுபாவத்திலேயே முன்கோபி. இவ்வார்த்தைகள் செவியில் விழுந்ததும் அவரது கோபம் அசாத்யமாய்ப் பொங்கிவிட்டது. "நீ கொடுத்தாயா? உனக்கேது பணம்?" என்று கேட்கும்பொழுதே சுருளியாண்டி கொடுத்த ரூபாய் நினைவுக்குவர, "அடி, திருட்டுநாயே! என் பணத்தை என் உத்தரவில்லாமல் எடுத்துக் கொடுக்க உனக்கென்ன அவ்வளவு தைரியம்? பன்றியோடு சேர்ந்த கன்றும் கெட்ட கதையாயிற்று. பேஷ்! பலே பேஷ்! ரொம்ப அழகுதான்! உனக்கென்ன அவ்வளவு நெஞ்சழுத்தம்? செய்ததல்லாமல் செய்த காரியம் செரிக்க நீலித்தனம்

பண்ணுகிருயா? ஆட்டச் செல்லம் பூட்டச் செல்லம்! மோசடிக்கும் அயோக்யத்தனத்திற்கும்கூடச் செல்லங் கொடுப்பார்களென்று நினைத்துக்கொண்டாயா? உன்னை எவ்வளவோ அருமையாய் வளர்த்ததற்கு நீ எனக்கே வழிவைத்தாயாக்கும்? எடுத்துக் கொடுத்துவிட்டேன் என்று என்னிடமே சொல்லுகிருயா? உன்னை என்ன செய்தால் தகாது? ஒரு காசா இரண்டு காசா? கூளை கூளையாக இரண்டாயிரம். நேரே இருக்கிறபடி இருந்தால் நானே கொடுத்து அனுப்புகிறேனென்று சொல்லவில்லையா? இவ்வளவு அயோக்கியனுயிருப்பவனை நீ திருத்துவதற்கு வழி தேடாமல் அவனுடன் கூட்டுக் களவாணித்தனம் பண்ண ஆரம்பித்துவிட்டாயா? எனக்குத் தெரியுமே, செல்வமாய் வளர்த்த கழிசடைகள் இப்படித் தானுகுமென்று. கொஞ்சமானது நம் தகப்பனுராயிற்றே; ஊரைவிட்டு, வீடுவாசல்களைவிட்டுப் பட்டணக்கரையில் வந்திருக்கிறோமே; குதிர்போலத் தங்கை நிற்கிருள் கலியாணத்திற்கு. அண்ணன் தம்பி எல்லோரும் படித்தாகவேண்டும்' என்று இவைகளை யெல்லாம் யோசியாமல் இரண்டாம் பேரறியாமல் ரூபாயைத் தூக்கிக்கொடுத்ததுமல்லாமல் எனக்கே காது குத்துகிருயா? ஸ்திரீசாகஸம் என்பது சரியாய்ப் போய்விட்டது. ஏதாவது அழுது கிழுது நாடகமாடினுல் சரிப்பட்டுப்போய்விடுவானென்ற எண்ணமா? அதற்கெல்லாம் மசிகிறவனல்ல பதஞ்சலி. இப்பொழுதே போலீஸில் நோட்டின் நம்பர்களை எழுதிவைத்து, மூலைக்கு மூலை தந்தி அடித்து, கொழும்பிலிருந்தே அவனைச் சிண்டைப்பிடித்து இழுத்து வரும்படி செய்யாவிட்டால் என் பெயர் பதஞ்சலியல்ல" என்று சபதம் செய்தார்.

"அப்பா! அப்பா! இந்த ஒருமுறைமட்டும் என்னை மன்னித்து விடுங்கள். இனிமேல் இந்த மாதிரி ஒன்றும் செய்யமாட்டேன். ஏதோ தெரியாத்தனமாய்ச் செய்துவிட்

டேன்" என்று இருகால்களையும பற்றியவண்ணம் கெஞ்சி னாள் கல்யாணி.

"சிச்சீ நாயே!" என்று கால்களை உதறிக்கொண்டு, "தெரியாத்தனமா? எவ்வளவு முன் ஏற்பாட்டுடன், திங்கட் கிழமை பாங்கில் கட்டிவிடுவார்கள் என்றெல்லாம் யோசனை செய்து எடுத்துக்கொடுத்திருக்கிறாய்? குதிரை தள்ளியது மல்லாமல் குழியும் பறித்ததாம் என்பதுபோலிருக்கிறது. தெரியாத்தனமாய்ச் செய்துவிட்டேனென்றால் சுலபமாய்த் தப்பித்துக்கொள்ளலாமென்ற எண்ணமா? நன்றாயிருக்கிறது! உன்னைப் பெற்று வளர்த்ததற்கு இதுமட்டுமா செய்வாய்? இன்னமும் செய்வாய். என்றைக்கு அந்தக் கஜப்போக்கிரி யைத் தேடி உன்னைக் கொடுத்தேனோ அன்றைக்கே எனக்கு ஏழரை நாட்டான் பிடித்துவிட்டது. பட்டணத்தில் உட் கார்ந்துகொண்டு கேட்டபோதெல்லாம் பணம். என் பணத் தைப் பெற்று பெற்று அவன் நன்றாய் ருசிகண்டவன். எனக்கிதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும். விதி, விதி!" என்று படீர் படீரென்று தலையிலடித்துக்கொண்டார் சாஸ்திரிகள்.

கல்யாணி குப்புற விழுந்தவள் எழுந்திருக்கவேயில்லை. அந்த நிலைமையில் அவளைக் கண்டால் கல்நெஞ்சும் கரையும். பதஞ்சலிசாஸ்திரியாரோ அவளைக் கவனியாமல் கீழே செல் லும்பொருட்டு மாடிக் கதவைத் திறந்தார். கதவைத்திறந் ததும் கதவருகே நின்று இவ்வளவு நேரமாய் ஒட்டுக்கேட்ட லக்ஷ்மியைப் பார்த்தார்.

அவளைக் கண்டதும் அவர் கோபம் இன்னும் பொங்கி எழுந்தது. கண்கள் கோவைப்பழம்போல் சிவக்க, "ஓஹோ, அம்மாள் அவர்கள் ஸி. ஐ. டி. உத்தியோகம் பார்க்கிறாள் களோ? நீயும், உன் பெண்ணும், மாப்பிள்ளையும் எல்லாரு மாய்க் கட்டிக்கொண்டு அழுங்கள். நாசமாய்ப்போங்கள்!"

என்று வெகு அகங்காரத்துடன் அவளைப் பிடித்து உள்ளே தள்ளினார்.

பல வருஷங்களாய் இவர் கோபத்தை எதிர்த்துப் போராடி அநுபவம் அடைந்தவள் லக்ஷ்மி. அடிபட்டதை யும் பாராட்டாமல் எழுந்து ஒரே தாவாய்த்தாவி அவருக்கு முன்னாலேயே கீழே இறங்கித் தெருக்கதவைத் தாளிட்டாள். பிறகு இவர் எதிரில் வந்து இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு, "நான் சொல்லுவதைக் கொஞ்சம் கேட்டுவிட்டுப் பிறகு எதை வேண்டுமானாலும் செய்யுங்கள்" என்று மன்றாடி னாள்.

இதற்குள் என்ன விஷயமென்று புரியாமல் சுந்தரியும் சியாமளியும் அழத்தொடங்கினார்கள். அப்பொழுதுதான் கூடத்துக்கு வந்து கொண்டிருந்த சேஷியம்மாள் மருள மருள விழித்தாள். சாஸ்திரியாருக்கோ முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கிறது. துடிதுடித்தவராய் அவள் பிடியி னின்றும் திமிறிக்கொண்டு, "நீயும் பெண்ணுக்குப் பரிந்து பேச வருகிறாயோ? தெரியாத்தனமாம்! என்ன தெரியாது, பாவம்! வாயில் விரலை வைத்தால் கடிக்கக் கூடத்தெரியாது. குட்டிச் சுவர்போல் மூன்று குழந்தைகளுக்குத் தாயாக வய தாயிற்று. தெரியாதாம்! நாடகமாடத் தெரிகிறதா? சீ, சீ, விடு கையை!" என்றார்.

"கிடக்கட்டும்; நான் சொல்லுவதைக் கேட்டுக்கொண்டு பிறகு உங்களிஷ்டப்படி செய்யுங்களேன்" என்று கெஞ்சி னாள் லக்ஷ்மி.

சாஸ்திரியாரை வெளியே செல்லவொட்டாமல் நிறுத்து வது பிரம்மப் பிரயத்தனமாய்விட்டது. இதற்குள் விஷ யத்தை ஒருவாறு ஊகித்துக்கொண்ட சேஷியம்மாளும், அவரைச் சமாதானப்படுத்திப் பின்வருமாறு கூறி னாள்.

"என்னடா ஐயா! போனால் போகிறது, அற்பக்காசு. பணம் போனது பெரிதா? மானம் பெரிதா? அதுவும் பணம் எங்கே போய்விட்டது? நம் மாப்பிள்ளைக்குத் தானே? அதனாலென்ன? என்னமோ பிரளயம் வந்து விட்டது போல் குதிக்கிறாயே? அர்பத்நட் கம்பெனியில் பதினாயிரம் ரூபாய் போட்டிருந்தார் உங்கப்பா. அது முறிந்துபோன போதுகூட அவர் இவ்வளவு அமர்க்களம் பண்ணவில்லை. நீ இதற்காக இவ்வளவு கோபப்படலாமா? என்னமோ இரண்டுங் கெட்டான். நீயும் கொடுப்பதாய்ச் சொன்னது தானே என்று கொடுத்துவிட்டாள்போலிருக்கிறது. அதைத் தம் பட்டம் கொட்டுகிறதா? போலீஸில் எழுதி வைத்துவிடு கிறாய். அந்த அவமானம் யாருக்கு? இன்னாருடைய மாப் பிள்ளை என்று நாளைக்கே பேப்பரில் போட்டு விடுகிறான். ஊரார் நம்மை என்ன மதிப்பார்கள்? அந்தக் குழந்தைக்குத் தான் மனது என்னமா யிருக்கும்? இல்லை, அவள் சொல்லு கிறபடி சீமைக்கே போய்ப்படித்து, கலெக்டராய் வந்தாலும், பெரிய பதவியிலிருக்கும்பொழுது நாம் இப்படிச் செய்ததை மனதில் வைத்துக்கொண்டு அந்தப் பெண்ணை வாழா மல் வைத்துவிட்டானானால் அந்தப் பாபத்தை யார் கட்டிக் கொள்ளுகிறது? நம்ப ஜில்லாவிலேயோ, பெண்ணிருக்கப் பெண் கொடுப்பதாக நூறு பேர் வரக்கூடியவர்கள். அப்படி யிருக்க, 'தந்தி யடிக்கிறேன், போலீஸில் எழுதி வைக்கி றேன்' என்கிறாயே. அந்தச் சமர்த்துதான் எனக்கும் புரிய வில்லை. அந்தப் பெண்ணையும் சும்மா கசக்கி முகராதே. எங் கேயாவது பிராணனை விட்டு வைக்கப் போகிறது" என்றாள்.

சாஸ்திரியார் ஒன்றும் பேசாமல் சாய்மான நாற்காலி யில் சாய்ந்துகொண்டார்.

## அத்தியாயம் 6

# அன்புள்ள சகோதரன்

**ப**ங்குனி மாதம் திருமயிலைக் கபாலீசுவரர் உத்ஸவம். தெருவெங்கும் ஒரே கூட்டம். திருவிழாவைத் தரிசிக்க ஜனங்கள் மிகுந்த குதூகலத்துடன் சென்றுகொண்டிருக்கின்றனர். "காதவழி நடந்தாவது ரிஷப வாகனம் பார்க்காதவர் கழுதையாய் பிறப்பார்களாம். ஏண்டாப்பா, ஐயா! குழந்தைகளை அழைத்துக்கொண்டு போய்வாயேன்" என்றாள் சேஷியம்மாள்.

"இருக்கிற லக்ஷணத்திற்குத் திருநாள் ஒன்றுதான் குறைவு. உனக்கு வேண்டுமானால் போ" என்றார் சாஸ்திரிகள்.

"உனக்காக இல்லாவிட்டாலும் கல்யாணிக்காகவாவது போய்விட்டு வா. ஒரே பித்துப் பிடித்து உட்கார்ந்திருக்கிறது. எப்பொழுது பார்த்தாலும் அழுத கண்ணும் சிந்தின மூக்கும்தான். தினமும் நாகுவை இங்கிலீஷ் பேப்பர் வாங்கச் சொல்லி, கலெக்டர் பரீக்ஷைக்கு எடுத்துக்கொண்டவர்களின் படம் வருமாமே, அதைப் பார்க்கிறாள். படத்தையும் காணோம், ஒன்றையும் காணோம். அவனிடமிருந்து கடிதமும்தான் கிடையாது. என்ன சங்கதியோ, யார் கண்டார்கள்?"

இப்படிப் பேசிக்கொண்டிருந்தபோது வாசலில் ஜனங்கள் சந்தோஷத்தினால் கூச்சலிடுவது கேட்டது. நடுவில் ஒரு பெரியவர் கௌபீனதாரியாய் வர, அவரை சுற்றிலும் கூச்சலிட்ட வண்ணம் சிறுவர்களும் வந்துகொண்டிருந்தனர். "அற்புதக் கற்பகம், ஆனந்தக் கற்பகம், குடிகாரக் கற்பகம்" என்று உச்சஸ்வரத்தில் கூவினார் கோவணாண்டி.

"அப்பா! அப்பா! குடிகாரச் சாமியார் என்று சொன்னார்களே, அவர் போகிறார்" என்று ரங்கன் வாசலிலிருந்து கத்த, எல்லோரும் எழுந்து வாசற்புறம் சென்றனர்.

சென்னை வாசிகள் அனைவருக்கும் குடிகாரச் சாமியார் என்றால் நன்றாய்த் தெரியும். கடந்த ஐந்தாறு வருஷங்களாய் மயிலைக் கற்பகாம்பாள் சந்நிதியிலேயே அவருக்கு அநேகமாய் வாசம். கந்தசாமி கோயிலுக்கும், திருவொற்றியூரிலுள்ள பட்டணத்தார் சமாதிக்கும் மாதமொரு முறை சென்று சுற்றிவிட்டு வருவார். மயிலை மகாஜனங்கள் அவரைக் 'குடிகாரச் சாமி' என்றும், குழந்தைகள் அவரைக் 'கற்கண்டு சுவாமிகள்' என்றும் சொல்வது வழக்கம். ஏனென்றால் அவர் ஊரிலுள்ள குழந்தைகளுக்கெல்லாம் கற்கண்டு வாங்கிக் கொடுப்பார். பெயர் மட்டும் எப்படியோ குடிகாரச்சாமி என்று ஆகிவிட்டதேயன்றி, அவர் உண்மையில் குடிகாரர் அல்ல. சாக்ஷாத் ஜகதீச்வரியை அவர் "குடிகாரக் கற்பகம்" என்று அடிக்கடி சொன்னதனால், ஜனங்கள் அவரை அப்படி அழைத்து வந்தார்கள்.

மயிலையிலுள்ள எல்லோருக்கும் அவரிடம் மரியாதை உண்டு. தெருவில் எவரேனும் அசுத்தம் செய்தாலும் துர்ப்பாஷைகள் பேசினாலும், கன்னத்தில் பளீரென்று ஓங்கி அறைந்து விடுவார். நல்ல படிப்பாளி. பேச ஆரம்பித்து விட்டால் போதும். திருவருட்பா, தாயுமானவர் பாடல்களை நடுவில் கொண்டுவராமல் பேசமாட்டார். ஆனால் திடீரென்று பாதியில் பேச்சை நிறுத்திவிட்டு, "அற்புதக் கற்பகம்" என்ற பல்லவியுடன் ஓடிவிடுவார்.

பதஞ்சலி சாஸ்திரியாருக்கு சுவாமியார்களிடமே விசுவாசம் உண்டு. அதிலும் குடிகாரச் சாமியாரைப் பற்றி ஏற்கனவே கேள்விப்பட்டிருந்தாராகையால் தெருவில் சென்று

அவனைக் கும்பிட்டுத் திண்ணையின்மீது உட்காரும்படி கேட்டுக்கொண்டார்.

கல்யாணியும் மற்றக் குழந்தைகளும் திருவிழாவுக்குச் சென்று சற்று நேரமாயிற்று. லக்ஷ்மி ஏதோ எண்ணமிட்டவளாய் உட்கார்ந்திருந்தாள். சேஷியம்மாள் கால்களை நீட்டி விசுப்பலகையை ஆட்டிக்கொண்டிருந்தாள். "அம்மா! நேற்று முதல் ஒரு சங்கதி உங்களிடம் சொல்ல வேண்டுமென்று பார்க்கிறேன், சரிப்படவேயில்லை. உங்கள் பிள்ளைக்குத் தெரியவேண்டாம்" என்று சொல்லுகையில், சேஷியம்மாள் தடுத்து, "லக்ஷ்மி, நான் சொல்வதைக் கேள். கல்யாணி விஷயத்தில் நீயும் ரொம்ப ஜாக்கிரதையாய்த்தா னிருக்க வேண்டும். வெளியே சொன்னால் வெட்கம். சீமைக்குப்போக ரூபாயை மட்டும் எடுத்துக் கொடுத்தாளே, போனவன் அவளுக்காவது, நமக்காவது ஒரு தபால் எழுதினானா பார்! மகா கிராதகன். சீமைக்குத்தான் போனானென்றாவது தெரியுமா? மாதம் எட்டு ஆகிறது. இல்லாவிட்டால் எங்கேயாவது குடித்துக் கூத்தாடித் தத்தாரியாய் நிற்கிறானோ என்னமோ? நாமென்னத்தைக் கண்டோம்! ஐயாவைக் கேட்போமென்றால் எங்கேயாவது அவள் காதில் விழுந்து ஏதாவது எக்கச்சக்கமாய்விடப்போகிறதே என்று பயமாயிருக்கிறது. கோயிலா, குளமா, பீச்சா எங்கேயும் போகமாட்டேனென்று பித்தாயிருக்கிறதே. நீ இரகசியமாய்க் கேள். அவனுக்குத் தெரிய வேண்டாமென்று சொல்லிவை. இல்லாவிட்டால் அவனுடைய முன்கோபத்தில் அம்பலத்தில் அவல் பொதி அவிழ்த்து விடுவான்" என்று மிகுந்த சலிப்புடன் கூறினாள்.

"அதையேதான் நானும் சொல்ல வாயெடுத்தேன். நீங்களே கேட்டு விட்டீர்கள். போனது நிஜம்தானும். பாஸ் போர்ட், புகைப்படம் எல்லாவற்றையும் பார்த்ததாகக் கல்

யாணமும் நாகுவும் சொன்னார்கள். பம்பாயில் மட்டுங்காவில் வடகுடி எச்சுமு பிள்ளை அகத்திலேதான் இறங்கினாளும். மாமனார் பணம் கொடுத்து அனுப்பியதாகச் சொல்லிக்கொண்டாளும். நானும் நேற்று வரையில் உங்களைப்போல்தான் சொல்லவும் மாட்டாமல் மெல்லவும் மாட்டாமல் தவித்தேன். முந்தாநாள் அதிகாரநந்தி சேவைக்குக் கணபதி அகத்து வாசலில் சற்று நின்றேன். அவர் தம்பி பெண் பம்பாயிலிருந்து வந்தவள் என்னை அடையாளம் கண்டுகொண்டு கேட்டாள். எனக்கு அவளை இன்னாரென்றே புரியவில்லை. தெரிந்த பாவனையாய் நானும் குசலம் விசாரித்தேன். அவள் ' மாப்பிள்ளையிடமிருந்து வாரம் வாரம் கடிதம் வருகிறதா? ஸெலக்ஷன் ஆயிற்றா? நீங்கள் பக்ஷணம், ஊறுகாய் ஏதாவது அனுப்புவதானால், என் தம்பி எடின்பரோவுக்குப் போகிறான், வழியில் கொடுக்கச் சொல்லுகிறேன்' என்று பிரமாதமாய்ப் பேச ஆரம்பித்துவிட்டாள். எனக்கு என்ன பதில் சொல்லுவதென்றே புரியவில்லை. மென்று விழுங்கி ஏதோ உளறிவைத்தேன். போனான் என்ற தகவல் தெரியவே இவ்வளவு நாளாயிற்று. மற்றத் தகவல்கள் யாராவது சொன்னால் தானுண்டு. நாம் செய்த பாக்யம், கிளியை வளர்த்துப் பூனையின் வாயில் கொடுத்தாயிற்று. இனிமேல் என்ன செய்யலாம்!'' என்று பெருமூச்செறிந்தாள் லக்ஷ்மி.

தீபமேற்றும் தருணம்; ஆறு மணி இருக்கலாம். கல்யாணி முதல் ஹாலில் உட்கார்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்தாள். சாஸ்திரியாரும் மற்ற குழந்தைகளுடன் லக்ஷ்மியும் மாம்பலம் போயிருந்தார்கள். சேஷியம்மாள் கூடத்தில் உட்கார்ந்து கொண்டு, "அவிழ்த்துவிட்டு மேய விட்டு, அஞ்ஞானம் விட்டு, "அவித்யை விட்டு மாயை விட்டு" என்று வேதாந்தக் குறள் பாடிக்கொண் டிருந்தாள்.

கல்யாணி புத்தகத்தைக் கையில் பிடித்தவண்ணம், தன் கணவனைப் பற்றி எண்ணி எண்ணி வேதனைப் பட்டுக்கொண்டிருந்தாள்.

சாயங்காலம் வரும் தபால்காரன் ஒரு கவரைக் கொடுத்துச் சென்றான். அதன்மேலிருந்த எழுத்துக்களைக் கண்டதும் அவள் முகத்தில் புன்னகை தோன்றிற்று. கடந்த எட்டு மாதங்களாக அவன் எழுதாமலிருந்ததனால் ஏற்பட்ட கோபமும், சொல்லாமல் பணத்தைத் திருடிக்கொண்டோடிய வைபவமும் எல்லாம் ஏகக்ஷணத்தில் மறைந்துபோயின. ஆனாலும் யாராவது பார்த்து விடுவார்களோவென்று ஐயமுற்றவளாய்க் கடிதத்தை மடியிலேயே பத்திரப்படுத்திக்கொண்டு, "நல்ல வேளை! அப்பா இல்லாத சமயத்தில் வந்ததே. நாம் படித்துவிட்டுச் சொன்னாலும், சொல்லாவிட்டாலும் கேள்வியில்லை" என்றெண்ணியவளாய், "பாட்டி! வாசல் புறம் பார்த்துக் கொள்ளுங்கள். நான் மாடிக்குப் போகிறேன்" என்று சொல்லிவிட்டு மாடிக்குச் சென்றாள்.

சென்றவள் கடிதத்தைப் பிரித்துப் படிக்கலானாள். அது பின் வருமாறு :—

ஷேக்ஸ்பியர் ஹேட்,

லண்டன்.

கண்மணி கல்யாணிக்கு,

நான் இவ்வளவு நாளாய்க் கடிதம் எழுதாததைப் பற்றி மன்னிக்கவும். என்ன செய்யலாம்? அந்தச் சமயத்தில் அப்படிச் செய்யலாமென்று தோன்றிற்று. போனது போகட்டும். எனக்கு ஸெலக்ஷன் ஆகவில்லை. கூடிய சீக்கிரம் திரும்புவதாய் உத்தேசம். உன் உடம்பு எப்படி யிருக்கிறது? அப்பா, அண்ணா எல்லோரும் என்னை நிந்திப்பார்கள். என்மேல் குற்ற

மிருக்க அவர்கள்மீது குறை சொல்வதில் பயனில்லை. அதற்காக நீ வருத்தப்படாதே. அவர்களை ஒன்றும் விரோதித்துக் கொள்ளாதே. நான் அங்கே வருமுன், எடின்பரோவுக்கும், இதாலிக்கும் போய் வரலாமென்று உத்தேசம். உன்னால் முடியுமானால் ரூ. 300 அனுப்பினால் தேவலை. இல்லாவிட்டால் வந்து சேருவதே சிரமமாயிருக்கும். இந்த உதவிசெய்ய நீ மறுக்க மாட்டாயென்றே நம்புகிறேன். எப்பொழுதும் உன் ஞாபகமாகவே யிருக்கிறது. எப்பொழுது உன்னைக் காண்போமென்று நெஞ்சு துடிக்கிறது. பணம் அனுப்பினால் கூடிய சீக்கிரம் வந்து சேருகிறேன்.

உன் அன்புமிக்க காதலன்,
கோபாலன்.

கடிதத்தைப் பிரித்து முதல் வாக்கியத்தைப் படிக்கும் பொழுதே அவள் இதயம் ஆனந்தத்தால் மலர்ந்தது. முழுவதும் படித்துவிட்டுக் கடிதத்தைப் பன்முறை கண்களில் ஒத்திக்கொண்டாள். பணத்துக்கு என்ன செய்யலாமென்று யோசித்தாள். அப்பாவைக் கேட்பதென்பதோ முடியாத காரியம். ஊரிலிருந்தால் அம்மாவிடம் பணமிருக்கும். பட்டணத்துக்கு வந்த பிறகு அம்மா தனியாய்ப் பணம் வைத்துக் கொள்வதில்லை. என்ன செய்யலாமென்று சிந்தித்தவளாய்க் கீழே சென்றாள்.

நாகு "கிரிக்கெட்" விளையாடிவிட்டு அப்பொழுதுதான் வீட்டிற்கு வந்தான். அவனுக்குச் சிற்றுண்டி கொடுக்கும் பொருட்டு அவனை இரண்டாங் கட்டிற்குவரும்படி கூற, அவனும் எழுந்து சென்றான். பெரிய பீடிகையுடன் ஆரம்பித்து மாப்பிள்ளை பணம் கேட்டிருக்கும் விஷயத்தை அவனிடம் கல்யாணி தெரிவித்தாள்.

"சரிதான். போன சமர்த்துப்போல் திரும்பி வரட்டும். இல்லாவிட்டால் அங்கேயே சந்திக்கரையில் நிற்கட்டும். கொழுக்கட்டை தின்ற நாய்க்குத் துறுணி மோர் குரு தக்ஷிணையாம். அதுபோல இரண்டாயிரம் ரூபாய்க்கு 300 ரூபாய் கொஸரா? நன்றாயிருக்கிறது! இந்த வம்பு தண்டா வெல்லாம் எனக்குத் தெரியாது."

"அண்ணா! நீயே இப்படிச் சொன்னால் நான் என்ன செய்வேன்? இந்த ஒரு முறை மட்டும் நீ எப்படியாவது உதவி செய்யத்தான் வேண்டும். இல்லா விட்டால் வேறு யாரைக் கேட்பேன்? நீயே இப்படி நிராகரித்தால் போன மனிதர் எப்படித் திரும்பி வருவார்?" என்று முத்து முத் தாய்க் கண்ணீர் உதிர்த்தாள் கல்யாணி.

இயற்கையிலேயே நாகராஜனுக்குத் தங்கையிடம் அபார மான வாஞ்சை யுண்டு. சிறு பருவமுதல் அவள் அழுதால் சகிக்கமாட்டான். அவளைப் பிரிந்து அரை நாழிகை இருக்கவு மாட்டான். அப்படிப்பட்ட உத்தம சகோதரனுக்கு அவள் கண்ணீரைக் கண்டு நெஞ்சம் உருகாதிருக்குமா? "கல்யாணம்! என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்? சொல். முடிந்தால் செய்கிறேன். கடன் வாங்குவது என் பது என்றால் முடியாது" என்றான்.

"அண்ணா, உன்னை நான் கடன் வாங்கச் சொல்வேனா? நீ எங்கேபோய் வாங்குவாய்? என்னுடைய எணிச் சங்கிலி பத்துப் பவுன். இப்பொழுதோ சவரன் 22 ரூபாய் விற் கிறது. அதை விற்று அனுப்பினால் பிறகு நல்லகாலம் வரும் பொழுது பண்ணிக்கொள்ளுகிறது" என்றாள்.

"நல்ல போடு போட்டாய்! யார் செய்து போட்டது? விற்பதற்கு உனக்கென்ன சுதந்திரம்? நிரம்பவும் நன்றாயிருக் கிறது உன் யோசனை!" என்று கோபத்துடன் கூறினான் நாகு.

"அண்ணா! நான் சிறியவள்தான் என்றாலும் நான் சொல்லுவதைக் கேட்டுவிட்டுப் பிறகு சொல்லு. நான் பிறந்தகத்திலில்லாமல் அங்கேயே இருப்பதாய் வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது அவருக்கு அவசரமாய் வேண்டியிருந்து விற்றுவிட்டால் நீங்கள் என்ன செய்ய முடியும்? இரண்டு நாளைக்குத் திட்டுவீர்கள். அவ்வளவு தானே! நல்லபடியாகித் திரும்பி வரட்டும். இந்த இரண்டாயிரம் ரூபாயும், நகைக்குப் பதில் நகையும், வட்டிக்கு வட்டி போட்டுத் திரும்பக் கொடுத்து விடுகிறேன். ஏதோ உடன் பிறப்பாயிற்றே, அப்பாவும் மகா முன்கோபியாயிற்றே என்று உன்னைக் கேட்டேன். நீயும் மறுத்துவிட்டால் கடவுள் விட்டவழி!" என்று அழத்தொடங்கினாள்.

நாகராஜனுடைய மனதில் ஒரு பெரிய போராட்டம் ஏற்பட்டது. ஒரு பக்கம் கோபமாயிருந்தாலும், கல்யாணியின் பரிதாபத்தைக் கருதி, "போனால் போகிறது, அனுப்பலாமா?" என்று எண்ணலானான். தகப்பனாரை வஞ்சிப்பது கூடாது என்று மனச்சாக்ஷி ஒருபுறம் கூற, பேதைச் சகோதரியின் மேலுள்ள வாஞ்சை ஒருபுறம் இழுக்க, கடைசியில் ஒருவிதமாய் நகையை விற்று அனுப்புவதாய் ஒப்புக் கொண்டான். ஆனாலும் மறுபடி கல்யாணியை நோக்கி, "நகை எங்கே என்றால் என்ன பதிலுரைப்பாய்?" என்றான்.

"அதைப்பற்றி நான் பார்த்துக் கொள்ளுகிறேன். நீ இந்த உதவி மட்டும் செய்தால் போதும்" என்று கெஞ்சலானாள்.

"கல்யாணம்! இப்பொழுது நான் செய்யப்போவது அப்பாவுக்குத் தெரிந்துவிட்டால் ஒரு க்ஷணம் கூட என்னை வீட்டிலிருக்க வொட்டார். உடனே ஒரு கல்தாக்கொடுத்து வெளியேற்றிவிடுவார். இது தெரிந்திருந்தும், மோசடிக்கு ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது" என்றான் நாகு.

## அத்தியாயம் 7

# மாப்பிள்ளையின் போக்கு

"கல்யாணம்! நான் வேண்டாமென்று சொன்னபொழுது நீ கண்ணீர் விட்டுக் காரியத்தைச் சாதித்துக்கொண்டாயே. இப்பொழுது இதற்கென்ன சொல்லுகிறாய்? நான் நேரில் என் கண்ணால் பார்த்தாயிற்று. மெஜஸ்டி ஹோட்டல் மேல்மாடியில் மிஸ்டர் வி. ஜி. பால் துரையவர்கள் வந்து கந்தர்வ ஸ்திரீ ஸஹிதம் எழுந்தருளி யிருக்கிறார். பார்க்கப் பதினாயிரம் கண் வேண்டும். இந்தப் பட்டணத்திற்கே, அது வும் நாமிருக்கும் இடத்திற்குச் சமீபத்தில் வந்திருக்கிறானே, என்ன தைரியம்! அயோக்ய ராஸ்கல்! அவனை நம்பிப் பணத்தைக்கொடுத்துக் குட்டிச்சுவரானோயே! அடி அவலமே! உன்னைப் போலப் பொறுக்கி எடுத்த அசடு இந்தியா முழுவதும் தேடினாலும் கிடைக்காது. நம்முடைய பூர்வகர்மம், இந்த மாதிரி ஓர் அபூர்வ சிந்தாமணி வந்து வாய்த்தான்" என்று நாகராஜன் தலையில் அடித்துக்கொண்டான்.

கல்யாணி, தொண்டை அடைக்க, "நீ அவரைப் போய்ப் பார்க்கக் கூடாதா, அண்ணா?" என்று கேட்டாள்.

"ரொம்ப நன்றா யிருக்கிறது. அவனைப் போய்ப் பார்க்கிறதாம். நான் என்ன சொல்லியும் கேட்காமல் கழுத்தை அறுத்து, சங்கிலியை விற்கச் சொன்னாய். பணம் பெற்றுக்கொண்ட ரசீது நீங்கலாக ஒரு காகிதம், ஒரு வரி எழுதினானா, நன்றி கெட்ட கழுதை? நானும் இந்த இரண்டு மாதமாய்க் கடிதம் இன்று வரும், நாளைக்கு வருமென்று பொறுத்துப் பார்த்தேன். காகிதம் வந்ததா, வந்ததா

வென்று கேட்டு வாயும் சலித்தது. அதற்குள் துணையவர்களே வந்தாயிற்று. நான் கேட்பதற்கெல்லாம் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்கிறாயே யொழிய, நீ என்ன எண்ணிக்கொண் டிருக்கிறாயோ, கடவுளுக்குத்தான் தெரியும். ஒவ்வொரு நாளும் அப்பா 'எங்கே சங்கிலி?' என்று கேட்டு விடுவாரோ வென்று நடுங்குகிறது. எத்தனை நாளைக்கு இந்தக் கபட நாடகம் ஆட முடியும்? உன்னுடைய ஏக்கத்தினால் சங்கிலி போட்டுக் கொள்ளவில்லையென்று அம்மாவும் அப்பாவும் நினைத்துக்கொண் டிருக்கிறார்கள்போ லிருக்கிறது. திடீரென்று ஒரு நாள் கேட்டுவிட்டால் என்ன செய்வாய்?........"

"என்னமோ, ஆனது ஆய்விட்டுப் போகிறது. தலைக்கு மேல்போனவெள்ளம் சாண்போனால் என்ன, முழம்போனால் என்ன?........அண்ணா! எதற்கும் என்னை அங்கே அழைத்துப் போய்க் காட்டேன். நேரில் கண்டு கேட்டு விடுகிறேன்."

"உன்னை அழைத்துப் போவதென்ன சுலபமா? அம்மா, அப்பா எல்லாரிடமும் விஷயத்தைச் சொல்லிக் கேட்டால் அனுப்புவார்களா? என்னமோ விளையாட்டுத் தனமாய் உளறுகிறாயே ......."

கடைசியாக, நாகராஜன் கல்யாணியின் வேண்டுகோளுக்கு இணங்கவேண்டியே வந்தது. அன்று மாலை இருவரும் ஸினிமாவுக்குப் போவதாய்ச் சொல்லிப் புறப்பட்டனர்.

* * *

"நீர் யார், அவரது நண்பரா? உறவினரா?" என்று கேட்டாள் அந்த வெள்ளைக்காரி.

"நான் அவனுடைய மைத்துனன். இவள் அவனது மனைவி" என்றான் நாகராஜன்.

"மனைவியா?" என்று ஆச்சரியப்பட்டாள். "ஆனால் அவருக்கு ஏற்கனவே கலியாணமாகி யிருக்கிறதா?" என்று திகிலுடன் கேட்டாள்.

"ஆம். கலியாணமாகி ஆறுவருஷமாயிற்று. எங்களுடைய பண உதவியினலேதான் சீமைக்கு வந்தான். மறுபடியும் இங்கே திரும்பி வருவதற்கு நான் தான் ரூபாய் அனுப்பினேன்."

"அவருடைய சகோதரன் அனுப்பவில்லையா? உம்முடைய பெயரென்ன?"

"நாகராஜன். சரி, அவன் எப்பொழுது வருவான்?"

"இதோ வந்து விடுவார்" என்று சொல்லிவிட்டு, "அப்படியா? சரிதான், வெகு ஒழுங்கு, ஒரு கை பார்க்கிறேன்" என்று உறுமியவளாய்க் கூண்டிலடைபட்ட புலி போல் உலாவலானள்.

'டக் டக்' என்று பூட்ஸ் ஓசை கேட்ட மறு நிமிடம் கோபாலன் தோன்றினன். அவனைக் கண்டவுடன் விசித்து விசித்து அழத் தொடங்கினள் கல்யாணி. அவன் அசட்டுச் சிரிப்புடன் "இங்கே எதற்கு வந்தாய்?" என்று கேட்டு விட்டு ஏதோ கதை சொல்ல ஆரம்பித்தான்.

"போதும், போதும்! தெரியும் உன் யோக்யதை! நிறுத்து அயோக்யப் பயலே, திருட்டு நாயே" என்றுன் நாகராஜன்.

இதற்குள் அவ்வெள்ளைக்காரி, "இவள் உன் மனைவியா?" என, அவன் வாயே திறக்கவில்லை. இவர்கள் இவ்வளவு துணிகரமாய் இங்கே வந்து விடுவார்களென்று அவன் எதிர்பார்க்கவில்லை.

* * *

கல்யாணியும் நாகராஜனும் எதிரே சாலையோரத்துப் பிளாட்பாரத்தில் நின்று அவனிருக்கும் அறையைச் சற்று நோக்கினர். அவ்வெள்ளைக்காரி தன் பெட்டி பேழைகளுடன் ஒரு டாக்ஸியிலேறி அவசரமாய்ச் சென்

இதற்குள் நாகராஜன் "இனி இங்கென்ன வேலை? துட்டில்லாமல் போனால் தானே வருவான். கடற்கரைக்குப் போய்விட்டு வீட்டிற்குப் போவோம்" என்று ஒரு ரிக்ஷா பேசி நேராய்த் திருவல்லிக்கேணி வழியாய் மயிலாப்பூர்க் கடற்கரையை அடைந்தனர்.

அங்கே மனித சஞ்சாரம் குறைவாயிருக்கு மிடமாய்த் தேடி உட்கார்ந்தனர். அதுகாறும் அடக்கி வைத்திருந்த கல்யாணியின் துக்கம் காட்டாற்றின் வெள்ளம்போல் அவளை மீறிப் பொங்கி எழுந்தது.

"அண்ணா! என்னடா செய்வேன்?" என்று கூறி 'ஓ'வென்று கதறி அழத் தொடங்கிவிட்டாள்.

அவளைச் சமாதானம் செய்வதற்குள் அவன் பாடு திண்டாட்டமாகிவிட்டது. கண்ணீரும் கம்பலையுமாய்த் தன்னெதிரில் உட்கார்ந்திருக்கும் தங்கையைப் பார்க்கப் பார்க்க அவன் மனம் அனலிடை மெழுகுபோல் உருகலாயிற்று.

சற்று நேரம் இருவரும் பேசவே யில்லை. அலைகளின் பேரொலியைத் தவிர வேறு சத்தமே கிடையாது.

"கல்யாணம்! அடி அசடே! 'வாக்கிலே கெட்ட கழுதையைப் போக்கிலே விட்டுத் திருப்பு' என்பதுபோல் வராமல் எங்கே போய்விடுவான்? கெட்டலைந்து நாலுநாளில் வந்து சேருவான், பார்! இதற்காக நீ இப்படி அழலாமா? கல்யாணி, நீ அழுவதைக் கண்டு புருஷனாயிருந்தும் என்னாலேயே சகிக்கக்கூடவில்லையே. அம்மா பார்த்தால் என்ன செய்வாள்? உன்னுடைய அபிமானத்தை யெல்லாம், அபாத்திரனும் அயோக்யனுமான அவனுக்கே கொடுத்துவிட்டாயே. போனால் போகிறான். உன்னுடைய பிரேமையைப் பெற அருகதையற்ற துஷ்டன் அவன். அப்பேர்ப்பட்டவனைப் பகவான் உனக்குப் புருஷனாக விதித்துவிட்டாரே......"

இவ்வாறு நாகராஜன் அவளைத் திட்டத்திட்ட, கல்யாணியின் துக்கம் அதிகமே ஆயிற்று. அதைப் பார்த்துச் சகிக்காமல் அவளும் அழத் தொடங்கினாள்.

கொஞ்சநேரம் கழித்துச் சற்றுத் தெளிந்த பிறகு "வீட்டுக்குப் போனாலும் இப்படித்தானே அழுவாய்? ஏன் அழுகிறாய் என்று கேட்டால் என்ன சொல்லுவாய்?" என்றான்..

அப்போது கல்யாணிக்குப் பளிச்சென்று ஒரு யோசனை தோன்றிற்று. "ஸினிமாவில் சங்கிலி கெட்டுப் போய்விட்டதென்று சொல்லிவிடுகிறேன். என்ன செய்யலாம்? ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய். அதற்காகத்தான் அழுகிறேன் என்றும் நினைத்துக்கொள்வார்கள்" என்றாள்.

## அத்தியாயம் 8

# கல்யாணியின் மறைவு

"என்ன? நீங்கள் கவனிக்கவில்லையா? கல்யாணி வர வரக் கொஞ்சம் தெளிந்துகொண்டு வருகிறாளென்று தோன்றுகிறது. ஒருவேளை நமக்குத் தெரியாமல் அவளுக்கு ஏதாவது தகவல் வந்திருக்குமோ? உங்களுக்கென்ன தோன்றுகிறது?" என்று கேட்டாள் லக்ஷ்மி.

"உஸ், மெதுவாய்ப் பேசு. சங்கிலி விஷயமாய் நான் ஏதாவது 'தடபுடல்' செய்வேனென்று எதிர்பார்த்திருப்பாள். நான்தான் வாயே திறக்கவில்லையே. அதனால் இருக்கலாம். கோபித்தும் திட்டியும் என்ன லாபம்? தனக்காகவே சமர்த்தில்லாத குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்தா வரப்போகிறது? தவிர, முதலில் சினிமாவுக்கு அனுப்பியதே பிசகு. ஆயிரம் ஆயிரமாய்த் தூக்கிக்கொடுக்க வில்லையா? கேட்டவுடன், அப்படியே பிய்த்து உதறி விடலாமாவென்று தான் தோன்றிற்று. வயது வந்த பெண். 'திடும்' என்று அந்தப் பழிகாரனும் வந்து நின்றால் ரஸாபாஸமாய்ப் போய் விடுமென்று எவ்வளவோ அடக்கிக் கொண்டு போகவேண்டியிருக்கிறது."

"நேற்று ஏதோ பேசிக்கொண்டிருந்த பொழுது 'பவுன் அசாத்திய விலை விற்கிறதே. சுந்தரிக்கு உன் ஒட்டியாணத்தைக் கொடுத்து விடு. மலிந்த பிறகு உனக்குப் பண்ணி விடுகிறேன்' என்றேன். அதற்கு 'நான் பெட்டியில் பூட்டி வைத்திருப்பதனால்தானே சொல்லுகிறீர்கள்? இனிமேல் கழற்றிவைப்பதே இல்லை' என்று கோபமாய் எல்லா நகைகளையும் எடுத்துப் போட்டுக் கொண்டாள். அதற்குமேல்

நானும் ஒன்றும் சொல்லவில்லை. எப்படியாவது கண்ணைக் கசக்காமலிருந்தால் போதும். ஒருவேளை உங்களுக்கு ஏதாவது தெரிந்திருந்து எனக்குச் சொல்லவேண்டாமென்றிருக்கிறீர்களோ, என்னமோ?"

"எனக்குத் தெரிந்த மட்டில் ஒரு தகவலும் காணோம். சீமைக்குப்போனானோ, இல்லையா? திரும்பி வருவானோ? வந்தானோ? ஒரு தகவலுமே தெரியவில்லை. வாராமல் எங்கே போவான்? நாளைக்கே பணம் தேவையாயிருந்தால் வந்து நிற்பான். அவளைத் 'தொரண்டு'வான். அவள் ஏதாவது 'குற ஸாகசம்' பண்ணுவாள். முளைக்கிற பொழுதே நீலித்தனமும் கூட வந்துவிடுகிறதே, அதுதான் ஆச்சர்யம்!"

"ஆகா! உங்களுக்கு எப்பொழுதும் பெண்களைப்பற்றிக் குறை சொல்லியே வழக்கம்."

"ஆமாம். உன் பெண் இருக்கிற சவரணைக்கு வாய் வேறு?"

"அந்த ஸாகஸமெல்லாம் உங்கள் கூட்டத்து வழி. பனங்குடியார் ஐச்வர்யம்தான். எனக்கு அதெல்லாம் எப்படித் தெரியும்!"

"சரி, சரி! போதும்!"

*　　*　　*　　*

நடுநிசி. நாகராஜன் ஏதோ கெட்டகனவு கண்டு திடுக்கிட்டான். "அப்பா! அப்பா!" வென்று உரத்துக் கூவினான். சாஸ்திரியார் பயந்துபோய் "என்னடா நாகு, நாகு!" என்று கூப்பிட்டுக் கொண்டே எழுந்து வந்தார். இதற்குள் லக்ஷ்மியும் வந்து சேர்ந்தாள். நாகராஜன் "அப்பா, பயங்கரமான கனவு. அதனால்தான் உளறி விட்டேன். ஏதோ பிசாசு வந்து நெஞ்சில் பெரிய கல்லை வைத்து அதன்மேல் ஏறி நின்றது போலிருந்தது" என்று வெட்கத்துடன் சொன்னான்.

"சரிதான், ஒன்றுமில்லை. எதையாவது நினைத்துக் கொண்டு படுத்திருப்பாய். அஜீரணத்தினலு மிருக்கலாம். எழுந்திருந்து கதவெல்லாம் தாளிட்டிருக்கிறதா வென்று பார்த்துவிட்டுப் படுத்துக்கொள்."

அரைத் தூக்கமும் விழிப்புமாயிருந்த சேஷியம்மாள் "என்னடாப்பா, ஏன் எழுந்து வந்தாய்?" என்றாள். இதற்குள் வாசல்புறம் சென்ற நாகு "கதவு திறந்திருக்கிறதே. இராத்திரி தாளிடவில்லையா?" என்று கேட்டான்.

"நான்தானே தாழ்ப்பாள் போட்டேன்? எல்லாம் சரியாயிருக்கிறதா, பார். குழந்தைகளெல்லாரும் தூங்கு கிறார்களா? சமையல்கட்டுப் பக்கம் போய்ப் பார்ப்போம்" என்று கையில் தடியுடன் எழுந்தார் சாஸ்திரிகள்.

"இடைக்கட்டுக் கதவு பூட்டியபடியே தானிருக்கிறது" என்று லக்ஷ்மி சொல்லிக் கொண்டிருக்கையில், "கல்யாணியைப் படுக்கையில் காணேமே!" என்றான் நாகராஜன்.

"கை கால் அலம்பப் போனளோ, என்னமோ?"

"இல்லை, இல்லை, படுக்கையிலும் காணும், எங்கேயும் காணும்."

"என்னடா அனர்த்தம்? எங்கே போயிருப்பாள்? இராத்திரி படுக்கும்பொழுதுகூட வழக்கம்போல் தானிருந்தாள். எங்கேயாவது குளம் குட்டையில் விழுந்து வைக்கப் போகிறதே? என்ன தோன்றிற்றே, என்னமோ? என்ன கஷ்டகாலமடி அம்மா! இடிமேல் இடியாய் இடிக்கிறதே!" என்று லக்ஷ்மி புலம்பத் தொடங்கி விட்டாள்.

"அப்பா! அட ஐயா! பதருதே. பொழுதுவிடியட்டும்; அண்டை அயலில் விசாரிப்போம். அம்பிகே, ஜகதீசுவரி, இன்றையப் பொழுது இப்படி விடிய வேண்டுமா? பெண் ஜன்மமோ, புண் ஜன்மமோ! நான் பாவி! என்னென்ன கஷ்டங்களை யெல்லாம் பார்க்க இப்படி ஜாம்புவான் போவி

ருக்கிறேனே? அம்மா! லக்ஷ்மி, அழாதே. நீ அழுது என்ன செய்வது? என்றைக்கு அந்தப் பாவியை தேடிக் கொடுத்தோமோ, அன்றுமுதல் அதுக்கும் சுகமில்லை, நமக்கும் சுகமில்லை. என் அம்மா, கல்யாணம்! என் கண்ணே! உன்னை வளர்த்த அருமை என்ன, பெருமை என்ன, புத்தி சாலியான உனக்கு இப்படி ஒரு துர்ப்புத்தி தோன்ற வேண்டுமா?'' என்று அழுதாள் சேஷியம்மாள்.

"அவளுடைய பெட்டி யிருக்கிறதா பார். அவளாய்த் தான் போனாளோ, அல்லது பலவந்தமாய்த்தான் புறப்பட்டாளோ? நமக்கு எப்படித் தெரியும்?'' என்றார் சாஸ்திரிகள்.

"ஏண்டாப்பா, உன்னிடம் ஏதாவது சொன்னாளா? முன்போ லிருந்தாலும், உயிரை வெறுத்து ஏதாவது செய்து விட்டாளோ என்று எண்ணலாம். இப்பொழுதுதான் சகஜமாய்ச் சிரித்துக்கொண்டும் பேசிக்கொண்டு மிருந்தாளே'' என்றாள் சேஷி.

"'இருக்கிற வரையில் முகத்தைத் தூக்கிக் கொண்டிருப்பானேன்? சந்தோஷமா யிருப்பதுபோல் நடித்தால் சுலபத்தில் ஏமாந்து விடுவார்கள்' என்றெண்ணி இப்படிச் செய்து விட்டாளோ, என்னமோ?'' என்று பரிதாபத்துடன் கூறினார் சாஸ்திரிகள்.

"பெட்டி திறந்து கிடக்கிறது. சாமான்கள் ஒன்றுமில்லை. புஸ்தக அலமாரியிலிருந்து சில புஸ்தகங்கள் எடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த மோதிரம் மட்டும் கீழே கிடந்தது'' என்று கையில் ஒரு மோதிரத்துடன் வந்தான் நாகராஜன்.

"சரி, இருப்பதைப் பார்த்தால் தானேதான் போயிருக்கிறாள் என்று தோன்றுகிறது. என்ன செய்யலாம்! கஷ்டகாலம் பிடித்து ஆட்டுகிறது'' என்று சொல்லி சாஸ்திரிகள் கல்லாய் உட்கார்ந்து விட்டார்.

பொழுதும் புலர்ந்தது. எல்லோரும் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்களே யன்றி ஒருவராவது ஒரு வேலையும் செய்யவில்லை. குழந்தைகள் 'பசி பசி' என்று கதறின. லக்ஷ்மி என்ன செய்வதென்றறியாமல் ஆடிக்காற்றி லகப் பட்ட துரும்புபோல் தவித்தாள். சாஸ்திரிகள் உள்ளுக்கும் வாசலுக்குமாய் நடந்துபோய்க் கொண்டிருந்தார். இதற் குள் சேஷியம்மாள் தட்டுத் தடுமாறி எழுந்து ஏதேதோ புலம்பியவளாய் வீட்டு வேலைகளைக் கவனிக்கலானாள்.

வேதனை மிகுதியினால் ஒவ்வொருவரும் தவித்துத் தவித்து உருகினர். அண்டை அயலிலுள்ளவர்கள் வந்து உபசாரங் கூறி, அடங்கிய விசனத்தைக் குபீரென்று பொங்கி எழச் செய்ததுமல்லாமல் அவரவர்களுக்குத் தோன்றியபடி காரணம் கற்பித்துக் கூறினார்கள்.

* * *

கல்யாணி மறைந்ததிலிருந்தே நாகு ஒரு புது மனித னாய் மாறிவிட்டான். ஏற்கனவே கொஞ்சம் கதர், தேசபக்தி இந்தப் பைத்தியமெல்லாம் உண்டு. ஆகவே, கொஞ்சங் கொஞ்சமாய்த் தேச சேவையில் ஈடுபடலானான். வீட்டி லிருந்து குடும்பக் கவலைகளில் உழல்வதைவிடத் தேச சேவையின் பொருட்டு வெளியிலிருந்து விடுவதே உசித மென்று அவனுக்குத் தோன்றிற்று.

ஒரு நாள் "ஸார்! 'ஸ்வராஜ்யா' பேப்பர் ஓரணா!" என்று கூவிக்கொண்டிருந்த பையனைக் கூப்பிட்டாள் சுந்தரி. "ஒரு அணா கொடுத்து இப்பொழுது என்ன பேப்பர்? தமிழ்ப் பேப்பர்தான் வருகிறதே, அது போதாதா? மகா அதிகப் பிரசங்கிகள். என்ன பெண்ணும் பிள்ளையும் அடங் காப் பிடாரிகள். காசு பணம் என்று அருமை தெரிகிறதா? எல்லாம் ஒரு பேப்பர் படித்துத் தெரிகிற சங்கதிகள் போதும். போடா பையா!" என்று விரட்டினாள் பாட்டி.

"இல்லை பாட்டி! சிலசமயம் கடைசியாய் வருகிற தக வல்கள் தமிழ்ப் பத்திரிகைகளில் உடனே வருகிறதில்லை. இங்கிலீஷ் பத்திரிகைகளில் உடனே போட்டுவிடுகிறார்கள். அண்ணா இன்னும் வரக்காணோமே என்று அம்மாதான் வாங் கச் சொன்னாள்" என்றாள்.

"உங்கள் பாடு. என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். பிள்ளையாண்டான் மறியலுக்குப் போயிருக் கிறான். பொம்மனாட்டிகளுக்கு இங்கிலீஷ் பேப்பர் வாங்க வேண்டும். வேறென்ன வேண்டும் உருப்பட" என்றாள் சேஷி.

பத்திரிகையை வாங்கிப் பிரித்த சுந்தரி அன்று சிறை செய்யப்பட்டவர்களில் தன் தமையன் பெயர் இருக்கிறதென் றும், மறுநாள் மற்ற விவரங்கள் வெளி வருமென்று போட் டிருப்பதாகவும் கூறினாள்.

சாஸ்திரிகள் மிகுந்த சலிப்புடன் "மறியலாம், வெங் காயமாம்! இவர்களால்தான் உலகமே நிற்கிறது. பொம்மை தான் கோபுரத்தைத் தாங்குவதாக எண்ணம். எவ்வளவோ பெரியவர்கள் முன்நின்றே ஒன்றையுங் காணோம். இந்தச் சில்லரை பேர்வழிகளெல்லாரும் போய் நின்றால் சுயராஜ்யத் தை உருண்டையாய் உருட்டி இவர்கள் கையில் கொடுத்து விடப்போகிறார்களாக்கும். வராகாவதார ஸ்வாமி பூமியை அப்படியே சமுத்திரத்திலிருந்து தூக்கி வந்தாரோ இல்லை யோ. அதேபோல் இந்தப் பயல்கள் ஸ்வராஜ்யத்தை உருண் டையாய்த் தூக்கி நிறுத்தி விடுவார்கள். வேலையற்றவன்களுக் கெல்லாம் இது ஒரு தொழில். 'அவனவன் பாப புண்ணி யத்துக்கு அவனவன் போகிறான். நமக்கென்ன' என்றிரா மல் அதிகப் பிரசங்கித்தனம் படித்தாயிற்று. ஏதோ ஒரு வேலையைத் தேடிக்கொள்ள, இல்லாவிட்டால் ஊரோடு வாச லோடு விவசாயத்தைப் பார்த்துக்கொள்ள, அதற்கெல்லாம்

சாமர்த்தியம் இல்லை. சோற்றுக் கல்லைப் பொறுக்கமுடியா தவன் சொக்கநாதன் கோயில் மதில் கல்லைப் பிடுங்கப்போகிருனும். படிக்க வைத்தது பிசகாய்ப் போயிற்று. ஏதோ ஓர் உத்தியோகம் பண்ணமாட்டாஞ வென்று ஆசைப்படப் போக, அது இப்படி விபரீதமாய்விட்டது. யாரைச்சொல்லி என்ன பயன்? நீ இடங் கொடுத்துத்தான் அந்தப் பிள்ளைக்கு இந்தத் துர்ப்புத்தி யெல்லாம் பழக்கிவைத்தாய். உன். மன திற்குள் பிள்ளை யாண்டான் ஜெயிலுக்குப் போய்விட்டு வந்தால் பெரிய 'கித்தாப்பு' என்றுதான் எண்ணம். மனம் போலாயிற்று. எக்கேடும் கெட்டு எருக்கு முளைத்துப் போங்கள். என் வார்த்தைகளுக்கென்ன மதிப்பு? நீங்களெல்லோரும் பெரிய தேச பக்தர்கள். உங்களுடன் எதிர் நின்று பேசுவதற்குக் கூட எங்களுக்கு யோக்கியதை இல்லை" என்று சொல்லிப் பெருமூச்செறிந்தார் சாஸ்திரிகள்.

லக்ஷ்மி வாயே திறக்கவில்லை. சேஷியம்மாளும் பதில் பேசவில்லை. அவர்களது மௌனம் அவர் சலிப்பையும் கோபத்தையும் தூண்டலாயிற்று. அதைக்கண்ட சேஷியம்மாள் "என்னமோ அப்பா! இளங்கன்று பயமறியாது என்று போயிருக்கிருன். போனுல் போகட்டும். நாளை விசாரணையிலிருந்து 'விடுபட்டு வந்தால் பிறகு போகாதே என்று கண்டித்துவிட்டால் போகிறது. இல்லை, ஜெயிலுக்கே போனுலும் திரும்பி வந்த பிறகு பனங்குடிக்கே அழைத்துப் போய் விடுவோம். எப்படியாவது சௌக்கியமாய்த் திரும்பி வரட்டும். பிறகு யோசிக்கலாம்" என்ருள்.

* * * *

கல்யாணி காணுமற்போனபொழுது லக்ஷ்மிக்கு ஆறு மாதம். "பெற்று வளர்த்து ஆயிரம் பாடுபட்டவைகளை யெல்லாம் வைத்து வாழ்ந்தாயிற்று. இனிமேல் பிறக்கபோகிறதுகள்தான் சாதிக்கப்போகிறதுகள்!" என்று அழுத்

துக்கொள்ளுவாள். பெண்ணைப் பிரிந்த துயரத்தினால் அவள் நாளுக்கு நாள் இளைத்து எலும்பும் தோலுமானாள்.

போதாததற்கு, நாகு சிறை சென்றதும் சேரவே, புயற் காற்றினால் கொந்தளிக்கும் கடல்போல் குடும்பமே அல்லோல கல்லோலமாய்த் தவித்தது. கவலையில்லாமலிருக்க வேண்டிய குழந்தைகளான ரங்கநாதன், சியாமளி இவ்விருவரும் கூடக் கவலைப்படலாயினர்.

லக்ஷ்மியின் பேறு காலம் நெருங்கியது. அவளுக்குத் தான் பெற்றுப்பிழைப்போமென்ற நம்பிக்கை இல்லை. அவள் துயருறும்போதெல்லாம் பாட்டி, "போனதெல்லாம் போயிற்று! தக்காத பண்டம் தரையிலே கவிழ்ந்துவிட்டது. அவள் புத்திசாலித்தனத்திற்கும் அழகிற்கும் அவளை நேரும் கூறுமாய் வைத்து வாழ அந்தப் பாவிப்பயல் கொடுத்து வைக்கவில்லை. நம் வயிறும் பாவத்தைப்பண்ணிப் பதராய் விளைந்திருந்தது. என்ன செய்யலாம்! என்னமோ நீயாவது உன் குஞ்சுகளுக்குத் தாயாயிருந்தால் சரி. ஜன்மாந்திரத்தில் நல்ல பூவை எடுத்துப் பூஜை செய்திருக்க மாட்டோம். இப்படி ஏங்கி இடி விழுந்து கொண்டிருந்தால் உன் உடம்பு தான் எதற்காகும்? மதிலிடிந்தால் கட்டலாம். மனமிடிந்தால் கட்ட முடியுமா?" என்பாள். சாஸ்திரியார் ஏதோ சாப்பிடுவதும் சுற்றிச் சுற்றி வருவதுமாயிருந்தாரேயன்றி ஒன்றையும் கவனித்தவரல்ல. லக்ஷ்மியின் உடல் நிலை நாளுக்கு நாள் க்ஷீணிக்கலாயிற்று.

# அத்தியாயம் 9

## இடிமேலிடி

"ஏ மூடம்! ஏ மட சாம்பிராணி! உன்னையும் பெற்ருளே வேலை யற்று! தேடி எடுத்த திருவாழி மோதிரமே! கண்டு எடுத்த கணையாழி மோதிரமே!" என்று உரத்த குரலில் கூவுவது கேட்டுக் கண் விழித்தார் பதஞ்சலி சாஸ்திரிகள். திடுக்கிட்டார். பிரசவ அறையிலிருந்து லக்ஷ்மி வெளியே வந்து அவரது சாய்வு நாற்காலிக் கருகே நின்று முன் சொன்னபடி கூவிக்கொண் டிருந்தாள்.

"அம்மா! அம்மா! இங்கே வா சீக்கிரம்! ஜன்னியோ என்னமோ!" என்று பயத்தால் நடுங்கியவராய்க் குளறிஞர் சாஸ்திரிகள்.

சேஷியம்மாள் ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து அவளைக் கெட்டியாய்க் கட்டிக்கொண்டு, "என்னம்மா! உள்ளே வாடி!" என்று மெதுவாய் அவளை அவ்வறைக்குள் அழைத்துச் செல்ல எத்தனித்தாள்.

லக்ஷ்மியோ மதங் கொண்டவள்போல் திமிறுகிருள். ஆடுகிருள். ரங்கநாதன் டாக்டரை அழைத்து வர ஓடினன். சாஸ்திரிகள் என்ன செய்வார், பாவம்! தவியாய்த் தவிக்கிருர். லக்ஷ்மியைச் சமாதானப் படுத்தி படுக்கச் செய்வதற்குள் போதும் போதுமென்ருய் விட்டது. கைக் குழந்தையோ 'குவா குவா' வென்று ஓயாமல் கதறுகிறது. சேஷியம்மாளும் கூடவே அழுகிருள். "ஏதடா கஷ்டம்! ஒன்றின் பின் ஒன்ருய் என்ன தொல்லையடா! அந்தப் பெண்ணுல் பட்ட துன்பங்களும், இந்தப் பெரிய குட்டிச்

சுவர் ஜெயிலுக்குப் போனதும் போதாதா? இன்னும் என்ன பேரிடி தலையில் விழக் காத்திருக்கிறதோ? அட கர்மமே! இது பெரிய துக்கசாகரமாகவன்றோ இருக்கிறது? தெரியாமலா பெரியவர்கள் 'சம்சாரம் சாகரம் துக்கம்' என்று சொல்லியிருக்கிறார்கள்! ஜோஸியர்கள் வாயிலெல்லாம் மண்ணைப் போடு. ஏழரை நாட்டான், எட்டரை நாட்டான், ரொம்பக் கடுமையா யிருக்கும். இதைப் பண்ணு, அதைப் பண்ணு என்றதற்கு எல்லாவற்றையும் தானே செய்தேன்? கண்ட பலனென்ன? ஓயாமல் மனது சலித்துச் சலித்து உன்மத்தமாகிறதே அதுதான் மிகுதி. என்ன கஷ்டம்! சகிக்க முடியவில்லையே, ஈசுவரா! என்னதான் செய்வது? ஒன்றுமே புரியவில்லை. பூணூலை அறுத்தெறிந்து விட்டு ஓடி விடுவதுதான் மேல். எல்லாம் எக்கேடும் கெட்டுப் போகட்டும். கர்மம், கர்மம், சஞ்சித கர்மம்!" என்று படீர் படீரென்று தலையிலடித்துக் கொண்டார் சாஸ்திரியார். டக் டக் என்று பூட்ஸ் ஓசைகேட்டது. மறு நிமிடம் டாக்டர் தோன்றினார். லக்ஷ்மி, "அண்ணா, அண்ணா! வாருங்கள். தின்பதற்கு என்னவேண்டும்?" என்றாள்.

டாக்டர் அருகில் நெருங்கி, "அம்மா! கொஞ்சம் தர்மாமீட்டர் வைத்துக் கொள்ளுகிறீர்களா?" என்று மிருந்த பரிவுடன் கேட்டார். அவள் அப்படியே செய்ய, டாக்டர் தர்மாமீட்டரைப் பார்த்துவிட்டு, "சுரமில்லை. உடம்பை என்ன செய்கிறது?" என்றார்.

லக்ஷ்மி எழுந்து நின்றுகொண்டாள். "உடம்பா? யாருக்கு என்ன? உடம்பு. நீ யாரடா கூற்றுவனுட்டம் வந்திருக்கிறாய்? உனக்கென்ன கொம்பு முளைத்திருக்கிறதா?" என்று டாக்டரிடம் நெருங்கினாள். டாக்டர் பயத்துடன் மெதுவாய் வாசல்படி யண்டை நகர்ந்து நின்று கொண்டவராய், "படுத்துக் கொள்ளுங்கள். பாட்டி! நீங்கள் எழுந்து

படுக்க வையுங்கள்'' என்று சொல்வதற்குள் லக்ஷ்மி டாக்டருக் கருகில் வந்து இரகசியமாய் "இந்த ராக்ஷஸியும், அந்த ராக்ஷஸனுமாய் (சாஸ்திரியாரை) என் குழந்தையையும் என்னையும் தின்றுவிடுவார்கள். எப்படியாவது காப்பாற்றுங்கள். உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் தருகிறேன்" என்று கெஞ்சிய வண்ணம் அழலானாள். அவளுக்கு மூளை கலங்கி விட்டதென்று கண்டு கொண்டார் டாக்டர். எவ்வளவோ சமாதானம் சொல்லி அவளைப் படுக்கச் சொல்ல, அவள் மறுபடியும் அவரண்டை வந்து, "ஏற்கனவே இரண்டு குழந்தைகளை இவர்களுக்கே பலியிட்டு விட்டேன். என் கண்மணி, என் தங்கம், என் ராஜாத்தி கல்யாணியையும் தின்றார்கள். என்னப்பன், என் நாகராஜனையும் இவர்கள் வாயிலேயே போட்டு விட்டேன். இதையாவது காப்பாற்றுங்கள்'' என்று தொடங்கி விட்டாள். டாக்டர் பாடு திண்டாட்டமாகி விட்டது. மெதுவாய்க் கூடத்திற்கு வந்து சாஸ்திரியாரிடம், "மூளை பிசகி இருக்கிறது. வேறு மருந்து எழுதிக் கொடுக்கிறேன். வாங்கிக் கொடுங்கள். தூங்கினால் நல்லது. குடல் சுத்தமானால் பித்தம் குறையும். குழந்தையை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள். மிதமிஞ்சின வாஞ்சையால் கொன்று விடப் போகிறாள்'' என்று எச்சரித்துவிட்டுப் போனார்.

"இது ஒன்றுதான் குறைவு. இதுவும் வந்து விட்டதா? அடியம்மா சுந்தரி! சியாமளத்திற்கும் ரங்கநாதனுக்கும் ஏதாவது கொடு. அம்மாவிடம் பாட்டி இருக்கட்டும். வெளிவேலைகளையெல்லாம் சியாமளியும் நீயுமாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்றுகூறி, "ஹூம்! ஒரு பெண்ணை இழந்தாயிற்று. பிள்ளையை உயிரோடு இழந்தாயிற்று. இவளுக்கும் இப்படி வரவேண்டுமா? என்ன பாவம் செய்தோமோ? அனுபவித்துத் தானே தீர வேண்டும்? மாட்டேனென்றால்

விடுமா?" என்று சொல்லிக்கொண்டிருக்கையில் "அப்பா! சுவாமிகள் வாசலில் வந்திருக்கிறார்" என்றாள் சியாமளா.

"சுவாமிகளா? உட்காரச் சொல். அம்மா சியாமளம், அம்மாவுக்கு உடம்பு ஒன்றுமில்லை. இருந்தாலும் கூடத்திலேயே உட்கார்ந்து படித்துக் கொண்டிரு. ஏதாவது சொன்னால் என்னைக் கூப்பிடு. கயிற்றை எடுத்துக் கொண்டு குதிக்கவும் பூப்பறிக்கவும் போகாதே. அக்காவுக்கு உதவியாய் இனிமேல் எல்லாக் காரியங்களும் நீதான் செய்யவேண்டும்" என்று சொல்லி வாசல் தாழ்வாரத்திற்குச் சென்றார். சுவாமி கண் மூடியவராய்,

"அந்தமிலா மாதேவன் கைலைவேந்தன்
அரவிந்த சரணங்கள் முடிமேற்கொள்வாம்
பந்தமில்லை பந்தமில்லை பந்தமில்லை
பயமில்லை பயமில்லை பயமில்லை
எனக்குமுன்னே சித்தர்பலரிருந் தாரப்பா"

என்று பாடிக்கொண் டிருந்தார். சாஸ்திரியார் கைகளைக் கூப்பியவராய் "சுவாமி வந்து நேரமாயிற்றோ?" என்று கேட்டார். சுவாமிகள் திடுக்கிட்டுக் கண்விழித்து, "அப்பன்! காலச்சக்கரம் சுற்றி வருகிறது. நடப்பது நடந்தே தீரும். ஏன் வீண் கவலை? இனி யொன்றும் சேதமில்லை. சிவன் செத்துவிட்டானோ? உமையும் செத்தாளோ? என் அம்மணி கற்பகம், கற்பகத்தருவாயிற்றே. கற்பகத்தை அண்டினவர்களுக்குக் குறையுண்டோ?" என்றார்.

சேஷியம்மாளுக்குப் பெரும்பாலும் சாமிகளெல்லாம் போலிச் சாமிகளென்றும், மோசம் செய்து எதையாவது அபகரித்துப் போய் விடுவார்களென்றும் எண்ணம். சொன்னால் சாஸ்திரியார் கோபிப்பாராகையால் வெளிப்படையாய்ச் சொல்ல மாட்டாளே யன்றி, சுவாமிகள் வருகிறாரென்றால் போதும்; முணு முணுக்கத் தொடங்கிவிடுவாள்.

"சுவாமியாம் பூதமாம்! என்ன வேண்டிக்கிடக்கிறது? வீடு கிடக்கும் கிடையில் வேதாந்தம் ஒன்று தான் பாக்கி. இந்தப் பாழும் 'சாமி' வந்தது விருந்துதான் ஒவ்வொன்றாய்க் கஷ்டங்கள் வரத் தொடங்கின. சாமியானால் எங்கேயாவது காட்டுக்கோ மலைக்கோ போகிறது தானே? ஊருக்குள் என்ன காரியம்? சம்சாரிகளோடு என்ன பேச்சு? பிச்சை எடுக்க, சாப்பிட, கோயிலிலேயே அடைந்துக் கிடக்க. அதை விட்டுவிட்டுத் தெருத் தெருவாய் 'வீதி விலாசம்' போவானேன்? நன்றாயிருக்கிறது! கர்மம், எங்கிருந்தோ வந்து சேருகிறதே. அவலக்ஷணங்கள்" என்று கூறிக்கொண்டிருக்கையில் சுந்தரி குறுக்கிட்டு, "ஏன் பாட்டி, நான் சொன்னால் பெரியவர்களைச் சொல்லலாகாது, தோஷம் என்பாயே? நீ மட்டும் திட்டினால் தேவலைபோலிருக்கிறது! சுவாமிகள் வந்ததினால் கெடுதல் வந்துவிடுமா? அவர் வாராம லிருந்தால் கெடுதல் வாராதிருந்து விடுமா?" என்றாள்.

"இந்தக் காலத்துக் குட்டிகளுக்கே வாய் அதிகம். தொண்ணூறும் பத்தும் குறுக்கே இருபதும் ஆறும்போலப் பேச ஆரம்பித்து விடுகிறதுகள். உனக்கு உலகத்தில் நடக்கும் அக்கிரமங்கள் என்ன தெரியும்?" என்று சொல்லிக் கொண்டிருக்கையில் லக்ஷ்மி பாடத்தொடங்க, சேஷியம்மாள் எழுந்து சென்றாள்.

* * *

"அம்மா! மாப்பிள்ளை ராஜு வேலை தேடுவதற்காக இங்கே வரப் போகிறானும். அடுத்த மாதம் முதல் வாரம் வருவதாய் எழுதியிருக்கிறான். நாகு வந்தால் ஒருவேளை இவளுக்குத் தெளியலாம் என்கிறார் டாக்டர். அவன் வருவதற்கு இன்னும் ஒரு வருஷம் செல்லும். பாளையங்கோட்டையில் இவனுக்குப் பம்பு அடிக்கிற வேலையாம். உடம்பு நன்றாய்ப் பருத்திருக்கிறானும். இனி

மேல் ராஜமகேந்திரவரத்துக்கோ கோயமுத்தூருக்கோ கொண்டுபோய் வைக்கப் போகிறார்களாம். அவன் வந்தால் தான் தெளியுமென்றால் அது வரையில் இப்படியே இருக்க வேண்டியதுதான். உடலில் நல்ல ரத்தம் ஊறிப் பித்த கோசம் சரியானால் தெளிந்துவிடுமாம்......யார் கண்டார் கள் ?...... உம்......." என்று பெரு மூச்செறிந்தார் சாஸ்திரி கள்.

இவ்வளவு துன்பங்களுக்கிடையில் தன் கணவன் வரு வதை நினைத்துச் சந்தோஷத்துடன் நாட்களை எண்ணிக் கொண்டிருந்தாள் சுந்தரி.

கல்யாணியின் கலியாணம் நடக்கும்போது, குடும்பம் கவலை யென்பது என்னவென்றே அறியாமல் இருந்ததையும், கலியாணம் வெகு விமரிசையாய் நடந்ததையும், பின்னால் தன் கலியாணம் நடக்கவிருக்கும்போது கஷ்ட நிஷ்டூரங்க ளும், ஏழ்மையும் வீட்டில் ஏற்பட்டு விட்டதையும் நினைத்துச் சுந்தரி ஏங்குவாள். ஆனால், ஒரு விஷயத்தில் அவளுக்குத் திருப்தி. தனக்குச் சீர் சிறப்புக்கள் ஒன்றும் இல்லா விட் டாலும், தன் கணவன் அத்திம்பேரைப்போல் இல்லாமல் யோக்யனும் தன்னிடம் பிரியமுள்ளவனும் இருப்பதை நினைத்து மகிழ்வாள்.

சியாமளி படிப்பை நிறுத்தி ஆறுமாத மாகிறது. "வீடு கிடக்கும் கிடையில் பள்ளிக்கூடமும் வேண்டாம்; பறைக் கூடமும் வேண்டாம்; படித்தவர்களெல்லாரும் என்ன செய்கி றார்கள் ? சுந்தரி மெட்ரிகுலேஷன் படித்து என்ன புரட்டி வைத்திருக்கிறாள் ? காசைக் கரியாக்குகிற வழிதான் போதும் படித்தது" என்று திட்டம் செய்துவிட்டாள் சேஷியம்மாள்.

"ரங்கநாதன் இந்த வருஷம்தான் பரீக்ஷைக்குப் போக வேண்டும். வீடோ இவ்வளவு அலங்கோலமா யிருக்கிறது.

நெல் விலை இறங்கிவிட்ட படியால் ஊரிலிருந்து கடந்த வருஷ முதலிலிருந்தே பணம் சரியாய் வரவில்லை. சென்னைக்கு ஏனடா வந்தோ மென்றிருக்கிறது. இந்த வருஷத்தோடு மறு படியும் பனங்குடிக்கே போகவேண்டியதுதான்” என்று சொல்லிக்கொண்டிருந்தார் சாஸ்திரிகள்.

சியாமளியோ “நம் தமக்கைகளுக்கு 15, 20 ரூபாய் கொடுத்துப் பாட்டுவாத்தியார் வைத்துப் பாட்டுச் சொல்லிக் கொடுத்தார்கள். படிக்கவும் முடிந்தது. நம்முடைய முறை வரும்பொழுது வீட்டில் இவ்வளவு துன்பங்களும் வந்துவிட் டன. இதுவும் நம்முடைய துர்ப்பாக்கியம்தான். பனங்குடி யில் பாட்டுவாத்தியார் ஏது?” என்று நொந்துகொள்ளு வாள்.

## அத்தியாயம் 10.

# பட்டகாலிலே படும்

" ஸுந்தரி! ஏதடி காகிதம்? ரொம்பவும் கனமாயிருக்கிறதே! யார் எழுதி யிருக்கிறார்கள்? பிரித்துப் பார்!" என்றாள் சேஷியம்மாள்.

" இல்லை, பாட்டி! பிரித்துப் பார்த்தால் அப்பா கோபித்துக் கொள்வார். முத்திரையைப் பார்த்தால் பனங்குடி என்று தோன்றுகிறது. அவரே வந்து சொல்லட்டுமே."

" அப்படிக் கோபித்துக்கொண்டால் நான் சொல்லிக் கொள்ளுகிறேன். பிரித்துப் படி" என்றாள்.

சுந்தரி மனத்திற்குள் மிகுதியும் பயந்தாளானாலும் பாட்டியின் வார்த்தையைத் தட்டமாட்டாமல் பிரித்துப் படிக்கலானாள் :—

பனங்குடி.

மாமா அவர்களுக்குப் பிரணதார்த்திஹர தீக்ஷிதர் குமாரன் நீலகண்டன் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து எழுதிக் கொண்டது. உபயகுசலோபரி. நீங்கள் ஊருக்குப் போன பிறகு இங்கே ஒரு நடை கூட வந்து போகவில்லை. நில புல விஷயங்களை இப்படி நம்பி விட்டுவிட்டுப் போனதைப்பற்றி எங்களுக்கு நிரம்பவும் வருத்தம். நான் எழுதினால் நீங்கள் ஏதாவது தப்பர்த்தஞ் செய்துகொள்ளப் போகிறீர்களோ வென்று இதுவரையில் எழுதவில்லை. என்றாலும், தங்களுக்குத் தெரிவிக்காமலிருக்கக் கூடாதென்று எழுதத் துணிந்தேன். நேற்று நாங்கள் வடகுடிக்கு எங்கள் அம்மாஞ்சி மிருத்யுஞ்ஜய சாஸ்திரியின் மைத்துன னகத்துக்குப் போயிருந்தோம். அப்பொழுது 'கச கச கிசு கிசு' வென்று இரண்டொரு வார்த்தை காதில்பட்டது.

போனமாதம் ராமு (ராமஸ்வாமி தீக்ஷிதன்)' யாரோ ஒரு குடியானப் பெண்ணை என்னமோ சொன்னானென்று அவள் வகையராக்கள் சாலையோரத்திலிருந்த வைக்கோற் போருக்குத் தீ வைத்து விட்டார்கள். ஏக அமர்க்களம் வீடுகள் தப்பினது தம்பிரான் புண்ணியம். இது விஷயங்கள் ஏற்கனவே உங்களுக்குத் தெரிந்திருக்கும். உங்கள் மேங்காட்டுக் கொல்லை ஈச்ச மரங்களில் கள் சட்டியிருக்கிறது. இவைகளை விட முக்கியமான விஷயம் இன்னொன்று. ராமு பொய்க் கையெழுத்துப் போட்டு வரப்போரத்து நன்செய்யையும் மேங்காட்டுக் கம்பங் கொல்லையையும் வழ. கொழ. கா. கி. காந்தவராயன் செட்டியாரிடம் அடமானம் வைத்து இருப்பதாகவும் இரகசியமாய்த் தெரியவந்தது.

இது விஷயம் நான் எழுதினதாக வெளியே தெரிய வேண்டாம். நீங்களாகத் தற்செயலாய் வருவதுபோல் வந்து கண்டு கொள்ளவும். வெளியே தெரிந்தால், எங்களுக்குக் கஷ்டம். தீக்ஷிதன் அகமுடையாளுக்குத் தங்கக் கவசமாய்ப் பண்ணியிருக்கிறான். இதெல்லாம் ஏதோ பங்காளிக் காய்ச்சலினால் சொன்னேனென்று அலட்சியமா யிராமல் உடனே வந்து மேல் நடக்க வேண்டியவைகளை ஒழுங்கு செய்யும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். இதைத் தந்திபோல் பாவித்து உடனே வரவும். க்ஷணத்துக்கு க்ஷணம் என்ன நடக்குமோ! இதுதான் எனக்குத் தெரிந்தது. இன்னும் என்ன செய்திருக்கிறானோ? முந்தாநாளே எழுதியிருக்க வேண்டியது.—தபால் தலை வாங்கக் காசில்லை. தலை ஒட்டாமற் போட்டால் என்னவாகுமோவென்று பயந்து இன்றைக்கு எழுதினேன். வேணும்.

அநேக நமஸ்காரம்,

(அப்பா சொற்படி) நீலகண்டன்.

இந்த விஷயங்களைக் கேட்கக் கேட்க, சேஷியம்மாளுக்கு உடல் பறக்கிறது. தீக்ஷிதனை ஒரே உலுக்காய் உலுக்கித் துவையலாக்கி விடலாமா வென்று தோன்றுகிறது. சுந்தரியை மெதுவாய் அழைத்து, "அம்மாவுக்குச் சித்த ஸ்வாதீன மில்லாதிருந்தாலும் சில விஷயங்கள் நன்றாய்த் தெரிகின்றன. இதுவும் தெரிந்து இன்னமும் விபரீதமாகி விட்டால் என்ன செய்கிறது? இப்பொழுது தான் கொஞ்சம் தூங்குகிறாள். கடிதத்தை மடித்துவை. அப்பா வந்த பிறகு நானே கொடுத்து இரகசியமாய்ச் சொல்லுகிறேன். எப்படியும் இன்றை வண்டிக்குப் போகமுடியாது. நாளை இராத்திரிதான் போகவேண்டும். என்ன செய்யலாமடியம்மா? நாலைந்து நாட்களுக்கு மேலாகிறது கடிதம் எழுதி. இதற்குள் அங்கே என்ன நடந்திருக்கிறதோ! இவன் ஒரு அஸமஞ்சம். இரண்டு வருஷமாய்ப் 'போய்வாடா, போய் வாடா' என்கிறேன். மகா சோம்பல். பெரியவாள் தேடி வைக்காவிட்டால் எப்படிக் குடித்தனத்தைப் பார்ப்பானோ? நானும் எத்தனையோ பெயரைப் பார்த்திருக்கிறேன். இவனைப்போல் சோம்பலாண்டியைக் கண்டதேயில்லை. போதும் போதாததற்கு வேதாந்த விசாரணை ஒன்று. குடிகாரச்சாமி ஒன்று" என்று சொல்லிக்கொண்டிருக்கையில் லக்ஷ்மியின் கைக் குழந்தை அழ, எழுந்து உள்ளே சென்றாள்.

அவள் எண்ணமெல்லாம் பனங்குடியிலேயே யிருந்தது. "எதை என்ன செய்திருப்பானோ? வீட்டிற்குள் போட்டிருந்த சாமான்களை யெல்லாம் என்ன செய்தானோ? வீடே எந்த நிலைமையிலிருக்கிறதோ?" என்று ஒவ்வொன்றாய்க் கற்பனை செய்து பார்த்துப் பார்த்துத் தவிக்கலானாள்.

*　　　　　*

லக்ஷ்மிக்குப் பிராணபயம் ஒன்றுமில்லை என்றும், புதிதாய்த் திடுக்கிடக்கூடிய சம்பவங்கள் எதையும் கூறவேண்டா

மென்றும் கண்டிப்பாய்க் கூறி எச்சரித்தார் டாக்டர். சாஸ்திரியார் பனங்குடிக்குப் புறப்பட்டார்.

அவர் பனங்குடி சேரு முன்னமேயே தீக்ஷிதன் காரைக்காலுக்கோ புதுச்சேரிக்கோ ஓடிவிட்ட செய்தி எதிர்கொண்டு வந்துவிட்டது. மாங்குடி ராஜூ சாஸ்திரிகள் ஏதோ "சரங்கி" விஷயமாய் மாயவரத்திற்கு வந்தவர், மாயவரம் ஜங்ஷனில் இவரைச் சந்தித்து, தீக்ஷிதன் ஸம்ஸார ஸஹிதம் எங்கேயோ ஓடிவிட்டா னென்பதைத் தெரிவித்தார்.

சாஸ்திரியார் செய்வதின்னதென்று விளங்காமல் தவிக்கலானார். பனங்குடி வாசிகளில் பெரும்பான்மையோருக்கு இந்தச் செய்தியே தெரியாது. தெரிந்த சிலர் "இவருக்கெப்படித் தெரிந்திருக்கும்? தெரிந்து வந்திருக்கிறாரா? தற்செயலாய் வந்திருக்கிறாரா?" என்று பேசிக்கொண்டனர். மணியக்காரர் தமக்கொன்றும் தகவலே தெரியாது என்றார்.

சாஸ்திரியாருக்குப் பூமியே சுற்றுவதுபோல் தோன்றிற்று. தஸ்தாவேஜுகளை எடுத்துப் போகாமல் பனங்குடியிலேயே வைத்துப் போனதற்காகத் தம்மையே நொந்து கொண்டார். "அடாடா! பணமோசடி! பொய்க் கையெழுத்து! என்ன அநியாயம்! எங்கே போனானோ? கொழும்போ, பினாங்கோ! எங்கே தொலைந்திருக்கிறானோ? சிவில் ஜெயிலாயிருந்தால் நம்முடைய சோற்றைத் தின்றுவிட்டுப் போவான். இது கிரிமினல் குற்றமாயிற்றே? உடனே போலீசுக்குத் தெரியப்படுத்த வேண்டும். வீட்டைத் திறந்து பார்ப்போம். பாத்திரம், பண்டங்கள், இரும்புப் பெட்டியைக்கூட அடித்துக்கொண்டு போய்விட்டிருப்பான். கதவுகள் தூண்கள் எல்லாவற்றையும்கூட பேரம் பண்ணியிருப்பார் தீக்ஷிதர்வாள். தீக்ஷிதனோ, ராக்ஷஸனோ வென்ற வசனம் சரிதான். சுகமாய் வெள்ளாமையைப்

பார்த்துக்கொண்டு அடைத்துக் கிடக்கவொட்டாமல் விதி பட்டணம் சந்திக்கு இழுத்தது. பணத்தையெல்லாம் ஸர்ட்டிபிகேட்டாக மாற்றியாயிற்று. பட்டணத்திற்குப் போனதற்கு ஒரு பெண்ணையும் பிள்ளையையும் இழந்தாயிற்று. கைக்காசையெல்லாம் கரியாக்கி, பள்ளிக்கூடத்திற்கும், டாக்டருக்கும், வீட்டு வாடகைக்கும் அழுது வீணாக்கினது தான் மீதி. மாப்பிள்ளை சினிமாக்குப் போனதும் நாடகம் ஆடினதும் வேறு. இப்பொழுது இளைய மாப்பிள்ளைக்குத் 'திரை' தூக்கியிருக்கிறது. வேஷம் வந்து ஆடவேண்டியதுதான் பாக்கி. இவன் ஏதோ பணக்கார வீட்டுப் பிள்ளையாயிற்றே என்று நிலைமை தெரியாமல் செலவு செய்து பெண்ணைக் கொடுத்தாயிற்று. வேலை அகப்பட வில்லையாம். மூன்றுவது மாப்பிள்ளை வந்தாகவேண்டும்............விதியே! விதியே!" என்று சொல்லிக்கொண்டே கதவைத் திறந்தார் பதஞ்சலி சாஸ்திரிகள்.

## அத்தியாயம் 11

# உத்தியோக வேட்டை

ரங்கநாதன் படிக்கும்பொழுதே, விடுமுறைநாட்களில் சுருக்கெழுத்து, டைப் அடித்தல் முதலிய பரீட்சைகளிலும் தேறி இருந்தான். ஆகையால் மேற்படிப்பு வேண்டாமென்றும் வேலைக்குப் போவதே நல்லதென்றும் அபிப்பிராயப் பட்டார் சாஸ்திரிகள். பெரும்பாலும் பல குடும்பங்களில் கடைசிக் குழந்தைகளாய்ப் பிறப்பவர்களுக்கு இப்படியே ஏதாவது தடைகளும் கஷ்டங்களும் வந்து சேருகின்றன. ஏதோ படிப்படியாய் உத்தியோகத்தில் உயரும் சிலருக்கேயன்றி எஞ்சிய குடும்பங்களில் கடைசி வரிசைக் குழந்தைகளின்பாடு கஷ்டமாகவே முடிகின்றது.

நமது ரங்கனும் இத்தகைய பரமசங்கடமான நிலைமையில்தான் வேலைக்கு அலைந்து கொண்டிருந்தான். வாய்த்தவிடும் போய் அடுப்பு நெருப்பும் அவிந்த கதை போல், பணமும் போய் வியாதிகளும் வந்து குடும்பம் தத்தளிக்கலாயிற்று. பெரிய கம்பெனிகள் முதல் சாதாரணச் செட்டிகடை வரையில் வேலை கிடைத்தால் போகச் சித்தமாயிருந்தான் ரங்கன். முப்பது ரூபாய் கிடைத்தாலும் போதும். பால் செலவுக்காவது உதவும். ஆனால் வேலை கொடுப்பாரைத் தான் காணோம்.

ராஜூவுக்கும் வேலையில்லை. எங்கே மனுப்போட்டாலும் பிராம்மணனா, அப்பிராம்மணனா என்ற கேள்வி. மனுப்போடுவதற்கு மட்டுமே ஐம்பது ரூபாய் தபால் செலவாகியிருக்கும்.

"வெள்ளைக்காரனுக் கெல்லாம் பெண்பிள்ளை டைபிஸ்ட்தான் வேண்டுமாம். மற்றவர்களுக்கெல்லாம் அப்பிராம்மணன்தான் வேண்டுமாம். இனிமேல் மனுப் போடுவதானால் பூணூலை அறுத்தெறிந்துவிட்டு, ரங்கசாமி நாயுடு என்று தான் கையெழுத்துப் போடவேண்டும்" என்று மிகுந்த வெறுப்புடன் கூறினான் ரங்கு.

பரிமாறிக் கொண்டிருந்த சுந்தரி, "ஆனால் அப்படி யாவது செய்து பாரேன். பலித்தால் உன் யுக்தியை மாப்பிள்ளைக்கும் கொஞ்சம் சொல்லிக் கொடுத்தால் நல்லது தானே!" என்றாள்.

"அது ஒன்றுதான் குறைவு. அவருக்கு அவர் தகப்பனார் சிபாரிசு பலமாயிருந்தும் வேலை கிடைக்கவில்லை என்பது ஆச்சரியம்தான். நான்தான் நாதியற்றவன். அவருக்கென்ன? இன்றைக் கில்லாவிட்டால் நாளைக்கே நல்ல வேலை கிடைக்கிறது. என்னைப் போலவா?" என்றான்.

இதுவரையில் மௌனமாயிருந்த ராஜு, "எனக்கு மட்டும் யார் வேலையை வைத்துக்கொண்டு அழைக்கிறார்கள்? ஏதாவது நல்ல வியாபாரம் செய்வதானால் அப்பா முதல் போடுகிறேன் என்கிறார். என்ன வியாபாரம் செய்கிறது? 'பெட்ரோல் பங்க்' வைக்கலாமென்று பார்த்தேன். ஊரெங்கும் பஸ்ஸும் காரும் ஓடுகிறது. ஆனால், அதில் ஆயிரக் கணக்காய்க் கடனாகக் கொடுத்துவிட்டு மாதம் முழுவதும் புஸ்தகமும் கையுமாய் ஆளை அனுப்பி ஐந்தும் பத்துமாய் வசூலிக்கவேண்டுமாம். இல்லாவிட்டால் இரண்டு மூன்று கார் வாங்கி டாக்ஸி விடலாமாவென்று யோசித்தேன். அவ்வளவு பணத்தைப் போட்டு நடத்துவதற்கு, டிரைவர்கள் மோசடி செய்யாமல் பணத்தை நம்மிடம் கொடுத்தால்தான் உண்டு. இல்லாவிடில் முதலே போய்விடும். வேறு என்ன தொழில்தான் செய்வது? அதைவிட மோட்டார் டிரைவ

ராய்ப் போகலாமேயென்று கூடத் தோன்றுகிறது. கௌரவ மென்ன, அகௌரவ மென்ன? கைத்தொழிலுக்குத்தான் இந்தக் காலத்தில் பெருமை" என்றான்.

"அது ஒன்றுதான் குறை. மிராசுதார் பெண், புரொபஸர் வீட்டு மாட்டுப்பெண் என்பதெல்லாம் போக, மோட்டார் டிரைவர் சம்சாரம் என்றுதான் இனிமேல் சொல்லிக் கொள்ள வேண்டும்! பேஷ்! பேஷ்! முதல் தரமான யோசனை! சொன்ன வாய்க்குச் சர்க்கரைதான் போடவேண்டும்" என்றாள் சுந்தரி.

"இது கிடக்கட்டும், ரங்கா! நீ என்னமோ சொல்ல வந்தாயே, அது என்ன?" என்றான் ராஜு.

"இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டுவேலை ஒப்புக்கொள்ளப் போகிறேன். முதலில்லாத வியாபாரம். மாதத்துக்கு ஒரு பத்துப் பேரையாவது பிடித்தால் நம் அதிர்ஷ்டம் எப்படியாகிறதோ, பார்ப்போம்" என்றான்.

"என்னடா! அதற்கு அசாத்ய சாமர்த்தியமும், சவடாலும், பொறுமையும் வேண்டுமே. ஆளுக்குத் தகுந்த ஆட்டம் ஆடவேண்டுமே. என்ன சால்ஜாப்புச் சொன்னாலும் ஆளைவிடாமல் எப்படியாவது மடக்கி வழிக்குக் கொண்டுவர வேண்டும். ஒரு பேர்வழியை இன்ஷ்யூர் பண்ணச் செய்வதற்குள் ஏழு செருப்புத் தேய்ந்துவிடும். சைகிள் வாங்க வேண்டும். வழியில் யாரைக் கண்டாலும், 'என்ன ஸார்! தயவில்லை' என்று கேட்கவேண்டும். தையற்கார சாயபு முதல் காய்க்காரி கண்ணம்மாள் வரையில் எல்லோருக்கும் கூழைக் கும்பிடு போடவேண்டும். இத்தனை சதாவதானம் பண்ணினால்தான் ஒருவனைப் பிடிக்கலாம். உனக்கோ கன்னத்தி லடித்தாற்கூட ஸ்வரத்தோடு அழத் தெரியாதே! நீயாவது, இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டு வேலை பார்க்கவாவது" என்றான் ராஜு.

"ஆமாம், ரங்கனால் முடியுமா? உங்களைப்போல் அரட்டைக்கல்லி அடிப்பவர்களா யிருந்தால்தான் அந்த வேலைக்கு லாயக்கு" என்று குறும்புத் தனமாய்ச் சிரித்தாள் சுந்தரி.

"ரங்கா, பார், நீயே பார்! என்னை வெறும் அரட்டைக் கல்லி என்கிறாளடா, என்ன தைரியம்! அவள் கிடக்கிறாள், நாளைக்கே நமது காரியத்தை ஆரம்பித்து விடுவோம். நீ உனக்குத் தெரிந்தவர்களைப் பிடி. நானும் எனக்குத் தெரிந்த தையற்கார சாயபுக்கள், சமையற்காரர்கள், பாடகர்கள் இப்படி ஒவ்வொருவராய்ப் பிடித்துப் பார்க்கிறேன்" என்றான் ராஜு.

* * *

"சுந்தரி! மாப்பிள்ளையும் நானும் அன்றைக்கு அவ்வளவு தர்க்கம் செய்தோமே. அந்த ஆசையையும் பார்த்தாய் விட்டது. ஏதோ ஒரு புதிய இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியார் மாதம் ஐம்பது ரூபாய் முதல் இருநூறு ரூபாய் வரையில் சுலபமாய்ச் சம்பாதிக்கலாமென்று விளம்பரம் செய்திருந்தார்கள். மனுவை நேரிலேயே எழுதிக் கொண்டு போனேன். முதல் தடவை போனபொழுது ஆபீஸ் பத்து மணிக்குத் தான் திறப்பார்கள் என்றான் ஒரு சிறு பையன். வீட்டு வாசலில் அழகாய்ப் பூச்செடிகள் வைத்து வெகு தடபுடலாய்த் தானிருந்தது. பில்லைச் சேவகன் பளபளவென்று 'பிராஸ்ஸோ' தேய்த்த பில்லையைப் போட்டுக்கொண் டிருந்தான்......."

இதற்குள் சுந்தரி பொறுமை இழந்தவளாய், "நீ என்ன, சங்கதி சொல்லப் போகிறாயா? கதை சொல்லப் போகிறாயா?" என்றாள்.

வெளியே சென்றிருந்த ராஜுவும் அப்பொழுதே வந்து, "என்ன ரங்கா! போன காரியம் காயா? பழமா?" என்றான்.

"அதைச் சொல்வதற்குள் அவசரப் படுகிறாள். உள்ளே போனேன். குமாஸ்தாக்கள் நான்குபேர். காரியஸ்தர் ஒருவர். இவர்களெல்லாரும் வெவ்வேறு அறைகளில் உட்கார்ந்திருந்தார்கள். நேரே காரியஸ்தரிடம் மனுவைக் கொடுத்தேன். அவர் 'ரொக்க ஜாமீனா? நபர் ஜாமீனா?' என்று கேட்டார். 'நாளைக்கு வந்து தெரிவிக்கிறேன்' என்று நழுவி வந்து விட்டேன்."

"எவ்வளவு தொகை ஜாமீன்?"

"ஐந்நூறு."

"சரிதான். சம்பளம் என்னவோ?"

"முப்பத்தைந்து."

"பின் ஒப்புக்கொள்ளுகிறது தானே?"

"அதைத்தான் நானும் சொல்ல வந்தேன். விடிய விடியக் கதை கேட்டுச் சீதைக்கு இராமன் சிற்றப்பன் என்ற கதை தான். ஜாமீனுக்குப் பணம் ஏது? அந்த முதல் உண்டானால் வெற்றிலைப் பாக்குக் கடையாவது வைக்கலாமே. ஜாமீன் இல்லாத வேலைக்கு எத்தனையோ வில்லங்கங்கள் வைத்திருக்கிறார்கள். அம்மா முன்போலிருந்தாலும் ஏதா செய்வாள். அப்பாவிடம் சொல்ல ஆரம்பிக்கும் பொழுதே எறிந்து விழுவார். இன்னொரு சங்கதி. குமாஸ்தா நாலு பேரில் ஒருவன் என்னுடன் படித்த பையன். நித்தியானந்த முதலியார் மகன் சிவபாதம். அவனைத் தனியே கண்டு விஷயத்தை விசாரித்தேன். அவன் இம்மாதிரி சொன்னான்:—

'கம்பெனி ஏற்பாடுகள் எல்லாம் ரொம்ப நன்றாய்த் தானிருக்கின்றன. நான் வந்து மாதம் மூன்றாகியும் பங்குக் காரர்கள் சேர்ந்திருக்கிறார்களேயன்றி 'பாலிஸிதாரர்கள்' ஒருவர்கூடச் சேர்ந்தாகவில்லை. மாதக் கட்டணம் ஒரு ரூபாய் தான். பதினைந்தாம் வருடத்தில் ஐந்நூறு ரூபாய்

கொடுத்து விடுவார்கள். நடுவில் இறந்தாலும் அந்தத் தொகையைக் கொடுத்துவிடுவார்கள். ரொம்பவும் லாபகர மான ஏற்பாடுதான். ஆனால் கை முதல் பைசாக்கூட இல் லாமல் ஆரம்பித்துவிட்டார்கள். நான்கு குமாஸ்தாக்களின் ஜாமீன் தொகை 2000 ஆகிறதல்லவா? அதை வைத்துக் கொண்டு ஒரு ஆறுமாதம், வீட்டு வாடகை, மேஜை நாற்காலி வாடகை, சேவகன், குமாஸ்தா இவர்களையெல்லாம் பார்த்துக் கொண்டால், அதற்குள் எப்படியாவது சிரமப்பட்டு இரு நூறு மனிதர்களைச் சேர்த்துவிட்டால் பிறகு கம்பெனி நிரந் தரமாய் வேலை செய்யும். அதுவரையில் இருக்கும் இருப் பைப் பார்த்தால் கொஞ்சம்......அப்படி இப்படித்தான். அதற்குள் ஒரு குமாஸ்தா அவசரப்பட்டுப் பயந்துகொண்டு, பணத்தை வாங்கிக்கொண்டு ஓடிவிட்டான். அதிலென்ன லாபம்? வேலை அகப்படுவதே கஷ்டமா யிருக்கிற காலம். கூடியவரையில் நாமும் பிரயத்தனம் செய்வோமென்று தான் நானும் வந்து, வந்து போகிறேன். தினந்தோறும் நாங்கள் வந்து நாற்காலியில் உட்காரவேண்டியது. ஏதாவது கடித மிருந்தால் பதில் எழுதுகிறது. ஒன்றுமில்லாவிட்டால் டைப்ரைட்டர் சரியா யிருக்கிறதா என்று பார்க்கச் சற்று நேரம் எதையாவது அடிக்கிறது. சென்ற வாரமெல்லாம் உட்கார்ந்து ஏதாவது கதையோ கட்டுரையோ எழுதலா மென்று நினைத்து, ஏதோ மனம் போனபடி எழுதி யிருக்கி றேன். இந்தா! இந்தக் கத்தையில் எதையாவது பொறுக்கி எந் தப் பத்திரிகைக்காவது அனுப்பலாமா, பார்!' என்று என் கையில் ஒரு பெரிய கத்தையைக் கொடுத்தான்" என்று நிறுத்தினான் ரங்கன்.

"சரி, சரி! எங்கே அதைக் கொடு, பார்க்கிறேன்" என்றாள் சுந்தரி.

"இல்லை, எனக்குத்தான்" என்றான் ராஜு.

"சரிதான், நான் படித்தாகட்டும்" என்றெழுந்தான் ரங்கன்.

*　　　*　　　*　　　*

சாயங்காலம் சுமார் நான்கு மணி இருக்கும். சியாமளி வாசல் புறத்து அறையில் ஏதோ பூ நூல்களை வைத்துக் கொண்டு 'எம்ப்ராய்டரி' வேலை செய்துகொண்டிருந்தாள். வீதியில் அலங்கரித்துக்கொண்டு செல்லும் பெண்களைப் பார்த்ததும் அவளுக்குத் தன்னுடைய நிலைமை ஞாபகம் வந்தது. பின்வருமாறு எண்ண மிட்டாள்:—

"அக்கா நல்ல அதிர்ஷ்டசாலி. சென்ற வருஷம் வரையில் பள்ளிக்கூடம் போய்க்கொண்டிருந்தாள். பாட்டு வாத்தியாரும் வந்து கொண்டிருந்தார். நமக்கோ அலங்காரம் முடியுமுன்பே அதிர்ஷ்டம் குறுக்கே வந்து விட்டது. அத்திம்பேரும் சாமர்த்தியசாலி. அவர்கள் பாடெல்லாம் பரவாயில்லை. நமக்கு ஒரு D.M.C. நூல் வாங்கிக் கொடுக்கக்கூட அப்பாவால் முடியவில்லை. அனாவசியம் என்கிறார். பள்ளிக்கூடத்திற்குத் தான் போக முடியவில்லை. வீட்டிலே தையல், பாட்டு, ஏதாவது கற்றுக்கொள்ளுவதற்குக்கூட நாம் கொடுத்து வைக்கவில்லை. கல்யாணி அக்காவுடைய ஸில்க் துண்டுகளைத் தம்பூர் வேலை செய்யலா மென்றால், 'உனக்கெதற்கு? சுந்தரி புக்ககம் போகிறவள். அவளுக்குக் கொடுத்து விடு' என்கிறார். எதுதான் எனக்கு வேண்டும்? ஒன்றுமே வேண்டாம்! பள்ளிக்கூடம் வேண்டாம், பாட்டும் வேண்டாம். 'தையல் வேலை அனாவசியச் செலவு, அதுவும் வேண்டாம்!' என்று கோபித்துக் கொள்ளுகிறார் என்ன பிரமாதம்! இரண்டரை ரூபாய் ஆகப் போகிறது அது அனாவசியச் செலவு என்கிறார். கதவுகளுக்குக் கட்டுகிறதற்குக் குழாயும் மணியும் சுந்தரிக்கு ரூபாய் ரூபாயாய்க் கொட்டி வாங்கிக் கொடுக்க வில்லையா? இது வாயுள்ளவர்களுக்

குத் தான் காலம். போனால் போகிறது, அப்பா சிரமப்படுகிருரே, நாம் ஒன்றும் கேட்கவேண்டாம் என்று பார்த்தால் எட்டணுவுக்குக்கூடக் கணக்குப் பார்க்கிருர்கள். பாட்டியோ பொழுது விடிந்தால் போதும், கலியாண சங்கதியைப் பற்றி ஆரம்பித்து விடுகிருள். பணமில்லாத சமயத்தில் என்ன கலியாணப் பேச்சு வேண்டி யிருக்கிறது. என்ன கஷ்டம்! ரங்கனும், பாவம், என்னென்னமோ செய்கிருன். உடம்பு இளைத்துப் போய் விட்டான். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான கவலை........"

இப்படியெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில், அவளையும் அறியாமல் தையல் வேலைசெய்து கொண்டிருந்த துணியின்மீது கண்ணீர்த்துளிகள் சிந்தின. தன்னை யாரேனும் பார்த்து விட்டார்களோவென்று சுற்றிலும் ஒரு முறை பார்த்துக் கொண்டாள்.

## அத்தியாயம் 12

# ஜீவரக்ஷகன்

இரவு ஒரு மணி யிருக்கும். எங்கும் அமைதி குடிகொண் டிருந்தது. நிலவு பட்டப் பகல்போல் காய்ந்தது. நிலவினால் விழித்திருக்கும் காக்கைகள் காகாவென்று கூவு வதைத் தவிர வேறு ஒருவிதமான சந்தடியு மில்லை. லக்ஷ்மி கொஞ்சம் தெளிவடைந்திருக்கிறளென்றே சொல்லலாம். குழந்தை கண்ணனை அணைத்தவண்ணம் ஆரோகண அவரோகணக் கிரமமாய் மூன்று காலங்களிலும் குறட் டைவிட்டுத் தூங்கிக்கொண்டிருந்தாள் சேஷியம்மாள்.

மணி இரண்டும் அடித்துவிட்டது. ரங்கனுக்கு அப் பொழுதும் தூக்கம் வந்தபாடில்லை. உன்மத்தனைப் படுக் கையிற் புரண்டு புரண்டு எழுந்து உட்கார்ந்தான். "பாழும் தொல்லை! எவ்வளவு நாள்தான் வேலையில்லாமல் இப்படித்திண் டாடித்தெருவில் நிற்பது? இன்ஷ்யூரன்ஸ் வேலைக்கும் எவ் வளவோ கரடியாய்க் கத்தியாயிற்று. மாதம் பதினைந்து இருபது கிடைத்தாலும் போதுமென்றால், அதுவே குதிரைக் கொம் பாயிருக்கிறது. என்னதான் செய்கிறது! வீடு இருக்கும் இருப்பில் நான் ஒருவன், ராஜு ஒருவன், இரண்டு தண்டச் சோற்றுத் தடிராமன்கள். அப்பாதான் என்ன செய்வார்? சம்பாதிக்காமல் இந்த மாதிரி தண்டச் சோற்றுக்கு ஆளா யிருப்பதைவிட, எங்கேயாவது ஓடிவிட்டால் தானென்ன? ஆனால் ஓடித்தான் என்ன பயன்? எங்கேபோய் என்ன செய் வது? இவ்வளவுமோசமான நிலைமையில் உயிர் வாழ்வதை விட ஏன் உயிரை விட்டுவிடக் கூடாது? உள்ளூரிலேயானால்

யாராவது பார்த்து இன்னுனென்று கண்டுபிடித்து விடுவார்கள்." அதனால் இவர்களுக்குக் கஷ்டம். 'திருவாழுத்தான் இருந்தும் கெடுத்தான், செத்தும் கெடுத்தான்' என்ற பெயர் வரும். எங்கேயாவது பரதேசம்போய் உயிரை விடுவதுதான் சரி. நாலு நாட்கள் கழித்து அந்தக் கூட்டத்தைப் பார்த்துவிட்டால் என்னை நாளடைவில் மறந்துவிடுவார்கள். இதுதான் நல்ல யோசனை" என்று முடிவு செய்து கொண்டான்.

*　　　*　　　*　　　*

"ஸார்! மெர்குரிகுளோரைட் (வீரம்) கொஞ்சம் வேண்டும். என்ன விலை?" என்று மருந்துக்கடை யொன்றில் நுழைந்து கேட்டான் ஓர் இளைஞன்.

"யாரப்பா நீ? முதலாளி இல்லை; வைத்தியருடைய சீட்டில்லாமல் கொடுக்கமாட்டோம்" என்று கூறினன் கம்பௌண்டர்.

"அந்த மருந்து இருக்கிறதா?"

"இருக்கிறது."

"பின் ஏன் கொடுக்கமாட்டேனென்கிறாய்?"

"அதோ முதலாளி வருகிறார். அவரையே கேட்டுக் கொள்" என்று சொல்லி உள்ளே சென்றான்.

சற்று நேரத்திற்கெல்லாம் அந்த மருந்துக் கடையின் சொந்தக்காரரான ராயரும் வேறொருவனும் வந்தனர். அவன் நிற்பதைக் கண்டு, "ஏன்? உனக்கென்ன வேண்டும்?" என்றார் ராயர்.

"ஒரு மருந்து வேண்டும்."

"எங்கே, சீட்டைக் கொடு!"

"இல்லை, அது சாப்பிடுவதற்கன்று. நான் சித்திரவேலை கற்றுக்கொள்ளுகிறேன். அதற்கு மெர்குரி குளோரைட் நல்ல ரத்தச் சிவப்புக்கு மற்றவைகளைவிட அழகிய நிறம் கொடுக்கிறது என்று என்னுடன் எழுதுபவன் சொன்னான்."

"மெர்குரி குளோரைடா? டாக்டர் அனுமதியில்லாமல் அது கொடுக்க முடியாதே!"

"இல்லே, ஸார். நாளன்றைக்குச் சித்திரப் போட்டி. நான் டாக்டரைத் தேடி, சீட்டுவாங்கி, பிறகு மருந்து வாங்கிச் சித்திரம் எழுதுவதற்கு நேரமிராது. நாளைப் பகலுக்குள் சித்திரத்தை எழுதி முடித்துவிட வேண்டும். இந்தத் தடவை தயவு செய்யுங்கள். அநியாயமாய் ஒரு மெடலும் நற்சாட்சிப் பத்திரமும் இல்லாமல் போய்விடும். ஏதோ பரிசு பெற்றால் பிழைக்க வழி தேடலாம்" என்று ஈன சுரத்தில் முனகினான் அவ்விளைஞன்.

"சரி, நீ எந்த ஊர்?"

"பனங்குடி."

"இங்கே எங்கிருக்கிறாய்?"

"மயிலாப்பூரில், வஸந்த விகாரத்தில்."

"மயிலாப்பூரா, சரிதான். என்ன சித்திரம் எழுதியிருக்கிறாய்?"

"ஆப்கன் புலி வேட்டை."

"அதில் சிவப்பு வர்ணம் அவசியமா?"

"புலியின் வாய், நாக்கு முதலியவைகளுக்கும் இன்னும் சிலவற்றிற்கும் அவசியம்."

"சரி, கொடுக்கச் சொல்லுகிறேன்."

* * *

பையன் வெளியே சென்றவுடன் ராயருடன் வந்திருந்தவன், "இந்தப் பையன் எதற்காக வாங்குகிறானோ வென்று எனக்குச் சந்தேகமா யிருக்கிறது" என்றான்.

"சந்தேகமென்ன? அவன்தான் தகுந்த காரணம் கூறினானே" என்றார் ராயர்.

"சரிதான். ஆனாலும் எனக்கு அவன் வார்த்தைகளும் தோற்றமும், உண்மையென்று தோன்றவில்லை. என்னமோ, 'ஞய மிய' வென்று உளறி வழிந்தானே."

"அவன் சுபாவத்திலேயே அப்படித்தான் பேசு வானே என்னமோ நமக்கு எப்படித் தெரியும்? அடாடா! நீங்கள் முன்னாலேயே சொல்லி யிருக்கக் கூடாதா? ஏதா வது வம்புத் தண்டாவில் வந்து முடியப் போகிறதே!"

"நான் ஏதோ யோசனையில் இருந்துவிட்டேன். இப் பொழுதுதான் மனசிலே பட்டது."

"அட! இதென்ன கிரகசாரம்! அடே பையா! இப் போது மருந்து வாங்கினவன் தெருவில் போய்க்கொண்டிருப் பான், கூப்பிடு" என்றார் ராயர்.

"சரிதான், நான் நினைக்கிறபடி இருந்தால் அவன் இதற்குள் பறந்திருப்பான். இல்லாவிட்டால், மயிலாப்பூர் டிராம் வண்டியில் ஏறி இருப்பான். இருக்கட்டும், எனக்கும் வேலை இருக்கிறது. பையனுக்கு அவனை அடையாளம் தெரி யாது. எனக்கு ஒரு முறை பார்த்தவர்களைக் கூட நன்றாய்த் தெரியும். நான் பிடித்து விடுகிறேன்" என்றெழுந்தான் மற்றவன்.

"ஏன்? இன்று மெயிலில் நீங்கள் மதுரைக்குப் போக வில்லையா?"

"போகவேண்டும்; இன்றைக்கும் போகலாம், நாளைக் கும் போகலாம். இந்தப் பையன் தகவலை முன்னால் தெரிந்து கொள்ளவேண்டும். பிறகு ஏதாவது கெடுதி நேர்ந்தால் உங்கள் வியாபாரத்திற்கே அகௌரவமல்லவா?" என்று சொல்லியவனாய் வெளியேறினான் மற்றவன்.

* * *

ரங்கன் மருந்துக் கடையிலிருந்து கிளம்பி, விசையாய் நடந்து எழும்பூர் ஸ்டேஷனை அடைந்தான். விழுப்புரத் திற்கு ஒரு டிக்கட் வாங்கிக்கொண்டு, பிளாட்பாரத்தில் ஒரு மூலையில் எவர் கண்ணிலும் படாமல் காத்திருந்தான். ரயி லும் வந்தது. காலி வண்டியாய்ப்பார்த்து ஏறி ஒரு மூலை

யில் உட்கார்ந்து கொண்டான். தலையைக் குனிந்துகொண்டு கண் மூடியவனாய் யோசனையில் ஆழ்ந்தான்.

"ஏனப்பா! நீ மயிலாப்பூருக்குப் போகாமல் எங்கே ரயிலேறி விட்டாய்?" என்று ஒரு குரல் கேட்கவே, திடுக்கிட்டுத் திரும்பி நிமிர்ந்து ரங்கன் அரட்டு விழி விழிக்கலானான். வந்தவனோ அவன் அருகில் நெருங்கி அவன் இரு கைகளையும் பற்றி, "எதற்காக வீரம் வாங்கினாய்?" என்று கேட்டான்.

ரங்கன் உடல் முழுவதும் பயத்தால் வியர்த்தது. கைகளும் கால்களும் வெட வெட வென்று உதறின. போலீசானாயிருக்குமோ வென்று ஒரு கணம் நினைத்தான். ஆனால், அவனது கதர் உடையைக் கண்டு அப்படியிராதென்று நினைத்தவனாய்ச் சற்றுச் சமாளித்துக் கொண்டான். எதிர்பாராமல் நேர்ந்த அந்தச் சம்பவத்தில் முன்யோசனையுடன் கற்பித்து வைத்திருந்த பொய்கள் ஒன்றும் நினைவுக்கு வரவில்லை. பேச வாயெழாமல் திகைத்து நின்று விட்டான்.

"சரிதான், சமயத்துக்குத் தகுந்த புளுகு கற்பிக்க முடியவில்லை போலிருக்கிறது. எதற்காக வாங்கினாய்? உண்மையைச் சொல்" என்று மறுபடியும் கேட்டான் புதியவன்.

ரங்கன் வாயே திறக்கவில்லை. புதியவன் அவன் கைகளை இறுகப்பற்றிய வண்ணம், மிகவும் பரிவான குரலில் அன்பு ததும்ப, "நம்மைத் தவிர இங்கொருவருமில்லை. ஏன் தயங்குகிறாய்? பயப்படாதே. உண்மையைச் சொல்" என்றான்.

ரங்கன் அவனை ஏறிட்டுப் பார்க்கமுடியாமல் தலைகுனிந்த வண்ணமிருந்தான். அவன் கண்களில் கண்ணீர் துளித்தது.

அவன் மிகுந்த வேதனைப்படுகிறானென்பதை ஒரு நொடியில் கண்டு கொண்டு, "இவ்வளவு இளமையில் உயிர்

மேல் அவ்வளவு வெறுப்பு ஏற்படக் காரணமென்ன? சொந்தத் தாயாரா? மாற்றாந் தாயா? தகப்பனாருக்கென்ன வேலை?" என்று மிகுந்த கனிவுடன் கேட்டான் புதியவன்.

ரங்கன் பாடு தடுமாற்றமாகி விட்டது. இவ்வளவு அன்பு கனியக் கேட்கும் மனிதரிடமும் உண்மையைக் கூறலாமா, கூடாதாவென்று சந்தேகிப்பவன் போல் அவனை ஏற இறங்கப் பார்த்தான்.

"என்னிடம் சொல்லலாமா வென்று சந்தேகிக்கிறாயா? நான் எப்பொழுதுமே பிறர் விஷயத்தில் தலையிடுபவனன்று. உன்னைக் கூறும்படி வற்புறுத்தவுமில்லை. நீ உன் மனதிலுள்ளதை ஒளியாமல் கூறினால் என்னாலியன்றதை நான் செய்கிறேன். உன்னைக் கண்டது முதல் உன்னிடத்தில் எனக்கு மிகுந்த அன்புண்டாகி விட்டது. ஏன் தெரியுமா? நீ என் அன்பு மிகுந்த நண்பன் ஒருவனைப் போலிருக்கிறாய். ஏறக்குறைய அவன் சாயல் உனக்கிருக்கிறது. பாவம்! அவன் திருச்சியில் படிக்கும்பொழுது விளையாட்டாய் நீந்தப் போனவன் காவேரியில் தவறி விழுந்து இறந்து போனான். ........என்னாலியன்ற எந்தச் சிறு உதவியும் உன் விஷயத்தில் நான் செய்யத் தயார். உனக்கு இஷ்டமிருந்தால், அல்லது என்மேல் நம்பிக்கை யிருந்தால் விஷயத்தைக் கூறலாம். இப்பொழுது நாம் இருவருமே தனித்திருக்கிறோம். நம்மைத் தனியாய்ச் சந்திக்கும்படி செய்ததே ஈசுவராக்ஞை என்று உனக்குத் தோன்றவில்லையா?" என்றான் புதியவன்.

அதற்குமேல் தடைசொல்ல ரங்கனால் முடியவில்லை. தன்னுடைய நிலைமையையும், குடும்ப நிலைமையையும் விவரித்துக் கூறினான். அவன் சொல்லிமுடிக்கும் வரையில் கற்சிலைபோல் உட்கார்ந்திருந்தான் புதியவன். அவன்

முடித்ததும் பெருமூச்சு விட்டான். சற்று நேரம் இரு வரும் ஒன்றும் பேசவே யில்லை.

"அது சரி. இவ்வளவு துன்பமடைந்தவர்களின் மீதுள்ள அபாரமான கருணையினால்தான் நீயும் தற்கொலை செய்துகொண்டு அவர்களைப் பின்னும் துன்புறச் செய்யலா மென்று நினைத்தாயோ?" என்று கேட்டான் புதியவன்.

ரங்கன் பதில் பேசவில்லை. "அட அசடே! என்ன பிரகஸ்பதியடா நீ! விறகுவெட்டி தினம் நாலணுச் சம் பாதிக்கிறான். ரிக்ஷா இழுப்பவன்கூட ஒரு ரூபாய் சம் பாதித்து விடுகிறான். நீ படித்தவன். கௌரவம் அகௌ ரவம் என்று பார்க்காமல் ஏதாவதொரு தொழில் செய்து ஜீவனத்துக்குச் சம்பாதிக்க முடியாதா? மூட்டை தூக்கி ஞல் கூட ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் சம்பாதிக்கலாமே. முடியவில்லை என்று ஒன்று உண்டா? அதன் பொருட்டுத் தற்கொலை செய்துகொள்பவன் ஆண் பிள்ளையா? பேஷ்! பேஷ்! நல்ல யுக்தி கண்டுபிடித்தாய். நீ இறந்து விடுகிற தாக வைத்துக் கொள்ளுவோம். அங்கே இதைவிடச் சுக மென்று யாராவது பார்த்து வந்து உனக்குச் சொன்ன துண்டா? பேசாமல் என்னுடன் எங்கள் ஊருக்கு வா. பிறகு யோசித்து உனக்கென்ன விருப்பமோ அதன்படி செய்ய லாம்" என்முன்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் ரங்கனுக்குத் துக்கம் தாங்கமாட்டாமல் நெஞ்சை அடைத்துக்கொண்டு வந்தது. கண்களிலிருந்து கண்ணீர் பிரவாகமாய்ப் பெருகிற்று. பரி தாபமாய் விசிக்க ஆரம்பித்தான். புதியவன் அன்புடன் அவனைத் தடவிக்கொடுத்து, "அசடே, இப்படி அழுவார் உண்டா! நானே உன்னைப்போலிருந்தபோது இதைவிட அதிக கஷ்டப்பட்டிருக்கிறேன். உலகின் கஷ்ட நிஷ்டூரங் களுக்குப் பயந்து உயிரை விடுபவன் பயங்காளியல்லவா?

அது கிடக்கட்டும். நீ என்னுடன் மதுரைக்கு வா. உனக்கு வேலைக்கு நான் ஏதாவது ஏற்பாடு செய்கிறேன்'' என்றான்.

அதற்குள் விழுப்புரம் ஸ்டேஷன் வந்தது. புதியவன் இறங்கிப்போய், ரங்கனுக்காக மதுரைக்கு ஒரு டிக்கட் வாங்கி வந்தான். ரங்கனுக்கு இதெல்லாம் கனவு காண்பது போலவே தோன்றிற்று. அவன் புதியவனைப் பார்த்து "எல்லாம் சரிதான். என் வரலாற்றை யெல்லாம் முதலிலிருந்து கூறிவிட்டேன். இன்னும் நீங்கள் யாரென்றும், என் விஷயமாக இவ்வளவு சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டிய காரணம் என்ன வென்றும் கூறவில்லையே!'' என்று கேட்டான்.

புதியவன் பதில் சொல்வதற்குள், அதுவரை காலியாயிருந்த வண்டியில் மூட்டை முடிச்சுகளுடன் ஒரு கிழவரும் கிழவியும் குழந்தைகளுடன் ஏறினர்.

வந்த பாட்டி இவ்விருவரையும் நோக்கி "நீங்கள் எந்த ஊருக்குப்போகிறீர்கள்?'' என்றாள்.

"மதுரைக்கு'' என்றான் ரங்கன்.

பாட்டியம்மாள் அதோடு நில்லாமல், "ஏண்டாப்பா, எந்தத் தெருவு? உனக்குக் கலியாணமாகி யிருக்கிறதா? தங்கை தமக்கைகள் உண்டா? என்ன கோத்ரம்?'' என்று விசாரிக்கலானாள்.

புதியவன் 'களுக்'கென்று சிரித்துவிட்டான். "கலியாணமா? எனக்குச் சன்னியாசம் வாங்கிக்கொண்ட பிறகு கல்யாணம்; இவனுக்கு......'' என்று தொடங்க, ரங்கனும் சிரித்தான்.

பாட்டியின் முகம் சிவந்தது. "என்னமோ பார்த்தால் பிரம்மசாரி மாதிரி இருக்கிறதே என்று கேட்டேன். நீங்கள் வடமாளா, பிருகசரணமா?'' என்றாள்.

"நாங்களெல்லோரும் நல்ல வட தேசத்து (ஔத்தர) வடமாள். நீங்கள் என்ன மா ?" என்றான் புதியவன்.

"நாங்களும் நல்ல வடமாதான். நல்ல பிள்ளைகளாட்டமா இருக்கே, கேட்டேபோம்...." என்பதற்குள், அதுவரையில் வாயில் வெற்றிலைச் சாற்றுடன் கன்னங்களை உப்பவைத்துக்கொண்டிருந்த கிழவர், அதை உமிழ்ந்துவிட்டு, "என்ன நச்சு நச்சென்று! சும்மா இரு. வண்டியில் ஏறுவதற்குள் நல்ல பிள்ளை, கெட்ட பிள்ளை என்பதை நீ கண்டு விட்டாயாகணும்" என்றார்.

"வாயிலே புகையிலை இல்லை. கையிலே புகைச் சுருட்டில்லை. அந்தப் பெரிய பிள்ளையாண்டான் காந்தித் துணி உடுத்திக்கொண்டிருக்கான். அதனால் நல்ல பிள்ளைகளாக்கும் என்று நினைத்தேன். பெண்ணைப் பெற்றால் விசாரந் தானே ? இந்த வைபவத்தில் யாரோ சாரதாம்பாளாம். அவளோடபில்லாம். அதிலே பதினாறு வயதுக்குத்தான் கலியாணம் பண்ணணும்னு ரூல் போட்டானும் வெள்ளைக்காரன். அந்தப் பாவி யாரோ ? என்ன ஜாதியோ ?" என்றாள் பாட்டி.

சாரதா சட்ட மசோதாவைப்பற்றிப் பாட்டியின் அபிப்பிராயத்தைக் கேட்கவும் ரங்கனும் அவனது புதிய நண்பனும் புன்னகை செய்தனர்.

தன் பெயர் ஜகதீசன் என்றும் மற்ற விவரங்கள் எல்லாம் மதுரைக்குப் போய்த் தெரிவிப்பதாகவும் புதியவன் ரங்கனிடம் கூறினான்.

# அத்தியாயம் 13

## ஜகதீசனது கதை

அஸ்தமிக்கும் தருணம். பறவைகள் கலகலவென்ற சத்தத்துடன் மரங்களைத் தேடி அடைந்து கொண்டிருந்தன. செக்கச் செவேலென்று சிவந்திருந்த வானம் காண்பதற்கினிய ஓவியம்போல் தோன்றிற்று. தண்ணீர்க் குடத்தைத் தலையின்மீது வைத்துக்கொண்டு சிறுபெண்கள் ஊர்க் கதைகளைப் பேசியவண்ணம் சென்றுகொண்டிருந்தனர். சாயங்கால ஜபதபங்களை முடித்துக்கொள்ளும் பொருட்டுப் பெரியவர்கள் ஏதேதோ முணுமுணுத்தவண்ணம் வைகையாற்றின் ஓடுகாலை நெருங்கலாயினர்.

வருஷத்தில் சில மாதங்கள்தான் வைகையில் தண்ணீருண்டு. மற்ற நாட்களில் வறண்ட மணல் வெளிதான். ஊர்க் குழந்தைகள் ஓடி விளையாடவும், இளைஞர்கள் காற்று வாங்கவும், பெரியோர்கள் ஓடுகாலில் தமது அனுஷ்டானங்களை முடித்துக்கொள்ளவும் அது தக்க வசதியான இடம். அம் மணல்வெளியில் ரங்கனும் அவன் புதிய நண்பனும் ஒருவரையொருவர் பார்த்தவண்ணம் மௌனமாய் உட்கார்ந்திருந்தனர்.

சற்று நேரம் கழித்து ரங்கன் பேசத் தொடங்கினான். "தேவாரம் போகும் பஸ் இரவு எட்டு மணிக்குத்தான் கிளம்புமாம். நாம் இன்னும் ஒரு மணி கழித்துப் போனால் போதுமல்லவா? அதற்குள் உங்களைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டுமென்று எனக்கு நிரம்பவும் ஆவலாயிருக்கிறது" என்றான்.

நண்பன் கூறத் தொடங்கினான் :—

"நாங்கள் பூர்வம் சேலம் வாசிகள். என் தாயார் அவள் தகப்பனருக்கு ஒரே ஒரு செல்வப் பெண். என் பாட்டனர் நாமக்கல்லில் ஏதோ கொடுக்கல் வாங்கல் செய்து கொண்டும் சொற்ப நிலத்தில் விவசாயம் செய்து அதில் வருவனைதக்கொண்டும் சிக்கனமாய் ஜீவித்துவந்தார். என் பாட்டனருக்கு ஒரு தங்கை. அவள் இளமையிலேயே ஓர் ஆண் குழந்தையுடன் விதவையாகி என் பாட்டனரிடமே வந்திருந்தாள். அவள் வந்து சேர்ந்த இரண்டொரு வருஷத்துக்கெல்லாம்தான் என் தாயார் பிறந்தாளாம். அதுவரையில் குழந்தையில்லாதிருந்த என் பாட்டனர் மருமகன் வீட்டிற்கு வந்தபிறகே தனக்குக் குழந்தை பிறந்ததால் அப்பையனை வெகு அன்பும் ஆதரவுமாய்ப் பராமரித்து வந்தார். என் பாட்டியாரும் தன் நாத்தியையும் அக்குழந்தையையும் தன் குழந்தையைக்காட்டிலும் பன்மடங்கு விசுவாசமாய் வளர்த்து வந்தாள்.

ஆனாலும் உலகில் பெருமையுடையவர்கள்தானே மிகுதி? அத்தை, அதாவது என் அத்தைப் பாட்டி, மிகுந்த பொறாமைக்காரி. இளமையிலேயே குறைப்பட்டவளுமாயிற்று. பொறாமை பொங்கி எழக் கேட்பானேன்? ஊரில் யார் வீட்டில் என்ன விசேஷமானாலும் அவள் துக்கம் மேலிட்டு அழுவாள். கேட்பவர்களுக்கு ஏதேனுமொரு காரணங் கற்பித்துக்கூறுவாள். என் பாட்டியின் மேல் 'கிழக்கே நின்றாள், மேற்கே திரும்பினாள்' மட்டில்லை, மரியாதையில்லை' என்று கோள் சொல்லுவாள். இவள் துர்க்குணம் அவருக்குத் தெரியுமானாலும் இன்னது சொல்வதென்று தெரியாமல் சில சமயத்தில் என் பாட்டியை அடித்தும் விடுவாராம். ஆனால் தனிமையில் பாட்டியை அழைத்து 'காலைச் சுற்றிய பாம்பு கடியாமல் விடாது. அவள் துர்க்குணி என்பது ஊரறிந்த விஷயம். ஏதோ நம்மிடம் வந்து

விட்டாள். என்ன செய்கிறது? நீ அவள் கோள் சொல்லும் பொழுது எதிரில் வராதே' என்று கூறுவார். ஆனால் கங்கையிடமும் அவள் குழந்தை பஞ்சநதத்திடமும் அவர் அபிமானம் பரிபூரணமா யிருந்தது.

கடைசியில் அத்தைப் பாட்டி அன்னபூரணியம்மாள் காட்டில் மழை பொழிந்தது. எனது பாட்டி என் தாயைத் தவிக்கவிட்டு இறந்தாள். என் தாயாருக்கு அப்பொழுது வயது ஏழு. அத்தையின் பிள்ளை பஞ்சுவுக்கு வயது பத்து. அத்தையோ இந்தப் பெண்ணை வெளியில் எவருக்கும் கொடாமல் தன் மகனுக்கே கொடுத்துவிடும்படி தமையனுக்குப் போதனை செய்யத் தொடங்கினாள். மருமகளையும் தாயற்ற குழந்தையாயிற்றே என்ற எண்ணம் ஒரு சிறிது மின்றி நிரம்பவும் கடுமையாக வேலை வாங்குவாள். தமையனைக் கண்டுவிட்டால் மட்டும், 'அம்மா, செல்லம்மா' என்று மிகவும் அருமையாய்க் கூப்பிடுவாள். அவர் தலை மறைந்ததோ இல்லையோ, 'அடி தோசி துடைகாலி!' என்றெல்லாம் திட்டத் தொடங்கிவிடுவாள்.

இந்த இரகசியங்கள் எத்தனை நாள் மறைந்திருக்கும்? கண்டுகொண்டார் என் பாட்டனார். அப்பொழுது என் தாயாருக்கு வயது பதினொன்று. அவள் மகனுக்குப் பெண்ணைக் கொடுக்க முடியாதென்று கண்டித்துக் கூறி விட்டார். அதற்கேற்றாற்போல் அவள் பிள்ளையும் பெரியவர்கள் பேச்சைக் கேளாமல் காவாலிகளுடன் சேர்ந்து அலைந்து கொண்டிருந்தான். எல்லாம் சேர்ந்து அவளுக்கு எரிகிற தீயில் எண்ணெய் விட்டாற்போலாகி விட்டது.

ஆனமட்டும் அழுது ஸாகஸம் செய்துபார்த்தாள். அவர் அசையவில்லை. கடைசியில் மதுரை தேவஸ்தானத்தில் குமாஸ்தாவா யிருந்த என் தந்தையைப் பிடித்துப் பெண்ணைக் கொடுத்துவிட்டார். கலியாணமான மறு வரு

ஷமே என் தாய் குடித்தனம் செய்ய வந்துவிட்டாள். என் தாயார் நல்ல கட்டழகியாம். ஊரிலிருக்கும் பொழுதே 'செல்லம் செக்கச் சிவக்கச் செந்தாழம்பூப்போல் எத்தனை அழகு!' என்று யாராவது சொல்லிவிட்டால் அத்தை வயிறெரிவாள். அதிலும் தன் பிள்ளைக்கு வாழ்க்கைப் படாமல் உத்தியோகஸ்தனுக்கு வாழ்க்கைப்பட்டதும், அவளை மதுரையிலுள்ளோர் புகழ்வதைக் கேட்க அவளால் சகிக்க முடியவில்லை. அனுமார் கோயிலில் 'இந்தப் பாவி செல்வி முண்டை மூன்றே முக்கால் நாழி வாழக்கூடாது. நாளைக்கே அறுத்து அகத்துக்கு வந்துவிட வேண்டும். அப்பொழுது தான் அவன் கொட்டம் ஒடுங்கும். என் பிள்ளைக்கென்ன குறைவு? நாசமாய்ப் போக! நான் ஒரு கடுகத்தனை குழந்தையை வைத்துக் கொண்டிருக்கிறேன். பெண் கொடுக்க முடியாது என்றனே! நொண்டியா? முடமா? ராஜா மாதிரி என் பிள்ளையிருக்க, அவமானம்போல் எவனோ மதுரையானுக்குப் பெண்ணைக் கொடுத்தானே! இவன் நன்றாயிருப்பானா? வம்ச நாசமாய்ப் போகவேண்டும். அனுமாரே! நீர்தான் கூலி கொடுக்கவேண்டும்' என்று மண்ணை வாரி இறைத்தாளாம்.

வருஷம் இரண்டாயிற்று. அப்பொழுது என் தகப்பனார் தேவாரத்தில் ஓர் ஏலக்காய் வியாபாரியிடம் கணக்கெழுதும் வேலையிலிருந்தார். என் தாயார் தன் பிறந்தகத்தோரை என் தந்தை இழிவாய் எண்ணக் கூடாதென்று, அத்தையைப் பற்றி அவரிடம் சொன்னதேயில்லை. இந்த எண்ணத்தினலேயே, தனக்கிஷ்டமில்லாமலிருந்தும் வளைகாப்பணிந்து கொள்ளப் பிறந்தகம் வந்து சேர்ந்தாள். நமஸ்கரித்த மருமகளை அத்தை கண்டபடி ஏசினாள். எவ்வளவு அபசகுனங்கள் உண்டாக்கலாமோ அவ்வளவும் செய்தாளாம். அதனால் எனக்கொன்றும் நேரவில்லை. அப்போதே

நான் இறந்திருந்தால் இத்தனை துன்பங்களையும் படுபவர் யார்?"

என் தாயார் நல்ல வடிவழகி என்று கூறினேனல்லவா? என் தகப்பனார் சாதாரணம். கறுப்புத்தான். எனக்கு அவ்வளவு சரியாய் ஞாபகமில்லை என் தாயாரைப் போல் நான் பிறந்தது, அத்தையின் பொறாமைத் தீ இன்னும் அதிகமாகக் கொழுந்து விட்டெரியக் காரணமாயிற்று. எப்படியாவது அவளை வாழவொட்டாமலடிப்பதற்கு அவள் சமயம் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் எண்ணம் கைகூட இரண்டு வருஷங்களாயின.

என் தகப்பனார் ஏதோ காரியமாக மாயவரத்திற்குச் சென்றிருந்தார். அப்பொழுது எனக்கு வயது மூன்று. என் தந்தை மாயவரம் சென்றிருப்பதையும் எனக்கு ஏதோ உடம்பு அசௌக்கியமாயிருந்ததைப்பற்றியும் என் பாட்டனுருக்குத் தாயார் தெரிவித்திருந்தாள். இதுதான் நல்ல தருணமென்று அத்தை தன் மகனை மாயவரத்திற்கனுப்பி என் தாயாரின் நடத்தையைப் பற்றி அவதூறு கூறும்படி போதனை செய்திருந்தாள். தகப்பனார் என் தாயாரைத் தள்ளிவைத்து இரண்டாந்தாரங் கலியாணஞ் செய்து கொள்ள வேண்டுமென்று அவள் எண்ணம்.

இந்த விஷயம் வெகு நாள் வரையில் என் தாயாருக்குத் தெரியாது. மாயவரத்திலிருந்து வந்தது முதல் என் தகப்பனார் ஏதோ வித்தியாசமாய் இருப்பதாய்ப் புலப்பட்டதாம். ஆனால் என் தாயார் வற்புறுத்திக் கேட்கப் பயந்து கொண்டே இருந்தாளாம். என்ன காரணமா யிருக்கலாமென்றறிய ஆனவரையிலும் முயன்றும் முடியாமல் போயிற்று.

ஒரு நாள் என் தாயார் கூடத்தில் புஷ்பம் தொடுத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாளாம். வெளியே சென்றிருந்த என் தந்தை திரும்பி வெகு அவசரமாய் உள்ளே வந்து,

'இவ்வளவு நேரம் என்ன செய்துகொண்டிருந்தாய்?' என்று அதட்டினாராம்.

'சாயங்காலம் கோயிலுக்குப் போக மாலை கட்டிக் கொண்டிருந்தேன்.'

'ஓகோ! அப்படியா? ஏற்கனவே உன் கபடநாடகம் கொஞ்சம் புரிந்திருக்கிறது. இங்கிருந்து வெளியே சென்ற மனிதன் யார்?'

'மனிதனா? ஒருவரும் வரவில்லையே! குழந்தையைத் தூங்கவைத்து விட்டுப் பூத்தொடுக்க உட்கார்ந்தேன். நீங்கள் வந்தது தான் தெரியும்.'

'சீச்சீ! அற்பநாயே! என் கண்ணால் பார்த்தேனே? அவன் படி இறங்கித் திருடன் போல் சுற்றிச் சுற்றிப் பார்த்துக்கொண்டு ஓடினானே? என்னிடம் கதை விடுகிறாயா?' என்றாராம். அதற்குமேல் நடந்த அடிதடியில் என் தாயார் மூர்ச்சித்து விழுந்துவிட்டாளாம். அவள் அந்த நிலைமையில் இருக்கையிலேயே என் தகப்பனார் எங்கேயோ போய்விட்டார்.

சீக்கிரத்தில் எதிர்பாராத விதமாய் உண்மை வெளிப்பட்டது. நாங்கள் குடியிருந்த வீட்டின் சொந்தக்காரன் வேறொருவனுக்கு அதை விற்கையில் வாங்க வந்தவனுடைய தம்பியும் வந்திருந்தான். அவன், தன்னை ஒரு நாள் பெரிய ஆபத்தினின்றும் இந்த வீடு காப்பாற்றியது என்றும், தன்னுடைய விரோதி ஒருவன் தான் தனியாக அகப்பட்டால் குத்திப் போடுவதாகச் சொல்லியிருந்தானென்றும், அன்று தற்செயலாய் அவன் தெருக்கோடியில் தன்னைப் பின் தொடர்ந்து வருவதைக் கண்டு நடுங்கி நடைக்கதவுக்குப் பின்னால் பதுங்கியிருந்ததாகவும், சற்று நேரத்திற்கெல்லாம் அவன் தெருவைக் கடந்திருப்பானென்று நிச்சயமான பிறகு வெளியே வந்து ஓடி விட்டதாகவும் தெரிவித்தான்.

இந்தச் சங்கதி தெரிந்த பிறகு என் தாயார் அவ னிடமே விஷயத்தைச் சொல்லி, தன் விதியை நொந்து அழுதாள். அவன் தன்னுயிருள்ள வரையில் எப்படி யாவது அலைந்து திரிந்து என் தகப்பனரைத் தேடிப் பிடிப்பதாகக் கூறினன். ஆனல் எங்கள் துர்ப்பாக்கி யத்தினல் அவன் மறுமாதமே காலராவில் இறந்துபோ னன்.

என் பாட்டனருக்குக் காகிதத்துக்குமேல் காகிதம் எழுதியும் பதிலே போடவில்லை. என் தாயார் என் பாட்ட னரை நேரில் போய்ப் பார்த்து விஷயத்தைத் தெரிந்து வர லாமென்று பிரயாணப் படலானள். அதே சமயத்தில் திடீ ரென்று அவர் பிளேக் வந்து இறந்ததாய்த் தகவல் வந்தது. இருவரும் போய்ச் சேர்ந்தோம். இந்த வைபவத்தில் அத் தைக்கும் பஞ்சுவுக்கும் 'பிளேக்' வந்து விட்டது. அந்திய காலத்தில் பஞ்சுவுக்கு என்ன தோன்றிற்றோ என்னமோ, மாயவரத்தில் தான் செய்த சூழ்ச்சியைக் கூறி மன்னிப்பு கேட்டான்.

சொத்து, மனித ஒத்தாசை ஒன்றுமில்லாமல் நான்கு வயதுக் குழந்தையுடன் எங்கே நிற்பாள்? நல்ல வேளை யாய் என் தகப்பனர் வேலையாயிருந்த ஏலக்காய் வியாபாரி யாகிய சங்கமேச்வர அய்யர் என் தாயாரின் நிலைமையை உணர்ந்து மாதம் ஐந்து ரூபாய் சம்பளத்திற்குச் சமையற் காரியா யிருக்கும்படி ஏற்பாடு செய்தார். அவர் மனைவி கௌரியம்மாள்—தர்ம தேவதை என்றால் அவளுக்கே தகும் —என்னையும் என் தாயாரையும், பெற்ற தாயினும் பன் மடங்கு அதிகமாய் ஆதரித்தார்கள். 'கண்ணைக் கெடுத்த தெய்வம் மதியைக் கொடுத்தது' என்பதுபோல் அவ்வளவு கஷ்ட காலத்தில் அவர்களுடைய தயவு கிடைத்தது பெரு நிதி கண்டாற்போல.

எனக்குப் படிப்புக்குச் சம்பளம் என் தாயின் சம்பளமே. சாப்பாடு அவர்கள் வீட்டிலேயே இலவசம். மேல் வகுப்புக்களுக்கு மதுரையில் வாரச் சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்தார். ஆறுவது பாரம் தேறிய உடனே அவர் என்னை அழைத்து 'அப்பா ஜகதீசா! இத்துடன் படிப்பை நிறுத்தி விட்டுக் கணக்கு வேலை பார்ப்பதானால் மாதம் இருபது ரூபாய் கொடுக்கிறேன். சம்மதமா?' என்றார்.

மறு மாதத்திலிருந்து நானும் என் தாயாரும் ஒரு சிறு வீட்டில் குடியிருந்து வரலானோம். என் தாயாரின் சம்பளத்தில் அவர்களிடம் மிகுந்திருந்த இருநூறு ரூபாயை வட்டிக்கோ நிலத்தின் பேரிலோ கொடுக்கும்படி என்னிடம் கொடுத்தார்.

இப்படியே ஐந்து வருஷங்களாயின. நாங்களும் கொஞ்சங் கொஞ்சமாய் முன்வரலானோம். இந்தச் சமயத்தில் 'கன்னிங்ஹாம்' என்றொரு துரை ஏலச் சரக்கு குத்தகை வியாபாரம் செய்துகொண்டு தேவாரத்திலேயே இருந்தான். அவன் திடீரென்று இருதய வியாதியினால் இறந்து விட, அவன் மனைவி வீட்டிலிருந்த சாமான்களை ஏலம் போட்டு விட்டு 'ஸ்காத்லந்து'க்குப் புறப்படலானாள். அதில் நானும் ஒரு மரப் பீரோ பத்து ரூபாய்க்கு வாங்கினேன். நெடு நாள் வரையில் அதில் வண்ணான் துணிகளையும், உதவக்கூடிய புஸ்தகங்களையும் வைத்திருந்தேன். ஒரு நாள் என் தாயார் அதை ஒழித்து வைக்கையில், எனக்குத் தெரியாமல் அதில் ஒரு கள்ள அறை இருந்ததையும், பத்து நூறு ரூபாய் நோட்டுகள் இருந்ததையும் காண்பித்து அதை வெளியே சொன்னால் ஆபத்துக்கிடம் என்றும் ஒருவருக்கும் தெரிவிக்க வேண்டாமென்றும் கூறினாள்.

இது நடந்த ஒரு வருஷத்திற்கெல்லாம் சங்கமேச்வரய்யர் காலமடைந்தார். அவர் மனைவிமக்கள் மட்டுமே தனித்

திருத்கலாயினர். வேலையை இழந்த நான் கையில் 1500 ரூபாய் பணத்துடன் ஏதாவது வியாபாரம் செய்யும் எண்ணத்துடன் மதுரையை அடைந்தேன்.

எனக்கு எப்பொழுதுமே சித்திரம் எழுதுவதிலும் கதைகள் எழுதுவதிலும் அதிக ஆவலுண்டு. கணக்கெழுதும் தொழிலில் ஒரு நிமிஷமாவது ஒழியுமா? ஆனாலும் ஓய்வு நேரங்களில் இங்கிலீஷிலும் தமிழிலும் என்னென்ன புஸ்தகங்கள் அகப்பட்டாலும் படித்து வந்தேன். இவ்வாறு ஐந்தாறு வருஷங்கள் உழைத்ததிலிருந்து பத்திரிகை ஒன்று தற்காலத்திற் கேற்றவாறு வெளியிடலாமென்று தோன்றிற்று. ஆனாலும் எனக்குத் தெரிந்த பெரியவர்களோ அனுபவ முள்ளவர்களோ ஒருவருமில்லாமையால் துணிந்து ஒரு துறையிலும் இறங்க மாட்டாமல் தவித்தேன்.

ஒரு ரேகை சாஸ்திர நிபுணர் எனக்கு நண்பரானார். அவர் என் கைகளைப் பார்த்து, 'பத்திரிகைத் தொழிலே சிறந்தது; கட்டாயம் நன்மை யுண்டாகும்' என்று கூறி என்னை உற்சாகப் படுத்தினார். கடைசியாக, மதுரையில் மாத வெளியீடுகூடச் சரிவர வெளியாகாமல் தவித்துக்கொண்டிருந்த "பிரபோத சந்திரிகா" என்னும் பத்திரிகையின் ஆசிரியரைக் கண்டேன். அவர் பத்திரிகையை விற்று விடுவதாகவும் பணமுடையினால் துன்புறுவதாகவும், இருநூறு ரூபாய் கொடுத்தால் எல்லா உரிமையுடனும் பத்திரிகையை எனக்கு விற்றுவிடுவதாகவும் கூற, அதை விலைக்கு வாங்கி, அதிலிருந்த அசட்டு வேதாந்தம் முதலியவைகளைக் கத்தரித்துவிட்டு நவீன முறையில் பிரசுரிக்க ஆரம்பித்தேன். முதல் முதல் 'கமலையின் காதல்' என்னும் பெயரால் என் தாயின் கதையையே எழுதி, தந்தை ஓடியதுடன் நிறுத்திவிட்டேன். இப்பொழுது என் 'சந்திரிகா' மாதம் இரு முறை வெளி வருகிறாள்......" என்று கூறுமுன், "சந்திரி

வின் ஆசிரியர் நீங்கள்தானா?'' என்று கண்களை மலர
ழித்த வண்ணம் திகைத்துவிட்டான் ரங்கன்

ஜகதீசன் மீண்டும் தொடங்கினான் :—

"பிரபோத என்ற அடைமொழியைக் கொடுத்தால்
வதாந்த மென்று பயப்படுவார்களோ என்றஞ்சியே
ந்திரிகா' என்றுமட்டும் பெயரை மாற்றினேன். அது
தல் பத்திரிகை பெரிதும் அபிவிருத்தி யடைந்து தமிழ்
டெங்கும் பரவி யிருக்கிறது.

இதற்குமேல் மதுரையில் பத்திரிகை வளர்ச்சிக்கு
டமில்லையாதலால், "சந்திரிகா''வை வாரப் பத்திரிகை
ாக்குவதற்கும், அதன் காரியாலயத்தைச் சென்னைக்கு
ாற்றுவதற்காகவுமே நான் இப்போது அங்கே சென்றது.
சன்னையில் எல்லா ஏற்பாடுகளும் திருப்திகரமாகவே முடிந்
ன. நான் சென்னை சென்றபோது என் தாயா
ரத் தேவாரத்திற்கு அனுப்பி யிருந்தேன். தேவாரத்தி
ருந்து என் தாயாரை அழைத்துக் கொண்டு போவதற்கா
வே அங்கே செல்லுகிறேன். அங்கிருந்து சென்னைக்கு
ாறுவதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டு, ஒரே தட
வையில் மதராஸிற்குக் கிளம்பிவிட வேண்டியதுதான்''
ன்று சொல்லி முடித்தான் ஜகதீசன்.

# அத்தியாயம் 14

## தேவாரம்

தேவாரம் மிகவும் அழகிய கிராமம். அதைச் சுற்றிக் காணப்பட்ட சிறிதும் பெரிதுமான மலைத்தொடர்களும், பச்சைப் பசேலென்று காண்போர் கண்களைக் கவரும் விளைநிலங்களும் இயற்கையரசியின் எழிலைப் பன்மடங்கு அதிகரித்துக் காட்டின. அங்கே பாய்ச்சலுக்கு உபயோகிக்கும் தண்ணீர் முழுவதும் சுருளி என்ற காட்டாற்றினுடையதே. அது வரிசை நாட்டு மலைகளில் உற்பத்தியாகித் தேவாரத்திற்கருகில் மலையுச்சியிலிருந்து அருவியாக வீழ்கின்றது. அவ்வூரின் இயற்கை யமைப்பும், மலைச் சிகரங்களின் கம்பீரமான தோற்றமும், ஒரு முறை கண்டால் போதும்; மனதை விட்டகலா. அத்தகைய காட்சியை ரங்கன் அதற்கு முன்னர் கண்டதே யில்லை. ஆகையால் அவனை அறியாமலே இதயம் பூரித்தான். உயிரிழக்க எண்ணிய தன்னைத் தடுத்தாட் கொண்ட கடவுளின் திருவருளை எண்ணி எண்ணி உடல் புளகித்தான். ஜகதீசனுடைய தூண்டுதலால் முன்தினமே தன் தந்தைக்கு எழுதப்பெற்ற கடிதம் கிடைத்து, அவர் ஆனந்தப்படுவார் என்பதை எண்ண அவன் அகமும் முகமும் ஒருங்கே மலர்ந்தவனாய் ஜகதீசனைப் பார்த்துப் புன்முறுவல் கொண்டான்.

“என்ன! ரங்கா! தானே சிரித்துக் கொள்ளுகிறாய். என் தாயாரை உனக்குப் பிடித்திருக்கிறதா?” என்று சொல்லி, “அம்மா! இந்தப் பையனுக்குக் கொஞ்சம் பட்சணம் கொடு” என்றான்.

"இதோ, இரண்டு பேருக்கும் எடுத்து வைத்திருக்கி றன். நீ வரப்போகிருயென்று வெல்ல மனோஹரமும் ]திரசமும் பண்ணி வைத்தேன்" என்று கூறி, இரண்டு ட்டுகளில் பக்ஷணங்களைக் கொணர்ந்து வைத்தாள் செல்லம் ாள்.

பிறகு, "இந்தப் பிள்ளை யார்? எங்கேயோ பார்த்த ுகமா யிருக்கிறதே" என்ருள்.

"வழியிலே கண்டுபிடித்துக் கொண்டுவந்தேன்."

"அவன் என்ன, புலியா கரடியா பிடித்துக்கொண்டு பர? இன்னமும் உன் குழந்தைத் தனம் அப்படியேதா ரிருக்கிறது" என்று கூறி, அவன் கன்னங்களைத் தொட்டுக் கையைத் திருஷ்டி முறித்தாள்.

"ஏண்டாப்பா, இந்தப் பிள்ளை என்ன காரியமாய் வந் திருக்கிறது? யாரகத்துப் பிள்ளை?"

"அம்மா! அதற்குள் என்ன அவசரம்? எனக்கு வெகு நாளாகத் தம்பி, தமையன் ஒருவருமில்லையே என்று றை. அதற்காக இவனைத் தம்பியாக ஸ்வீகாரம் செய்து காள்ளலாமென்றுதான் அழைத்து வந்தேன். அவன் என் தம்பியா யிருப்பதில் உனக்கு ஆக்ஷேபமில்லையே?" என் றன்.

செல்லம்மாள் சிந்தனையில் ஆழ்ந்தாள். சில நாட்களுக்கு முன் ஒரு குறிகாரியிடத்தில் கைரேகையைக் காண்பித்த தும், அவள் "கூடிய சீக்கிரத்தில் கணவனைச் சந்திப்பாய். ஆனல் அவரால் உனக்கு ஒரு பயனுமில்லை. உன் மகன் நிறையச் சம்பாதித்து சுகஜீவியாய் வாழ்வான்" என்று கூறி பதும் அவள் மனக்கண்ணின் முன் தோன்றின. ஒருவேளை தன்னை வெறுத்துச் சென்ற கணவர் தஞ்சையில் மறுமணம் புரிந்து கொண்டு இல்லறம் நடத்துகிருரோ? இச்சிறுவன் அவருடைய இளையாளின் மகனு யிருக்கலாமோ? ஜகதீசன்

கண்டுபிடித்து அழைத்து வந்திருக்கிறானோ? அல்லது அவனே வறுமை வாய்ப்பட்டு, ஜகதீசனைத்தேடி, அவன் நல்ல நிலைமையிலிருப்பதை அறிந்து சென்னைக்கே வந்திருக்கிறானோ?" என்று இப்படியெல்லாம் எண்ணினாள்.

மலர்ந்திருந்த அவள் முகம் ஒரு விநாடியில் கவலை தேங்கிக் குழம்புவதைக் கண்டான் ஜகதீசன். அவள் உள்ளே செல்லவும், பட்சணம் தின்பதை நிறுத்தி, ஜகதீசன் அவளோடொன சமையலறைக்குள் நுழைந்தான். செல்லம்மாள் மெதுவான குரலில் "உங்கப்பாவைக் கண்டாயா?" என்று கேட்டாள்.

"அப்பாவையும் காணோம், ஆட்டுக் குட்டியையும் காணோம். நான் அவரைக் கண்டதாகச் சொல்லவில்லையே!"

"பின், இந்தப் பையன் யார்?"

"நீ யாரென்று நினைக்கிறாய்?"

செல்லம்மாள் தலையைக் குனிந்துகொண்டாள். அவள் கண்களிலிருந்து முத்து முத்தாய்க் கண்ணீர் சிந்தியது. ஒரு கணத்தில் தன் தாய் வருத்தப் படுகிறாளென்பதைக் கண்டு கொண்டான். உடனே அவளருகில் நெருங்கி, "அம்மா! என்ன சங்கதி?" என்று கெஞ்சிய குரலில் கேட்டான்.

செல்லம்மாள் தன் மனதிலிருந்ததை ஒருவாறு வெளியிட்டாள். "பூ! இப்படியா நினைத்துக் கொண்டாய்! அவரைக் கண்டால் உனக்கு முன்னமேயே தெரிவித்திருக்க மாட்டேனா?" என்று கூறி, ரங்கன் பனங்குடி மிராசுதார் பதஞ்சலி சாஸ்திரியின் இரண்டாவது பிள்ளை என்ற வரலாற்றை எடுத்துக் கூறினான்.

செல்லம்மாளுக்கு வயது நாற்பத்தைந்திருக்கலாம். அவ்வளவு துன்பங்களிலடிபட்டும் அவள் முகம் இன்னும் சோபையுடனேயே திகழ்ந்தது. இள நரையுடன் கூடிய முன்னெற்றியில் புரளும் கூந்தல் சுருள்கள் அவள் முகத்

'ற்கு ஓர் அழகைக் கொடுத்தன. இளமையில் அவள் எத்
கைய பேரழகு வாய்ந்தவளா யிருந்திருப்பா ளென்பதை
ங்கன் தானே கற்பனை செய்து பார்க்கலானான்.

வெளித் தோற்றத்திலும் பன்மடங்கு இனிமை வாய்ந்
து அவள் இதயம் என்பதை எண்ண எண்ண, அத்தகைய
'பூர்வமான மனிதர்களைத் தனக்கு நண்பர்களாக்கிய எம்
பருமானின் அருளைப் போற்றினான். "தேவாரத்தில்
த்துப் பதினைந்து நாட்கள் வேலையிருக்கிறது" என்று ஜக
சன் கூறியது இவனுக்கு மிகுந்த சந்தோஷத்தை யளித்
து.

அவனது சங்கதிகள் முழுமையும் அறிந்த செல்லம்
ாள் அவனை மிகுந்த பரிவுடன் நடத்தலானாள். சாந்தமும்
நீணையும் ஒருங்கே திகழும் அவளது பார்வை அவனை
'குந்த பயபக்தியுடன் நடக்கும்படி தூண்டிற்று. ஓர்
லனு மில்லாதவளாய் முற்றும் துறந்த முனிவர்போல்
தான்றினாள் செல்லம்மாள்.

காலை மாலைகளில் அவள் பூஜை அறையில், தாயுமானார்,
ட்டினத்தார் முதலியோரது பாடல்களைப் பாடிப்பாடிப்
ரவசமாவாள். அவளது இனிய குரலைக் கேட்டு, முதுமை
'லும் அவ்வளவு இளமையுடன் விளங்கும் அதன் அழகைக்
ண்டு வியப்புறுவான். அவள் நடந்து வரும்பொழுது, நிர்ப்
ாக்கியவதியாய்ச் சித்த சுவாதீனத்தை இழந்து தவிக்கும்
ன் தாயை நினைத்து நினைத்துக் கண்ணீர் சொரிவான்.

ஜகதீசனது வேலைகள் ஏறக்குறைய முடிந்துவிட்டன.
|ப்பொழுது தற்செயலாய்ச் சங்கமேச்வரய்யர் குமாரர்களைக்
ண்ட ரங்கன், அவர்களது ஆடம்பரத்திலும் பேச்சிலும்
யங்கி, சியாமளிக்கு அத்தகைய வரன் கிடைக்குமோ என்
றெண்ணி ஜகதீசனைக் கேட்கத் தருணம் பார்த்துக் கொண்டி
ந்தான்.

முற்றத்தில் கயிற்றுக் கட்டிலில் ஜகதீசன் உட்கார்ந் திருந்தான். தாழ்வாரத்தில் தூணில் சாய்ந்து உட்கார்ந் திருந்தாள் செல்லம்மாள். "ஏன் அம்மா! மாமாவகத்துச் சாமிநாதனும் முத்துசாமியும் எப்படி யிருக்கிறார்கள்? அம்மாமியை இரண்டு மூன்று முறை சென்றும் பார்க்க முடியவில்லை. நாளைக்காலையில்தான் அவர்களைப் பார்க்க வேண்டும். கலியாணமாகி விட்டதா?" என்றான்.

செல்லம்மாள் மிகவும் தணிந்த குரலில் "பயல்கள் சுத்தக் காவாலிகள். கலியாணமேது? யார் துணிந்து பெண் கொடுப்பார்கள்? முன்பின் தெரியாதவர்களாய் யாராவது பெண் கொண்டுவந்து கொடுத்தால்தான் உண்டு. அம்மாமி, பாவம்! எப்படியாவது பிள்ளைகளுக்குக் கலியாணமாகி விட்டால் போதுமென்று பறக்கிறாள். சொத்து முழுவதும் அடமானம். ஆனை யிருந்து அரசாண்ட மண்டபத்தில் பூனை யிருந்து புலம்பித் தவிக்கிறது. அம்மாமிக்குப் பிள்ளைகளின் நடத்தை சுத்தமாய்ப் பிடிக்கவில்லை. ஆனால் அவள் வாய் திறக்க வழியில்லை. அப்பேர்ப்பட்ட மகானுபாவருக்கு இப் படி அவலமாய்ப் பிள்ளைகள் பிறந்திருக்கவே வேண்டாம். விதி யாரை விட்டது? வாழ்ந்தார் கெட்டால் வரையோட் டிற்கும் காணாது என்பார்களே, அது சரியா யிருக்கிறது. யார் என்ன செய்யலாம்!" என்றாள்.

"அவ்வளவு சொத்தும் எப்படிப் போயிற்று? குடி கிடி உண்டோ?"

"உண்டோ என்கிறாயே, அதிலிருந்து தான் எல்லாம் ஆரம்பம்; போடி நாயக்கனூர் 'டீ' தோட்டத்துத் துரை யுடன் சிநேகமாம். அதிலிருந்து முதலில் அண்ணன், பிறகு தம்பி; எல்லோரும் இப்பொழுது பீப்பாய்க் குடிதான். வீட்டிலிருந்த நகை, நட்டு, வெள்ளிப் பாத்திரம் எல்லாம் போயிற்று. வீடு மட்டும் அம்மாமி பேரில் வாங்கியிருப்ப

தால் 'அதற்கும் கையெழுத்துப் போட்டுக்கொடு; விற்று விடுகிறேன்' என்று விலை பேசுகிறான். அவள் மாட்டே னென்கிறாள். வீடு நிர்தூளிப் படுகிறது. (இரகசியமாய்) நாம் கூப்பிட்டால்கூட வந்துவிடும் நிலைமையி லிருக்கிறாள்" என்றாள்.

"அடாடா! எப்படி யிருந்த குடும்பம் எப்படியாகி விட்டது? பாவம்!" என்று பெருமூச் செறிந்தான் ஜகதீசன்.

## அத்தியாயம் 15

# கல்யாண விசாரம்

“மனிதனுக்குக் கஷ்டகாலம் வருவதுண்டு; ஏதோ சில காலம் திண்டாடிப் பிறகு சரியாகும். ஆனால் இப்படியா அநியாயம்? ஒன்றன்பின் ஒன்றாய் ஒரே தோரணமா? அட கிரகசாரமே! இந்த வீட்டிற்கு வந்தது முதல் ஓய்ச்சல் ஒழிவு என்பதில்லாமல் அல்லவா ஆகிவிட்டது? பெரிய பிள்ளையார் ம-ா-ா-ஸ்ரீ நாகராஜய்யர் அவர்கள் ஓடுகிற ‘சீன்’ ஆயிற்று. சுந்தரியும் ராஜூவும் ஓர் இடைக் காட்சி. இப்பொழுது ஸ்ரீ ரங்கனுதப் பெருமாளும் தொலைந்து போய் விட்டார். இன்னும் என்ன வேண்டும்? ஒன்றுதான் ஓடி விட்டது என்றால், அதற்கு வால் பிடிக்க இதுவும் போயிருக்கிறது. கேடு கெட்ட கழுதைகள்! இந்த வீட்டு வாசல் படியில் கால் வைக்கட்டும்; காலை ஒடித்து விடுகிறேன்! முழந்தாள் சில்லைப் பெயர்த்து விடுகிறேன்!..........” என்று அதி உக்ர ஸ்வரத்தில் திட்டிக் கொண்டிருந்தார் பதஞ்சலி சாஸ்திரியார்.

“அப்பா! அடஐயா! பாடிப்பாடிக் குத்தினாலும் பதரில் அரிசி இல்லை. நீ கோபித்து என்ன செய்கிறது? காலவித்யாசம் இப்படி எல்லாம் வந்து சேருகிறது. யார் என்ன செய்யலாம்? நீ இப்படி இரைந்து கொண்டிருந்தால் மனோ வேதனை அதிகமாகிறதே யன்றி வேறொன்றுமில்லை. எனக்குக் கொஞ்சங்கூட வீட்டிலிருக்கவே பிடிக்கவில்லை. மலை போலப் பெண் நிற்கிறாள் கல்யாணத்திற்கு. படுத்தால் படுக்கை கொள்ளவில்லை. பிறக்கிற தை மாதத்திலாவது ஏதாவது முடிக்க வேண்டாமா? நாலு பெயரிடம் ஜாதகம் வாங்கிப்

பார். போனவைகளைப் பன்னிப் பன்னிச் சொல்லிப் பயல
னென்ன? நடக்க வேண்டியவற்றை யல்லவோ பார்க்கவேண்
டும்? 'சொத்துப் போய்விட்டது; பிள்ளைகள் ஓடிவிட்டார்
கள்' என்று கலியாணத்தை நிறுத்த முடியுமா? ஆயிரக்
கணக்காய் வாரிக் கொடுத்த மாப்பிள்ளைகளினால் என்ன சுகத்
தைக் கண்டோம்? பணக்காரப் பிள்ளைதான் ராஜு. அவ
னும்தான் வேலை, வேலை என்று தவிக்கிறான். ஆகையால் இருக்
கும் நிலைமைக்குத் தகுந்தாற்போல, ஏதோ கொஞ்சம் மரியா
தையான ஒரு பிரம்மசாரியைப் பார். முப்பது, நாற்பது, சம்
பளமானாலும் கால் வயிற்றுக் கஞ்சியாவது குடிக்குமோ
இல்லையோ? பிறகு அவள் அதிர்ஷ்டம்" என்றாள் சேஷி
யம்மாள்.

இவ் வார்த்தைகள் அவரைப் பின்னும் கோபமூட்டின.
கடுகடுத்த குரலில் "நான் ஜாதகமும் வாங்கவில்லை; பாதக
மும் வாங்கவில்லை. நீ என்ன வேண்டுமானாலும் செய்து
கொள். என்னைக் குப்புறத் தள்ளி உதைத்தால்கூட என்னி
டம் செப்புச் சல்லி கிடையாது. எதை வைத்துக்கொண்டு
கலியாணம் செய்வது? வெறுங்கை முழம் போடுமா? அந்
தப் பாவிப்பயல் ராமசாமி தீக்ஷிதன் நம்முடைய சொத்
துக்கே நாம் வியாஜ்யம் செய்து வாங்கும்படி வழி வைத்து
விட்டான். என்ன சாமர்த்தியம்! சப்ரிஜிஸ்தார், எவனோ
ஒரு நடுக்களவாணி, இவர்களை வசப்படுத்தி அந்தச் செட்டி
யை நம்பும்படி செய்து, இவ்வளவு அயோக்யத்தனமல்லவா
பண்ணி யிருக்கிறான்? செட்டிக்கு வேண்டியவனைப் பார்த்து
அவனுக்கு என்ன கொடுத்தானோ? இல்லாவிட்டால் பனங்
குடி எங்கே? செட்டி நாடு எங்கே? அவ்வளவு சுலபமாய்
ஏமாற்ற முடியுமா? இன்னும் தீர்ப்பாகி நிலம் நமக்கு வந்து
சேர எவ்வளவு நாளாகிறதோ? கோர்ட்டுச் செலவு வேறு;
அது கையைவிட்டுக் கொடுத்தாக வேண்டும். இந்த லக்ஷணத்

தில் கல்யாணம், கார்த்திகை என்று நீ பொழுது போகாமல் அலேகிறுய். என்ருல் ஒன்றும் முடியாது. இனிமேல் என்னி டம் கல்யாணப் பேச்சே பேசாதே" என்று கூறினுர் பதஞ் சலி சாஸ்திரிகள்.

"கலியாணமென்ருல் இப்படிச்சொல்லுகிறுய். நாளைக் குத் திடீரென்று எதிர்பாராத செலவு வருகிறதென்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது எப்படியேனும் செலவு செய்வாயோ இல்லேயோ? அப்படிப்போல் நினைத் துக் கொள். எங்கேயாவது கைமாற்ருே, வீட்டை ஒற்றி வைத்தோ நடத்த வேண்டியது தான். அதற்காகக் குழந் தையை எத்தனை நாள் கலியாண மில்லாமல் வைத்திருப் பாய்? அவளைத்தான் ஈசுவரன் நாலாவிதத்திலும் சிறுமைப் பட வைத்து விட்டான். பாட்டா, படிப்பா எல்லாவற்றை யும்தான் நிறுத்தியாயிற்று. உங்களுக்குப் பரிசாரகம் செய்யத்தான் சரியாயிருக்கிறது!" என்ருள் சேஷியம்மாள்.

"படிப்பையும் பாட்டையும் நிறுத்தினுலென்ன? வீட் டிலேயே அபிவிருத்தி செய்துகொள்ளக் கூடாதென்று யார் கையைப் பிடிக்கிருர்கள்?"

"வீட்டிலேயே திவ்யமாய்ச் செய்யலாம்! உன் செல் வப் பெண் சுந்தரி சுகமாயிருக்கப் பிறந்தவள். இரண்டும் என் பேத்திகள் தான்; நானே சொல்லக்கூடாது. இவள் வீணையை எடுத்தால் போதும்; அவளுக்கு மூஞ்சி பொங்கல் வைத்த பானைமாதிரி ஆய்விடுகிறது. ஒரு கிழம், ஒரு குழந் தை, ஒரு பித்து. இவ்வளவையும் கட்டிக்கொண்டு அவள் ஒருத்தியே கஷ்டப்படுகிருள். சுந்தரிக்கு அகமுடையா னிடம் பேசிக்கொண்டு நிற்கத்தான் சரியாயிருக்கிறது. என்ன தான் பேசுவாளோ? அவன் மாடிக்குப் போகும்பொழுது போய்க் கூடவே புகுந்துகொண்டால் பிறகு அவன் வெளி யே போனுல்தான் இறங்கி வருவாள். அவன் பெரிய மனுஷ

யாளகத்துப் பிள்ளை. எதிரிலேயே 'சதிர்' ஆடவேண்டு மென்று அவன்தான் சொன்னாலும், 'ஐயோ பாவம்! என் தங்கை சிறு பெண்; நான் கூடமாட ஏதாவது செய்துவிட்டு வருகிறேன்' என்று சொல்வதுபோக, அவன் கீழே போ வென்றால்கூட வராமல் அங்கேயே பழி கிடக்கிறாள். அகமுடையானைப் 'பூச்சாண்டி' பிடித்துக்கொள்ளாமல் காவல் காக்கிறாள். இது 'தெய்வமே' என்று பாவம்? காலையிலிருந்து தலைவாரிக்கொள்ளக் கூடப் பொழுதில்லை; அதோ தோசைக்கு அறைக்கிறது'' என்று சொல்லி நிறுத்தினாள் சேஷியம்மாள்.

சாஸ்திரியாருடைய கோபம் பறந்துவிட்டது. "இவ்வளவு தானே? இன்னும் ஏதேனும் பாக்கி உண்டோ?'' என்றார்.

"நானும் 'சொல்லக்கூடாது; சுந்தரியும் நம்முடைய குழந்தைதானே; சாகக்கொடுத்து நோகக்கொடுத்து ஏதோ இரண்டு பிச்சைகளிருக்கின்றன; அதில் ஒன்று வெண்ணெய் ஒன்று சுண்ணாம்பா?' என்று பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். நாளுக்கு நாள் அதிகமாகிறதேயன்றிக் கொஞ்சமாவது நம் தங்கையாயிற்றே, நம் தாயாராயிற்றே என்று தோன்றுவதே இல்லை. குழந்தை என்னதான் கத்தட்டுமே, விரலால்கூடத் தொடுவதில்லை. இந்த லட்சணத்தில் நான் இவள் அகமுடையானோடு பேசும்பொழுது போய்விட்டால் அதுவரையில் தமிழ் பேசுகிறவள் அப்பொழுது பெரிய துரைசாணி ஆகி விடுகிறாள். இங்கிலீஷ் தர்பார் நடக்கிறது. இவைகளெல்லாம் நீ கொடுத்த இடம். என்ன செல்லம் வேண்டி யிருக்கிறது!'' என்றாள்.

சாஸ்திரியார் பெருமூச்செறிந்து அப்பாடாவென்று தானும் விசுப்பலகையில் உட்கார்ந்தார்.

லக்ஷ்மி கண்ணாடியைப் பார்த்துக் கல கலவென்று நகைத்துக் கொண்டிருந்தாள். ஏதேதோ அர்த்தமற்ற பாடல்

கயோ உச்சஸ்வரத்தில் பாடிவிட்டுத் தாமிரச் செம்பில் எ(
யிருக்கும் கிளியை நோக்கி, "சிலுகா,சிலுகா, ராவே, நன்னு
சிட்லிஞ்சி போவே" என்று கொஞ்சிக்கொண் டிருந்தாள்.
தவித்துக் கொண்டிருந்த கண்ணனை வாரி எடுத்துத் தொட்டி
லில் கிடத்தித் தூங்கவைக்கும் பொருட்டு, கொஞ்சிய வண்
ணம் குனிந்தாள் சேஷியம்மாள்.

அதுவரையில் சாந்தமா யிருந்த லக்ஷ்மி எழுந்து, "அடி தாடகை! அடி சூர்ப்பனகை! என் கண்ணனை ஏன் தொடுகிறாய்? அடி பூதகி!" என்று சொல்லி, சேஷியம்மாளின் தலையில் நறுக் நறுக்கென்று குட்டி விட்டாள். பாட்டி பயந்து வெளியே வந்துவிட்டாள். சாஸ்திரிகள் மெதுவாய் அவ்வறையின் கதவைச் சாத்திவிட்டு, சமயலறைக்குச் சென்றார். அங்கே சியாமளி தன் வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு, பூஜை செய்யுமிடத்தில் தீபத்தை ஏற்றிவிட்டு, ச்யாமளா தண்டகம் சொல்லிக்கொண் டிருந்தாள்.

அவள் வேலை செய்திருக்கும் நேர்த்தியும், பணிவும் அடக்கமும் தோன்றும் அவள் பார்வையும் சாஸ்திரிகளைப் பரவசப் படுத்தின. இந்தக் கிளியை மணக்க எவன் கொடுத்து வைத்திருக்கிறானோ வென்றெண்ணி மனம் சலித்தார். "சியாமளம்! என்ன சமையல் செய்திருக்கிறாய்?" என்று கேட்டு விட்டு, வாசல் படியில் நின்றவாறே "அம்மா பாட்டியை நறுக்கென்று குட்டிவிட்டாள். என்னைக் கண்டால் என்ன சொல்லுவாளோ? நீ கொஞ்சம் வருகிறாயா? இப்பொழுதுதான் உட்கார்ந்தாய் போலிருக்கிறது. சரி, சற்றுப் பொறுத்து வருவதானாலும் வா" என்றார்.

லக்ஷ்மி அதற்கு முன்பு இருந்ததைவிடத் தெளிவடைந்திருந்தாளென்றே தோன்றிற்று. வைத்தியரும் அப்படித்தான் அபிப்பிராயப் பட்டார். குழந்தையை யாராவது எடுத்து விட்டால் மட்டும் சில சமயங்களில் கோபம் வருமே

யன்றி மற்ற வேளைகளில் மிகவும் சாந்தமாகவே காணப் பட்டாள். கல்யாணி, நாகு இவர்களின் பெயரையே சொல் லித்தான் சியாமளி சுந்தரி இருவரையும் கூப்பிடுவாள். அவள் எதைக் கேட்டாலும், "ஆம் ஆம்" என்று சொல் லும்படி வைத்தியர் கூறியிருந்தார். நாளுக்கு நாள் அவள் குணமடைந்து வருவதைக்கண்டு சாஸ்திரிகளும் சற்றுச் சமா தான மடையலர்னர். ஆனாலும், நாகு திரும்பி வந்து விட் டால் உடனே தெளிந்தாலும் தெளியலாம் என்று சாஸ்திரிக ளுக்குத் தோன்றிற்று.

சினிமாவிலிருந்து திரும்பி வந்த சுந்தரி, தலையை வலிக் கிறதென்று சொல்லிப் படுத்துக் கொண்டாள். பாவம்! பேதை சியாமளி ஒன்றையும் மனதிலெண்ணமல் புன்னகை பூத்த முகத்துடன் வேலைகளை யெல்லாம் செய்துவிட்டு, லக்ஷ்மியின் அருகே சென்று கண்ணனை எடுத்து மார்புறத் தழுவிக் கொஞ்சலானாள். கண்ணன் தன் சிறு கைகளை நீட்டி, "வாவா வாவா" என்றழைக்க அவன் வாயிலிருந்த எச்சில் அவள் முக முழுவதும் தெறித்தது. ஆனந்தக் கட லில் ஆழ்ந்தாள் சியாமளி.

அவள் துன்பங்களை யெல்லாம் மறக்கக் கண்ணனையும் புத்தகங்களையுமே கருவியாகக்கொண் டிருந்தாள். "ரங்க னிருந்தால் இரவலாகவாவது புத்தகங்கள் கொணர்ந்து கொடுப்பான். அவனும் போய்விட்டான். இனி நீ ஒருவன் தானுண்டு" என்று கொஞ்சிக்கொஞ்சிக் குழந்தையைச் சீராட்டுவாள். அவன் கண்களை மலர விழிக்கும் பொழுதும், கன்னங்கள் குழியத் தன் பற்களற்ற சிறு வாயைத் திறந்து நகைக்கும் பொழுதும் அவள் தன்னையும் மறந்து பரவச மடைவாள். இவ்வுலகில் வேறு எவரையும் விட அக் குழந் தையே அவளுடைய உள்ளத்தின் அன்பைக் கவர்ந்திருந் தது. தனிமையில் வேலை செய்து கொண்டிருக்கும் பொழுது

கூட, "கண்ணன், என்னப்பன், என் கட்டிக்கரும்பு, அத்தனையும் தங்கம், பத்தரை மாற்றுப் பசும் பொன், கண்ணு, கண்மணி" என்று தனக்குத் தானே கொஞ்சிக் கொள்ளுவாள்.

காரியங்களை முடித்து, அம்மாவின் அருகில் சென்று உட்கார்ந்த சியாமளி கண்ணனைக் கைகளிலேந்திய வண்ணம்,

உச்சிதனை முகந்தால்—கருவம்
ஓங்கி வளருதடி
மெச்சியுனை ஊரார் புகழ்ந்தால்
மேனி சிலிர்க்குதடி.

சற்றுன் முகஞ் சிவந்தால்—மனது
சஞ்சல மாகுதடி.
நெற்றி சுருங்கக் கண்டால் எனக்கு
நெஞ்சம் பதைக்குதடி.

என்று பாடிக்கொண்டிருந்தாள். அவள் கண்களில் கண்ணீர் ததும்பிற்று. குழந்தைப் பருவத்தில் பணங்குடியில் வீடு கட்டி விளையாடியதும், தன் தோழிகளுடன் பொம்மைக் கலியாணம் செய்து மகிழ்ந்ததும், சென்னைக்கு வந்தபின் குடும்பத்துக்கு நேரிட்ட துன்பங்களும் ஒவ்வொன்றாய்த் தோன்றி அவள் அமைதியைக் குலைத்தன. "நாகு எப்பொழுது வருவானோ? ரங்கன் என்ன வானானோ?" என்ற வார்த்தைகள் அவள் வாயினின்றும் புறப்பட்டன.

நாகுவென்ற வார்த்தை செவியில் வீழ்ந்ததுதான் தாமதம், சுருட்டிக்கொண்டெழுந்தாள் லக்ஷ்மி. "கல்யாணம்! நாகு வந்துவிட்டானா?" என்று அர்த்தமற்ற பார்வையுடன் அவளை ஏறிட்டுப் பார்த்தாள்.

சியாமளி திடுக்கிட்டாள். "மனோ வேகத்தினால் மெய் மறந்து அல்லவா கூறிவிட்டேன்? நல்லவேளை! சுந்தரியைப் பற்றி ஏதாவது உளறி அவள் காதில் விழுந்து விட்டால்—" என்று கூறிக்கொண்டாள்.

## அத்தியாயம் 16

# கனவு

அழகிய தோப்பு. அதன் நடுவே தெள்ளிய தாமரைக் குளம். காண்போர் கண்களைக் கவரும் பூஞ்செடிகள். அதை யடுத்து ஒரு சிறு குடில். சுற்றுப்புறங்களில் ஒட்டுமா, கொய்யா, முந்திரி முதலிய பழமரங்கள். அவைகளில் கூட்டங் கூட்டமாய் உட்கார்ந்தும், ஆடியும், பாடியும் களிக்கும் புள்ளினங்கள். அருகிலுள்ள மலைச் சரிவுகளிலிருந்து பளிங்குபோல் பாய்ந்து ஓடிவரும் சிற்றருவியின் சலசலவென்னும் சப்தம். இவைகளுக் கிடையில் ஒட்டுமா மரத்தின் தாழ்ந்த கிளையொன்றி லுட்கார்ந்து, கால்களை ஊன்றி ஊஞ்சலாடிக் கொண்டிருக்கிறாள் சியாமளி.

அவளது கன்னங்களில் முத்தமிடுபவை போல் அழகிய செவிகளினின்றும் நட்சத்திரம் போன்ற குண்டலங்கள் அசைந்தாடின. சித்திரவேலைகள் செய்த மெல்லிய வெளுத்த ரோஜா வர்ணச்சேலை உடுத்து, இடது தோள்புறத்தில் மயிலுருவமைத்த 'ப்ரூச்' போட்டுக் கொண்டிருந்தாள். கழுத்தில் முத்தாரம் அணிந்திருந்தாள். கால்களில் ஜோடு அணிந்தது போல் மருதாணி இட்டிருந்தாள்.

எதிரிலிருந்த குடிசையிலிருந்து ஒரு ஸ்திரீ—சற்று ஸ்தூல சரீரமுள்ளவள்—கையில் இராமேச்வரத்தில் செய்யப்படும் பனை ஓலை மஞ்சள் பெட்டி ஒன்றை எடுத்து வந்தாள். அவளைக்கண்ட சியாமளி மரத்திலிருந்து கீழே இறங்க, அம்மாதரசியும் இவளை நெருங்கி "அம்மா! உனக்கொன்றும் குறைவில்லை. இதைப் பத்திரமாய் வைத்துக்கொள். மலை போல் வந்தாலும் பனிபோல் நீங்கிவிடும்" என்று சொல்லி

அவ்வோலைப் பெட்டியை இவள் கையில் கொடுக்க, அதை வாங்கித் திறந்தாள் சியாமளி. அதில் மஞ்சள் கிழங்கும், குங்குமப்பரணியும், சீப்பு, கண்ணாடி, கருகுமணி, வெற்றிலை பாக்கு இவைகளும் காணப்பட்டன. நிமிர்ந்தாள்; அந்தம்மாள் காணப்படவில்லை. மெட்டி ஓசைமட்டும் 'சிலுக் சிலுக்' கென்று கேட்டது. கண்ணனின் குரல் கேட்டு எழுந்துட்கார்ந்து கண்களைக் கசக்கிக்கொண்டாள் சியாமளி.

* * *

"ஏனடியம்மா சியாமளம்! அந்தம்மாள் எப்படிப் புடவை உடுத்தி யிருந்தாள்?"

"சிவப்பு; 'காயும் பழமும்' என்பாயே அந்தச்சேலை. நெற்றியில் பெரிய குங்குமப்பொட்டு. காலில் வண்டிமெட்டி. காதுகளில் பொன்னோலை ஜிமிக்கி. மூக்கில் பெரிய நத்து. காதில் முருகு, பாவலி, குருடு. இவைகளிலிருந்து மாட்டல் நல்ல சிவப்பு, பரங்கிப்பழம்போல். எறக்குறையப் பாண்ட மங்கலத்துப் பாட்டி என்று வைத்துக்கொள்ளேன்" என்றாள் சியாமளி.

"சரிதான். மங்கலிப்பெண்டுகள்தான் சந்தேகமில்லை. காலையில் குளித்ததும் முடிந்து வைக்கவேண்டும். என்னம்மா! எல்லோரும் குழந்தைக்கு நல்ல வரனைச் சேர்த்து முடித்து வையுங்கள். ஏழுமலையானே! வேங்கடாசலபதி! என் கண்மணிகளைக் காப்பாற்று. உனக்குக் கைநிறையக் காசும் பணமுமாய்ப் போட்டு அங்கப் பிரதக்ஷிணம் செய்யச் சொல்லுகிறேன்" என்று பலவாறு வேண்டியவளாய்ப் பாட்டி, "ரங்க நாதருடைய பங்கஜ பாதத்தை அங்கம் உருகி" என்று உதயராகம் பாடலானாள். அன்றிரவு மிகுதிப் பொழுதை பாட்டியும் பேத்தியும் தூங்காமலே கழித்து விட்டனர்.

காலை சுமார் ஒன்பது மணியிருக்கலாம். சுந்தரி காய் கறி நறுக்கிக் கொண்டிருக்கிறாள். பாட்டி மணையைப் போட்

டுக்கொண்டு அடுப்படியிலுட்கார்ந்து ஏதோ செய்துகொண் டிருக்கிருள். அவள் உடல் மட்டும் அங்கிருந்ததேயன்றி மனம் சியாமளியின் கனவைச் சிந்திப்பதிலேயே ஈடுபட்டிருந்தது. குழந்தை கண்ணன் 'சொட்டி உருட்டி' விஷமம் செய்துகொண்டிருந்தான்.

சியாமளி குளித்து மடியுடுத்திச் சேஷியம்மாளுக்குக் குற்றேவல் புரியச் சித்தமாயிருந்தாள். "ஸார்! போஸ்ட்!" என்று கூவுவது கேட்டு ஜபம் செய்துகொண்டிருந்த சாஸ் திரியார் எழுந்து, சவுக்கத்திஞல் கைகளை மூடியவண்ணம் நடைக்குச் சென்ருர். கடிதத்தைக் கண்டதும் அவர் முகம் மலர்ந்தது. படித்தபடியே சமையலறை யருகில் வந்து "அம்மா! அம்மா! ரங்கன் கடிதம் எழுதியிருக்கிருன். ஏதோ வேலை விஷயமாய் மதுரைப்பக்கம் போனும். முப் பது ரூபாய் சம்பளத்தில் ஏதோ ஒரு வேலை கிடைக்கும் போலிருக்கிறதாம். மற்ற விவரங்கள் பிறகு தெரிவிக்கிற தாக எழுதியிருக்கிருன். விலாசமும் காணும். தேவாரம் என்று போட்டிருக்கிறது. அப்படி ஓர் ஊருக்குப் பெய ருண்டா? அது எவ்விடமோ?" என்ருர்.

"அதென்னமோ, பெயரே புதிதாயிருக்கிறது. தேவா ரமோ? திருவாசகமோ? எங்கேயாவது சௌக்யமா யிருந் தால் சரி. என்னமோ ஏதோ நல்ல பொழுதாய்ப் போக வேண்டுமே என்றிருந்தேன். சியாமளம் விடியற்காலம் சொப்பனம் கண்டேனென்ருள். அது நல்ல சொப்பனம். சீக்கிரம் நன்மை யுண்டாகும் என்றேன். அதற்கேற்ருற் போல் ரங்கன் கடிதம் வந்தது. இனிமேலாவது நல்ல காலம் பிறக்கலாகாதா? அந்தமட்டும் யார் செய்த புண்ணியமோ? முப்பது ரூபாய் வேலையாவது கிடைத்ததே!" என்று சந் தோஷ மிகுதியினுல் உரத்த குரலில் சேஷியம்மாள் கூறி ஞள்.

அதுவரையில் அறையை விட்டு வெளிவராத லக்ஷ்மி, "என்ன! என்னடீ கல்யாணம்! என்ன சமாச்சாரம்?" என்று கேட்டுக்கொண்டே சமையற்கட்டுக்கு வந்துவிட்டாள்.

சாஸ்திரியாருக்கு ஆனந்தம் பொங்கிவிட்டது. லக்ஷ்மி படிப்படியாய்க் குணமடைகிறாளென் றெண்ணியவராய், சந்தோஷ மிகுதியினால் இன்னது செய்வதென்றறியாமல் தவித்தார். சுந்தரியும் ரங்கனைப் பற்றி ராஜுவிடம் தெரிவிக்க ஓடிவிட்டாள். சாஸ்திரியார் பேசிக்கொண் டிருக்கும் பொழுதே,

> "முப்பாழும் கடந்த பெரும் வெளியைக் கண்டான்
> முத்தியெனும் வானகத்தே பரிதி யாவான்
> தப்பாத சாந்த நிலையளித்த கோமான்"

என்று பாடும் குரல் கேட்க, "சுவாமிகள் வந்து விட்டார்" என்று கூறியவராய்த் தெருப்புறம் சென்றார். "சாதியாவதேதடா சலந்திரண்ட நீரெலாம்" என்று தொடங்கி, உடனே நிறுத்தியவராய், "முகத்திலே முறுவலென்னே, அகத்திலே மகிழ்ச்சி என்னே?" என்றார்.

சாஸ்திரியார் ரங்கனது கடிதத்தை நீட்ட, வாங்கிப் பார்த்து, "கற்பகந்தான் சொன்னாளே. மகனை வருந்தாதே யாயையடா என்றாளே. அவள் பொய் சொல்வாளா? ஆனந்தக் கற்பகமாயிற்றே!" என்று தண்டகத்தைக் கீழே போட்டுவிட்டு உட்கார்ந்தார்.

சியாமளி வேலை யிருக்கிறதென்று கண்ணனைக் கொணர்ந்து உட்கார வைத்துச் சென்றாள். அவன் "தாத்தா, காகா" என்று பல்லவி பாடிய வண்ணம் அவர் குடுமியைப் பற்றி இழுத்தான். சாஸ்திரியார் தனது சந்தோஷத்தை அடக்கமாட்டாதவராய், "சுவாமி சொன்னால் பொய்க்காது. சியாமளம் கனவு கண்டாளாம்" என்று கனவின் விவரத்தைக் கூறினார்.

கடைசி வரையில் மௌனமாய்க் கேட்டுக் கொண்டிருந்தார் சுவாமி. "அப்பன்! அது யார் தெரியுமா? குழந்தை நல்ல பாக்கியவதி. பேறு பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வாள். அந்த 'நத்து புல்லாக்குக்காரி' யார் தெரிந்ததா? சிறு குழந்தைகூடச் சொல்லிவிடுமே. என் கண்ணன் (அது சுவாமியாரிட்ட பெயர்தான்) கூடச் சொல்லிவிடுவான்.

அன்னை வடிவமடா அவள் ஆதி பராசக்தி தேவியடா
அவள் இன்னருள் வேண்டுமடா—பின்னர்
யாவுமுலகில் வசப்பட்டு போமடா......"

என்று பாடிவிட்டுக் கண்ணனுக்கு விளையாட்டுக் காண்பிப்பவர்போல் கைகளை கொட்டி,

"தேவியடி பர தேவியடி சிவன்
வாமத்தமர்ந்திடும் தேவியடி
பாவலர் போற்றி பரவும் மயிலையில்
வாழும் மகாதேவர் தேவியடி.
சித்த சுத்தியுடன் சேவித்த பேருக்கு
சித்த முவந்து வரமளிப்பாள்
பக்தர்களைக் கரையேற்ற வந்தபரி
பூரணியா மெங்கள் கற்பகமே.
ஆயிரத் தெட்டிதழ்த் தாமரைப்பூவினில்
ஆனந்தமாக அமர்ந்திருப்பாள்
ஆயிரம் பெயருடையாள் எங்கள் கற்பகம்
அண்டினபேர்களை ஆதரிப்பாள்"

என்று பாடினார். குழந்தை கண்ணனோ ஆனந்தமாய்த் தாண்டவ மாடினான். "ஆனால் நீங்கள் அது நற்காலத்திற் கறி குறி என்கிறீர்களா? எனக்கும் அப்படித்தான் தோன்றிற்று.

அம்மா 'மங்கலிப் பெண்டுகள்' என்கிறாள்" என்றார் சாஸ்திரி.

"செய். செய். உனக்கு எப்படித் தோன்றுகிறதோ அப்படிச்செய். இந்தக் கட்டை கோதாவரி புஷ்கரம் போய், அங்கிருந்து பூரிக்குப் போகும். திரும்ப வரும்பொழுது சுகமாயிருப்பாய். அப்பன்! கவலை ஏன்? ஒன்றென்றிரு, தெய்வம் உண்டென்றிரு, ஜயந்தான்; பயப்படாதே. ஜயமுண்டு பயமில்லை மனமே" என்று பாடியவராய்த் திண்ணையை விட்டுக் குதித்தார் சுவாமிகள்.

அன்று என்றுமில்லாத உற்சாகத்துடன் காணப்பட்டாள் லக்ஷ்மி. வைத்தியரும் இன்னும் இரண்டொரு மாதங்களில் முன்போல் ஆகிவிடக் கூடுமென்றும், ஆனால் அதிகக் கோபமோ சந்தோஷமோ துக்கமோ ஏற்படாமல் நிரம்பவும் எச்சரிக்கையுடன் விஷயங்களைத் தெரிவித்து அவள் மனம் போல் சமயோசிதமாய் நடந்துகொள்ள வேண்டுமென்றும், இடையில் நாகு நற்செயலாய் வந்தால்கூடத் திடீரென்று சொல்லவேண்டா மென்றும் கூறினார்.

அன்று தினசரிப் பத்திரிகையில் நாகுவும் அவனுடன் கூடவிருந்த தொண்டர்கள் நால்வரும் சென்னை ஸெண்ட்ரல் சிறைக்கு அனுப்பப் பட்டுச் சீக்கிரத்திலேயே விடுதலை பெற்று விடுவார்களென்று குறிப்பிட் டிருந்தது.

சேஷியம்மாள் இரகசியமாய்ச் சாஸ்திரியாரை, அழைத்து "ஏண்டா ஐயா! முன்பு ஏதாவது குற்றம் செய்து சிறையில் வைத்தால், வந்த பிறகு குடுமிவைத்து, பூணூல் போடுவதுண்டு. இவனுக்கும் அவைகளெல்லாம் செய்யவேண்டுமோ இல்லையோ?" என்று மிகுந்த பயத்துடன் கேட்டாள்.

"இப்பொழுது உனக்கென்ன விசாரம்? யாரும் பெண் கொடுக்க மாட்டார்களென்று பயமோ? முதலில் சம்பாதித்துச் சாப்பிடக் கையாலாகட்டும். பிறகு அந்த யோசனை

யெல்லாம் செய்யலாம். எப்படியாவது இந்தப் பெண்ணை எவன் கையிலாவது பிடித்துக்கொடுத்து விட்டால் போதும். இவன்களுக்குக் கலியாணமானாலும் சரி, அரசடிப்பிள்ளையா ராய் உட்கார்ந்திருந்தாலும் சரி'' என்றார்.

"என்னமோ கேட்டேன். எப்படியாவது அவன் க்ஷேமமாய் வீடு வந்து சேர்ந்தால் போதும். கோடியாத்துக் குப்புணியின் பிள்ளை லக்ஷ்மணன் இஞ்சினியர் பரீட்சைக்குக் காசிக்குப் போயிருக்கிறானும். ஜாதகம் கேட்கலாமா?'' என்று கேட்டாள்.

"அடே யப்பா! வலுத்த கைகளாயிற்றே. நாம் முன் போலிருப்பதாய் எண்ணிப் பேசுகிறாய். நாலாயிரம் ரொக் கமும் நாலாயிரம் சீரும் எதிர்பார்ப்பார்கள். இப்பொழுது ஆயிரம் ரூபாய் அகப்படுவது பெரிய காரியம். கல்யாணத் திற்கும் சுந்தரத்திற்கும் ஏதோ செயலிருந்தது, செய்துவிட் டேன். சியாமளத்திற்குத்தான் அதிர்ஷ்டப் பஞ்சை. நான் என்ன செய்யட்டும்? எவனாவது ஓர் ஏழைப் பையனைப் பார்த்து ஒரு நாள் கலியாணமாய்ச் செய்துவிட வேண்டி யது'' என்றார் பதஞ்சலி சாஸ்திரியார்.

"அட அசடே! அதெல்லாம் எனக்குத் தெரியாதா? இப்பொழுது அவ்வளவு தொகை எதிர்பார்க்க வில்லையாம். யார் கொடுப்பார்கள் இந்தப் பஞ்ச காலத்தில்? 'ஒரு ஆயிரம் கையில் கொடுத்து உபாயமாய்ச் செய்தாற் போதும்' என்று குப்புணி தங்கை பாகி சொன்னாள்.''

"அம்மா! நீ சாது. பாகி மகா தில்லுமில்லு! நாம் இவ்வளவு சளைத்து விட்டோமென்று தெரிந்துகொண்டு, வேண்டுமென்றே நம்மைப் பரிகாசமாய்க் கேட்டிருக்கிறாள். அதை உண்மையென்று நம்பி என்னைக் கேட்கிறாயே? இன் னொரு முறை கேட்டால் வரன் நிச்சயமாய் விட்டது என்று சொல்லிவிடு. அவளை அதிகநேரம் தங்கவொட்டாதே. ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று சொல்லிக் கிளறிவிட்டுக் கொண்டே இருப்பாள். அது அவள் பிறவி'' என்றார்.

## அத்தியாயம் 17

# கண்வழி நுழைந்த கள்வன்

இரவு எட்டு மணி. ஜகதீசன் சாப்பிட்டுவிட்டுக் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து ஆலோசித்த வண்ணமிருந்தான். ரங்கன் பகல் முழுதும் அலைந்த அலுப்பினால் படுத்தது தான் தாமதம், அயர்ந்து தூங்கி விட்டான். செல்லம்மாள் ஏதோ பாத்திரங்களையும் பெட்டிகளையும் கடகடவென்றெடுப்பதும் வைப்பதுமாயிருந்தாள். அவளுக்கு வீட்டைக் காலிசெய்யவேண்டுமென்ற நினைவு வந்தபோது, அவ்வூருக்குத் வந்தபொழுதிருந்த நிலைமையும், அவ்வழகிய சிற்றூரில் இன்பகரமான பல நாட்களைக் கழித்ததும், ஜகதீசனது இளமையும் அவன் தங்கையின் அன்புக்குரிய குழந்தையாயிருந்த நாட்களும் ஒன்றன்பின் ஒன்றாய்த் தோன்றி அவள் மனதை அலைத்தன. பஞ்சு அத்தான் செய்த சதிச்செயலை எண்ண எண்ண, அவள் நெஞ்சம் இரும்புபோல் கனத்து, படீர் படீர் என்று அடித்துக்கொள்ளத் தொடங்கிற்று. ஏற்கனவே ஊரைவிட்டுப் போகிறோமென்ற ஏக்கத்தினால் அவள் சரியாய்ச் சாப்பிட்டு நான்கு நாளாயிற்று. ஊராரிடம் கொடுத்திருந்தவைகளை வசூலிக்கவும், புதுக் குடித்தனத்துக்கு வேண்டியவைகளைச் சேகரிக்கவுமே பொழுது சரியாயிருந்தது. வேலை மிகுதியினாலும், மனவருத்தத்தாலும் பலஹீனப்பட்டிருந்த அவள் ஒன்றும் தோன்றாதவளாய் நடுவே இழுத்துப் போடப்பட்டிருந்த கள்ளிப் பெட்டியின்மேல் மெலுட்கார்ந்து முத்து முத்தாய்க் கண்ணீர் சொரியலானாள்.

"அம்மா! இன்னும் என்ன செய்துகொண்டிருக்கிறாய்? மணி பத்து அடிக்கப் போகிறதே! நீ வருவாய் என்று

தான் விழித்திருக்கிறேன். இன்னும் என்ன செய்யவேண்டும்? நானும் ரங்கனுமாய்ச் செய்து விடுகிறோம்" என்றான் ஜகதீசன்.

"வருகிறேனடா அப்பா! வேலையொன்றும் பிரமாதமில்லை. திகைத்துத் திகைத்து நிற்பதனால் தான் பொழுதுபோய்விடுகிறது. மறதியோ. அசாத்யம். ஒரு கயிற்றுக்காக மூன்று முறை தாழ்வாரத்துக்கு வந்தேன்" என்று சொல்லிக்கொண்டே கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டு வந்து உட்கார்ந்தாள்.

"அம்மா! இன்னொரு யோசனை செய்திருக்கிறேன். உனக்கும் சரி என்று தோன்றினால் அதன்படி செய்யலாம். சென்னைக்கு வந்து புதுக் குடித்தனம் ஏற்படுத்திய பிறகு யாத்திரை புறப்படுவதானால் சிரமமாயிருக்கும். செலவும் அதிகம். தவிர அப்பாவைத் தேடவும் இதை ஒரு சந்தர்ப்பமாய் வைத்துக் கொள்ளலாம். ஆனால் அடையாளந் தெரியாமல் நான் தேடியதில் இதுவரையில் ஒன்றும் தெரியவில்லை. எப்படியும் அடையாளம் கண்டு கொள்ளமாட்டாயா? யாரோ 'குறிகாரி' சமீபத்தில் காண்பாயென்று சொன்னாள் என்றாயே. ஒரு வேளை எந்த ஊரிலாவது சந்திக்கும்படி நேரலாமல்லவா? ஆகையால் நீயும் அம்மாமியுமாய் முதலில் கன்யாகுமரி போய் அங்கிருந்து ஒரு நாளைக்குமேல் எங்கும் தாமதியாமல் எங்கெங்கே போக இஷ்டமோ போய்விட்டு இரண்டொரு மாதங்களில் சென்னை வந்து சேருங்கள். துணைக்கு, ரங்கன் இருக்கிறான். நல்ல பையன். செலவு என்ன ஆகிறதோ அதை நான் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்றான்.

"அப்பா ஜகதீசா! நான் சொல்வதைக் கேள். அம்மா 'கருமி' என்றெண்ணிக் கொள்ளாதே. அம்மாமியை அழைத்துப் போவதைப் பற்றி எனக்கும் இரட்டைச் சந்

தோஷம். ஆனால் கையை ஊன்றித்தானே கரணம் போட வேண்டும்? உன் வருமானம் ஒரு நிதானமாகிவிட்டால் பிறகு என்ன வேண்டுமானாலும் செய்யலாம். நாளைக்குக் காலைத் தலையை வலித்து ஒரு நாள் படுத்தால் நம்மை யார் சீந்துவார்கள்? கையில் நான்கு காசு இருந்தால் தானே என்னடா செய்வோமென்று ஏங்காமலிருக்கலாம்? அப்படி யிருக்க ஆரம்பத்திலேயே யாத்திரை போவதென்றால், உன்னால் செலவு செய்யமுடியுமா? பிறகு இதனால் தொந்தரவு ஏற்படாமலிருக்குமா? எல்லாவற்றையும் தீர ஆலோசித்துக் கொண்டல்லவோ ஒரு காரியத்திலிறங்கவேண்டும்? எனக் கொன்றும் தடையில்லை. நமக்கென்ன மணிக் கட்டு உண்டா? பலக்கட்டு உண்டா?" என்றாள்.

"பணம் செலவுசெய்யமுடியும் என்ற தைரியத்தினால் தான் கௌரி அம்மாமியுடன் புறப்படலாம் என்கிறேன். எதற்கும் நீ அம்மாமியைக் கண்டு பேசித் தீர்மானித்துக் கொண்டு, ஒரு நல்ல நாளாகப் பார்த்துப் புறப்பட ஏற்பாடு செய். நாழிகை யாகிறது, படுத்துக்கொள். இந்தச் சங்கதி களை ஒழுங்குபடுத்தி விட்டுத்தான் நான் மற்றவைகளைக் கவனிக்கவேண்டும். நாளைக்காலை அம்மாமியைக் கேட்டுத் தகவல் சொல்லிவிடு. இரண்டு மாதங்களுக்குள் சென்னை வந்து சேருங்கள்" என்றான்.

* * *

இது நிற்க, மயிலாப்பூரில் "வஸந்த விஹார"த்தில் என்ன நடக்கிறதென்று பார்ப்போம். காலை மணி பத்திருக் கும். சேஷியம்மாள் ஜபம் செய்து கொண்டிருந்தாள். சியா மளி ராஜுவுக்கும் சாஸ்திரியாருக்கும் பரிமாறிக் கொண் டிருந்தாள். சுந்தரி நெய்க்கிண்ணத்தை கையில் வைத்த படியே ஏதேதோ ஊர்வம்புகளை அளந்து கொண்டிருந்தாள். தீர்த்தத்தை வாயில் விட்ட உடனே சாஸ்திரியாருக்குப்

புரை ஏறிற்று. "ரங்கனிடமிருந்து கடிதமே காணோம். நாகு எப்பொழுது வரப்போகிறானோ?" என்று சொல்லிக் கொண்டார்.

"என்னைக் கூடப் புறப்பட்டுவரும்படி அப்பா எழுதியிருக்கிறார். ஸிம்லாவில் ஏதோ வேலை கிடைக்கும் போலிருக்கிறதாம். 'புறப்பட்டு வா; சுந்தரியையும் அனுப்புவதானால் அழைத்து வா' என்று எழுதியிருக்கிறார். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" என்றான் ராஜு.

"சுந்தரி இந்த ஆனிக் கடைசியில் வரட்டுமே. நாகுவும் வந்து விடுவான். இவளுக்கும் உடம்பு இன்னும் கொஞ்சம் குணமாகும். ஒரு வேளை ஏதாவது வரன் சரிப்பட்டாலும், இப்பொழுது அவ்வளவு தூர தேசத்திற்குப் போனால் உடனே வரச் சரிப்படுமா? வீணாய் ரயில்காரனுக்குக் கொடுப்பதில் என்ன லாபம்? நீ மட்டும் போய் வா. கல்யாணம் நடக்காத பக்ஷத்தில் நாகுவையோ ரங்கனையோ சேர்த்து அனுப்புகிறேன்" என்றார் சாஸ்திரியார்.

"ரங்கன் வரப்போகிறானா?" என்று கேட்டாள் சுந்தரி.

"அவனிடமிருந்து கடிதமே காணோம். கல்யாணம் இந்த மாதத்திற்குள் நிச்சயமானால்தான் நல்லது. இந்த வருஷம் கட்டாயம் செய்து விடவேண்டியதுதான். இனிமேல் தாமதிக்கக்கூடாது. என்ன செய்யப்போகிறேனோ?" என்று பெருமூச் செறிந்தார்.

"போஸ்ட்! போஸ்ட்!" என்ற சத்தம் கேட்டு எழுந்து சென்றாள் சேஷியம்மாள். "ஒரு கார்டும், முப்பது ரூபாய் மணி ஆர்டரும்" என்றாள் சுந்தரி. "மணியார்டர் பாரத்தை வாங்கி வை. கார்டைக் கொண்டு வா" என்று கையில் வாங்கி, "ரங்கன் எழுதியிருக்கிறான். ஸ்தலயாத்திரை போகிறானாம்; வைகாசிக் கடைசியில் வருவானாம். சம்பளத்தை மணியார்டர் செய்திருக்கிறான். என்னவேலை, என்ன சங்கதி

என்பதைப்பற்றி ஒன்றையும் காணோம். ஏதோ இந்தமட்டில் சந்தோஷம்" என்றார் சாஸ்திரிகள்.

சேஷியம்மாளுக்கோ சந்தோஷம் தாங்கமுடியவில்லை. உண்மையில் ரங்கன் ஹைகோர்ட் ஜட்ஜாகியிருந்தால் கூட அவ்வளவு சந்தோஷமடைந்திருப்பாளோ, என்னமோ? "என் தங்கம், சின்னகுழந்தை முதலே அசாத்ய சூடிகை. அவன் செல்லக்கையினாலே சம்பாதித்து, உடனே குடும்ப நிலைமை தெரிந்து அனுப்பியிருக்கிறானே என்னப்பன்! முப்பது ரூபாய் தானே சம்பளம் என்றெழுதியிருந்தான்? அவன் செலவுக்கு என்ன பண்ணுவான். பாவம்! பைத்தாரப்பிள்ளை! முழுவதையும் அனுப்பிவிட்டதே" என்று பேரனை ஸ்தோத்திரம் செய்யலானாள்.

* * *

மாலை சுமார் நான்கு மணி இருக்கலாம். சிற்றுண்டி முடிந்தது. வாசல் புறத்திலிருந்த பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிவிட்டுத் தலையை ஆற்றிக்கொண்டிருந்தாள் சியாமளி. அவள் உடல் மட்டும் அங்கிருந்ததேயன்றி அவள் எண்ணமெல்லாம் எங்கேயோ சஞ்சரித்துக்கொண்டிருந்தது குழந்தை கண்ணன் சற்றுத் தவழ்வதும், சற்றுத் தத்தித் தத்தி நடப்பதும், அவள் கூந்தலைப்பற்றி இழுப்பதுமாக விளையாடிக்கொண்டிருந்தான்.

சிந்தையில் ஆழ்ந்திருந்த சியாமளி வீட்டுக்கு எதிரில் ஓர் அழகிய இளைஞன் பாதையின் ஓரமாய் வருவதைத் தற்செயலாய்ப் பார்த்தாள். யாராவது தெரிந்தவர்களாயிருக்குமோ வென்று சற்று கூர்ந்து கவனித்தாள். வந்தவன் நேராய் "வஸந்த விஹார"த்திற்குள் நுழைந்து தோட்டத்தைக் கடந்து வீட்டை நெருங்கினான்.

அதுவரையில் உலக பிரக்ஞையே யில்லாமலிருந்த சியாமளி திடுக்கிட்டாள். சட்டென்று தலையை முடிந்து

கொண்டு குழந்தையை எடுத்துக்கொண்டு இரண்டடி நகர, வந்தவனும் அணுகினன்.

"பதஞ்சலி சாஸ்திரியார் வீடு இதுதானே?"

"ஆம். கோயிலுக்குப் போயிருக்கிறார். இன்னும் அரை மணியில் வந்து விடுவார். சற்று இருந்தால் பார்க்கலாம்."

"இல்லை. இருப்பதற்கு நேரமில்லை. ரங்கசாமி இதை அவர் வசம் கொடுக்கச் சொன்னார்."

"பாட்டியைக் கூப்பிடுகிறேன்" என்று 'விசுக்' கென்று உள்ளே நுழைந்தாள் சியாமளி.

"வேறொன்றும் விசேஷமில்லை. இதை அவர் வசம் சேர்த்தால் போதும்" என்று மிக்க மரியாதையுடன் ஒரு கவரை நீட்டினன் வந்தவன்.

சியாமளி சற்று நின்றாள். அவளையும் மீறி அவள் கண்கள் வந்தவனை ஏறிட்டு நோக்கின. கவரை வாங்கும்பொழுது அவன் தன்னைக் கூர்ந்து கவனிக்கிற னென்பதைக் கண்டாள்.

வெகு துரிதமாய் நடந்து தோட்டத்தைக் கடந்து சென்றான் இளைஞன். அவன் தெருக்கோடி செல்லும் வரையில் மெய்ம்மறந்தவளாய் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் சியாமளி. அவன் தன்னைத் திரும்பிப் பார்ப்பதை அறிந்து தலை குனிந்தாள்.

பாட்டியிடம் சங்கதியைக் கூறிக் கடிதத்தையும் கொடுத்தாள் சியாமளி. பாட்டியின் சந்தோஷம் கரைபுரண்டு ஓடியது.

சாஸ்திரியார் வந்த பிறகு கடிதத்தைக் கொடுத்து விஷயத்தைக் கூறினள் சேஷியம்மாள். பிரித்துப் படித்துவிட்டு, "கடிதம் கொண்டுவந்தவன் பெயரையாவது விலாசத்தையாவது கேட்டாயா?" என்றார்.

"இல்லை."

"அடி ஸீஸமே! விலாசம் தெரிந்தால் போய்க் கேட்க வாவ்தீ கேட்கலாமே" என்றாள் பாட்டி.

"ஏன் அம்மா? நீதான் ஏழு தலை முறை உறவு விசாரிப்பாயே. அவன் யார், என்ன என்று கேட்கக்கூடாதா?" என்றார் சாஸ்திரியார்.

"ஏண்டி ஜடமே, என்னிடம் ஒரு வார்த்தை சொல்லக்கூடாதோ?" என்று கேட்டாள் பாட்டி.

சியாமளி ஒன்றும் பதில் சொல்லத் தோன்றாமல் விழித்தாள்.

* * *

நள்ளிரவு. அந்த நிச்சப்தமான வேளையில் ஒரே ஒரு ஜீவன்மட்டும் தூக்கம் பிடியாமற் படுக்கையில் புரண்டு எண்ணமிட்டுக்கொண் டிருந்தது. அவள்தான் சியாமளி. "கண்கள் புளியம் பசை போட்டு ஒட்டினாலும் ஒட்டாது போலிருக்கிறதே? இதென்ன பேதமை. அவருடைய உருவம் ஒரு முறை காணுமுன் அப்படியே நெஞ்சில் பதிந்து விட்டதே! என்ன ஜாதியோ, என்ன குலமோ? அந்தஸ்து எப்படிப்பட்டதோ? சீ! சீ! இந்த எண்ணத்தை அடியோடு விட்டுவிடவேண்டும். அப்பா பார்த்து யாரைத் திட்டம் செய்வாரோ? இப்படிப்பட்ட எண்ணங்களுக்கு இடங் கொடுக்கக்கூடாது" என்றெண்ணிக் கண்களை மூடினாள். மறுபடி அதே தோற்றம். "கண்களை மூடினாலும் அவருடைய உருவமே தோன்றுகிறதே யன்றி வேறொன்றும் தோன்றவில்லையே! என்ன செய்வேன்! முன்பின் தெரியாது. சாயங்காலம் அந்த ஒரு நிமிஷம் பார்த்ததுதானே! இதென்ன? ஒருநாளுமில்லாதபடி இன்று எனக்குப் புத்தி சபலித்துவிட்டது. அவரை மறுபடி ஒரு முறை பார்க்க வேண்டுமென்று தோன்றுகிறது. என்னமோ செய்கிறது. இன்னதென்று சொல்லத் தெரியவில்லை. தேவாரத்தில்

'உள்ளங் கவர் கள்வன்' என்று சொன்னதுதான் ஞாபகம் வருகிறது. இதையெல்லாம் யாரிடம் சொல்லுவது? வெளியே சொல்ல வெட்கமா யிருக்கிறது! என்னதான் செய்வது? ஒன்றுமே புரியவில்லை. கண்ணனிடம்தான் சொல்லலாம். அவன் பரிகசிக்கமாட்டான்.......எதற்கும் ரங்கன் வரட்டும்; அவனிடம் இவர் யாரென்று கேட்போம்....... ஒருவேளை ஏற்கனவே விவாகமானவரா யிருந்தால்...அல்லது நம்மை மணக்க மறுத்துவிட்டால்.......அப்பாவுக்கு இஷ்டமில்லா விட்டால்.......ஈசுவரனுடைய சித்தம் எப்படியோ?'' என்று பலவாறு எண்ணிய வண்ணம் தூக்கத்தில் ஆழ்ந்தாள்.

# அத்தியாயம் 18

கலியாண மாதங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் ஓடிக்கொண்டிருக்கின்றன. பதஞ்சலி சாஸ்திரிகள் வரன், வரன் என்று அலைகிறார். என்ன செய்வார், பாவம்! காலையிலிருந்து ஊர் சுற்றுவதுதான் வேலை. சேஷியம்மாளோ கலியாணத்துக்கு வேண்டிய அப்பளம் வடகம் முதலியவைகளைத் தயாரிப்பதிலேயே ஈடுபட்டிருந்தாள்.

அன்று காலை எதிர்பாராத விதமாய் விடுதலை யடைந்து வந்தான் நாகு. "பாட்டி! நமஸ்காரம்" என்று குரல் கேட்டுத் திரும்பிய சேஷியம்மாள், நாகு அபிவாதனம் செய்யக் கண்டாள்.

"என்னப்பனே, வாடா! வந்தாயா?" என்றெழுந்து, ஆனந்த மிகுதியினால் அவன் கன்னங்களைத் தன் கரங்களால் தடவித் திருஷ்டி முறித்தாள் பாட்டி.

சாஸ்திரியார் தடதடவென்று வந்து இடைக் கட்டுக் கதவைச் சங்கிலி போட்டுவிட்டார். தன்மீதுள்ள கோபத்தினால் அவ்வாறு செய்கிறாரோ வென்று நாகராஜன் ஐயமுற்றவனாய் அவரை ஏறிட்டுப் பார்த்தான்.

அவர் வாயின்மேல் கையை வைத்து, "உஸ்! அதிகமாய்ப் பேசாதே! நேரே மாடிக்குப் போ. நான் கூப்பிட்ட பிறகு வரலாம்" என்று மிகவும் மெதுவாய்க் கூறினார்.

நாகராஜன் பூனைபோல் நடந்து மாடிப்படி ஏறினான். அவன் தலை மறையும் வரையில் காத்திருந்த சாஸ்திரிகள், "லக்ஷ்மி! லக்ஷ்மி!" என்று மிகுந்த பரிவுடன் கூப்பிடலானார்.

இடையில் கண்ணனைச் சுமந்தவளாய்ச் சிரித்த முகத்துடன் தோன்றினாள் லக்ஷ்மி. சேஷியம்மாள் அவளருகில் சென்று, "அம்மா லக்ஷ்மி! நாகு வரப்போகிறானும். வரச் சொல்லட்டுமா?" என்று கூறிவிட்டு, அவள் என்ன பதில் சொல்லப் போகிறாளோ வென்று ஆவலாய் அவள் முகத்தையும் சாஸ்திரியார் முகத்தையும் மாறி மாறிப் பார்க்கலானாள்.

லக்ஷ்மியின் கன்னங்கள் குழிந்தன. இளமுறுவலினால் அவள் இதழ்கள் சற்றே மலர்ந்தன. கண்களில் சொல்லொணாதபடி சந்தோஷம் ஜ்வலித்தது. "வருவதானால் வரட்டுமே! உங்களிஷ்டம், நீங்கள் பார்த்து என்ன செய்தாலும் சரி. குழந்தையைக் கண்ணாரக் கண்டு எத்தனையோ நாளாயிற்று. இவ்வளவு நாளாய் எங்கிருந்தான்?" என்று கேட்டாள்.

ஏறக்குறையப் புத்தி தெளிவடைந்து விட்டது என்றாலும் இன்னும் கொஞ்சம் தடுமாற்ற மிருக்கிறது என்று மனதிலெண்ணியவராய், "கூப்பிடட்டுமா?" என்று கேட்டார்.

"நன்றாயிருக்கிறது! என்னைக் கேட்பானேன்!" என்று கூறிக் கொண்டே கண்ணனைக் கீழே இறக்கினாள்.

சேஷியம்மாள் "அப்பா! நாகராஜா! வாடாப்பா! அம்மா வந்திருக்கிறாள்" என்று கூற, நாகராஜன் இறங்கிவந்தான். எலும்பும் தோலுமா யிருந்த தன் தாயைக் கண்டதும் அவனுக்குத் துக்கம் பொங்கிவிட்டது. அதோடு கல்யாணியின் நினைவும் வந்துவிட்டது. "அம்மா!" என்று பேதைப் பெண்பிள்ளையைப் போல் "ஓ" வென்று அழுது விட்டான். அவன் அழ, அவளும் கூடவே அழத் தொடங்கி விட்டாள். சேஷியம்மாளும் சாஸ்திரியாரும், "அழட்டும்! அழுதால்தான் துக்கம் தணியும். மனதிலேயே வைத்து 'மருகி, மருகி' த்தான் பித்தாய் அடித்துவிட்டது" என்று கூறியவர்களாய் மெல்ல நழுவினர்.

சியாமளியும் சுந்தரியும் அங்கு வருவதா வேண்டாமா வென்று அறியாதவர்களாய்க் கதவுக்கருகில் நின்று எட்டிப் பார்த்தனர். கூடத்தில் கண்ட காட்சி எத்தகைய கல்நெஞ் சுடையவரையும் கரையச் செய்யும். தாயும் மகனும் ஒரு வரை யொருவர் தேற்ற வகையின்றித் தலை குனிந்து உட் கார்ந்திருந்தனர். குழந்தை கண்ணனே தன் தாயை எழுந் திருக்கும்படி சமிக்ஞை செய்பவனைப் சேலையைப் பற்றி இழுக்கலானன்.

"உஸ், அம்மாடி! என்ன உடம்பு! என்ன அலங் கோலம்! அம்மா, நான் வந்து விட்டேனே. எழுந்திரு, இனிமேல் எங்கும் போவதில்லை" என்று மன்றாடினன் நாகு.

சேஷியம்மாளும் சாஸ்திரியாரும், ஆனந்த மிகுதியினல் எங்கே இருதயம் நின்று விட்டதோ அல்லது, மறுபடியும் புத்தி பேதலித்து விட்டதோ வென்று நடுங்கியவர்களாய்ச் சந்தேகத்துடன் ஓடிவந்தனர். அவர்களுடன் சியாமளியும் சுந்தரியும் வந்தனர்.

சிரித்த முகத்துடன் கண்களை மூடிவிட்டாள் லக்ஷ்மி. சாஸ்திரியாருக்கு ஸப்த நாடியும் ஒடுங்கி விட்டது. அவள் இறந்துவிட்டாளென்றெண்ணி, "அடே நாகு, உனக்கு நாடி பார்க்கத் தெரியுமே! கைநாடியைப் பார்" என்று குழறினர்.

சியாமளி மூன்றாவது பங்களாவிலிருந்த டாக்டரை அழைத்துவர ஓடினுள். நாகு கையைப் பிடித்துப் பார்த்து, "நாடி நிரம்பவும் பலஹீனமாயிருக்கிறதே யன்றி, பிராண பயம் என்று தோன்றவில்லை" என்று கூறிப் பெரு மூச் செறிந்தான்.

சாஸ்திரிகள் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு உட் கார்ந்திருந்தார். டக், டக் என்று பூட்ஸ் ஓசை கேட்டது. டாக்டர் திரிபுராந்தக முதலியார், சியாமளி பின்தொடர உள்ளே நுழைந்தார். மிகுந்த பரபரப்புடன் கையில் இரு

தயம் பரீட்சிக்கும் குழாயைச் சித்தமாய் வைத்து லக்ஷ்மி யின் அருகே நெருங்கி, "நல்ல சுத்தமான காற்றை விடுங் கள். நோயாளியைச் சுற்றிலும் இப்படி நீங்கள் மூச்சு விட் டுக்கொண் டிருந்தால் அவருடைய ஆரோக்யம் என்னவா கும்!" என்று கூறியவுடன் சேஷியம்மாள் மெதுவாய் நகர்ந் தாள். நாகராஜன் மடியில் தலை வைத்தவாறிருந்த லக்ஷ்மி யின் நாடியையும் இருதயத்தையும் பரீக்ஷித்துவிட்டு, ஏதோ ஒரு தூளை எடுத்து முகரச் செய்தார். இரண்டு தும்மல்கள் தும்மி விழித்துப் பார்த்தாள் லக்ஷ்மி. அப்பொழுதுதான் சாஸ்திரியாருக்கு உயிர்வந்தது. "பிராணபயம் ஒன்று மில்லையே?" என்று கேட்டார்.

"அது ஒன்றுமில்லை. நிரம்பவும் பலஹீனத்தினுலேற் பட்ட மூர்ச்சை. நல்ல மோர் ஒரு டம்ளர் கொடுங்கள். இன்னும் அரை மணியில் சரியாய் விடும்" என்றார்.

லக்ஷ்மிக்கு உடம்பு குணமாகிவிட்டது. மறுவாரம் ரங் கன் வருவதாகவும், ஆனுல் தான் காலையிலேயே வரமுடியா தென்றும், ஸ்தல யாத்திரைக்காகத் தன் மேலதிகாரியின் தாயாரையும், அவரது பந்துவாகிய இன்னொருவரையும் அழைத்து வருவதாகவும், நேரே அவர்களுடன் சென்று மாலையில் வீட்டுக்கு வருவதாகவும் குறிப்பிட்டு, நாகுவுக்கும் ஒரு கடிதம் வைத்திருந்தான்.

நாகுவின் கடிதத்தில், "சியாமளியின் கல்யாண விஷய மாய் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். நான் ஒரு வரன் தீர்மானித்திருக்கிறேன். வந்த பிறகு நேரில் மற்றவைகளைக் கூறுகிறேன்" என்றெழுதி யிருந்தான். கடிதங்களைப் படித்து முடியும்வரையில் மௌனமா யிருந்த சேஷியம்மாள் "என்னமோ அப்பா! எப்படியாவது கழுத்திலே மூன்று முடி விழுந்த பிறகுதான் நிச்சயம். என்ன யோசித்திருக் கிறுனே, நேரில் வந்தால்தான் தெரியும். அந்தமட்டும் தங்

கைக்குக் கலியாணம் செய்யவேண்டு மென்றுவது தெரி கிறதே, அதுவே சந்தோஷம். இவன் தான் சின்ன காந்தி; தேசத்தையே தலையிலே தாங்கிக்கொண்டிருக்கிறுன்; வீட்டு விஷயங்களைக் கவனிக்க மாட்டான்'' என்று சொல்லிக் கொண்டிருக்கையில் நாகராஜன் உள்ளே நுழைந்தான்.

பாட்டியின் மொழிகள் அவன் காதுகளிலேயே ஒலித்துக் கொண்டிருந்தன. என்ன செய்வான்! வேலையோ ஒன்றும் கிடைக்கவில்லை. இதுகாறும் குடும்ப விஷயத்தில் ஒன்றும் செய்யாததினுல் அவள் இழிவாய்க் கூறியதும் நியாயந்தான் என்றே அவனுக்குத் தோன்றிற்று.

அன்றிரவு முழுவதும் அவன் தூங்கவேயில்லை. "நானும் என்ன சிரமப்பட்டாவது வேலை தேடிக்கொண்டு சியாமளிக்கு ஏதாவது செய்யவேண்டும். என் இஷ்டப்படி சீனுவுக்கு முடிப்பதானுலும் மேல்செலவுக்கு ஐந்நூறு ரூபா யாவது வேண்டும். ரங்கன் என்ன தகவல் கொண்டுவருகிறு ணே,பார்ப்போம். நானும் பணத்துக்கு ஏற்பாடுசெய்துவிட்டுச் சீனு சங்கதியை மெல்ல அவரிடம் சொல்லிவைக்கிறேன். நாட்கள் கழிந்துவிட்டன. வைகாசி பதினைந்து தேதிக் காவது வந்து சேரமாட்டாணு? வந்தபிறகு சேர்ந்து ஆலோ சித்துச் செய்வது தான் நல்லது'' என்று தன்னைத்தானே தேற்றிக் கொண்டான். ஆனுலும் அவன் மனம் வேதனைப் பட்டுக்கொண்டே யிருந்தது.

"ஆம், இன்றுதான் ரங்கன் கடிதம் வந்தது. நாகண்ணு ஏதோ ஒரு மாதிரி இருக்கிறுன். கூப்பிட்டால் சரியாய்ப் பேசக் காணேம். சாப்பாடும் சரியாய்ச் சாப்பிடவில்லை. என்ன காரணமோ? அப்பா கோபித்துக் கொண்டாரோ என்னமோ? ஐயோ பாவம்! வேலையுமில்லை. குடும்பக் கவலை யில்லாவிட்டால் சிவனே என்று ஏதாவது ஒரு ஆசிரமத்திற் குப் போய் இருந்துவிடுவான். இப்பொழுது இவ்வளவு

பேரையும் இரட்சிக்கக்கடமைப்பட்டவனாய்விட்டான். இற கொடிந்த பட்சிபோல் ஒரு கிழவி. தாயார், தகப்பனார், கண்ணன், இடையில் 'இடறுகட்டை' நான் ஒருத்தி. என்ன செய்வான், பாவம்! என் விஷயமாய் இவன் கவலைப்பட வேண்டியதில்லை. ரங்கன் எழுதியிருப்பதைப் பார்த்தால் அவன் ஏதோவரன் நிச்சயப்படுத்தி இருப்பான் போலிருக் கிறது. அது யாரோ? என்னமோ?" என்றெண்ண, அவளையு மறியாமல் 'களுக்' கென்று சிரித்துவிட்டாள். அவள் சிரித்த சத்தம் நாகுவின் செவிகளில் வீழ்ந்தது. ஒருவேளை லக்ஷ்மி தான் மறுபடி சிரிக்கத் தொடங்கிவிட்டாளோ வென்று சந்தே கித்தவனாய்த் தன் வருகையைப் பிறர் உணராவண்ணம் பூனை போல் பதுங்கி வந்து மாடிப்படிகளின் கீழ்ப்படியில் உட்கார்ந் தான்.

சிலர் ஆலோசனைகள் செய்துகொண்டே வார்த்தைகளை வெளிப்படையாய்ப் பேசி விடுவதும் உண்டு. பிறகு "யார் கேட்டிருக்கக் கூடுமோ? எவைகளை வெளிப்படையாய்ப் பேசிவிட்டோமோ?" என்று வருந்துவதும் உண்டு. நாக ராஜன் இவள் என்னதான் சொல்லுகிறாள் பார்ப்போம் என்று சற்று நிதானித்தான்.

மெல்லிய குரலில் சியாமளி தன் கைகளை அபிநயித்த வண்ணம் சாய்வு நாற்காலியில் படுத்துத் தனக்குள்ளேயே பேசிக்கொண்டிருந்தாள். "சரிதான், ரங்கன் என்ன சொன் னாலென்ன? என்னாலென்னமோ அவரை மறக்க முடியவில்லை எதற்கும் ரங்கன் வரட்டும். தந்திரமாய் அவனிடம் அன்று வந்தவர் யாரென்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுகி றேன். பிறகு நம் 'சொந்த யுக்தி' இருக்கவே இருக்கிறது ............"

நாகு சங்கதியைத் தெரிந்து கொண்டான். "இவள் குறிப்பிடும் மனிதன் யாராக இருக்கலாம்? கேட்டால் அவ்

வளவு சுலபமாய்ச் சொல்லிவிடுவாளா? கொஞ்சத்தில் சொல்லுவதா யிருந்தால் இவ்வளவு வம்புகள் ஏன்? கல்யாணி கடைசிவரையில் தன் கணவன் திருடனென்பதைக் காட்டிக் கொடாமல் என்ன ஸாகஸம் செய்து, நகையை விற்று அனுப்பும்படி செய்தாள்? பெண்களின் போக்கே தனி. மெல்லியல் கில்லியல் என்று சொல்கிறார்களே யொழிய, அவர்களுக்குத்தான் நல்ல திடமான நெஞ்சு. என் யோசனையை அப்பாவிடம் சொல்லுகிறேன். இவள் சங்கதியைத் தெரிந்ததாகவே காட்டிக் கொள்ளக்கூடாது" என்று தீர்மானித்தவனாய் அடிமே லடிவைத்து மாடிப்படி ஏறினான்.

* * * *

"அண்ணா! நீயும் அப்பாவும் எதைக் குறித்துத் தர்க்கம் பண்ணிக்கொண்டிருந்தீர்கள்?" என்று கேட்டாள் சியாமளி.

"அது உனக்கொன்று மில்லை; அம்மாவும் பாட்டியும் வந்து விடுவார்கள். பிறகு சொல்லுகிறேன்" என்றான் நாகராஜன்.

"அம்மா வந்தாலென்ன? அப்பாவுக்குத் தெரியலாம். அம்மாவுக்குத் தெரியலாகாதா? அப்படி என்ன பரம இரகசியம்? அதைத்தான் சொல்லேன்."

இதுதான் தருணமென்று கண்ணன் அவள் தலையிலிருந்த புஷ்பம் முழுவதையும் பிய்த்து வீடுமுழுவதும் இறைக்கலானான். நாகராஜன், "பாளையங் கோட்டையிலே என்னுடன் சீனி, பூரா என்று இருவரிருந்தார்கள். அவர்களுள் பூரா வைஷ்ணவன், சீனி வடமன். அவனுக்கு ஒரே ஒரு தங்கை. பணமில்லாத முடையினால் மூன்று வருஷமாய்க் கலியாணம் தடைப்படுகிறதாம். யாராவது வரதக்ஷிணை யில்லாதவராய்த் தேடிக் கொடுப்பதென்றும், தானும் வரதக்ஷிணை யில்லாமலே கலியாணம் செய்துகொள்ளுவதாக

வும் சபதம் செய்திருக்கிறனும். அவன் தங்கை நல்ல அழகியாம். ஸ்கூல் பைனல்வரையில் படித்திருக்கிறளாம். பிடில் அதி அற்புதமாய் வாசிப்பாளாம்...." என்று ஆரம்பித்தான்.

"எதற்காக இந்தப்பீடிகை? 'அவளைத்தான் கலியாணம் செய்து கொள்ளுவேன்' என்று ஒரே வார்த்தையாய்ச் சொல்லிவிடேன்."

"அடி அதிகப் பிரசங்கி! சொல்வதற்குள் இந்தக் குயுக்தி'களெல்லாம் உன்னை யார் கேட்டார்கள்? மீதியைச் சொல்லமாட்டேன்."

"இல்லை, அண்ணு! இனிமேல் இல்லை. மீதியைச் சொல்லு, அவள் பெயரென்ன?"

"அவள் பெயர் சண்பகமாம். அப்பா இஷ்டப்பட்டால், நான் அவளை வரதக்ஷிணை இல்லாமல் கலியாணம் செய்து கொள்ளுவதானல், அவன் உன்னைக் கலியாணம் செய்துகொள்ளுவான். தடையே இல்லை. நல்ல யோக்கியமான பையன்; மரியாதையான குடும்பம். பையனைச் சும்மா பார்த்துக் கொண்டிருந்தாலே போதும். சிரித்துச் சிரித்துப் புரளி பண்ணிப் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்தாலே பொழுது போய்விடும்."

"ஆனல் அன்ன ஆகாராதிகள் கூட வேண்டாம்" என்று விஷமச்சிரிப்புடன் கூறினள் சியாமளி.

"இதுதானே கூடாதென்கிறேன்? மறுபடி ஆரம்பித்து விட்டாயே?"

"இல்லை அண்ணு, இனிமேல் சொல்லவில்லை."

"அப்பாவின் எண்ணம் வேறு; அதை வெளிப்படையாய் எப்படிச் சொல்வதென்று 'ஞயமிய' வென்று தயங்கும் பொழுதே நான் இந்தக் கதையை ஆரம்பித்தேன்."

"அப்பா என்ன சொல்லத் தயங்கினர்?"

“அதுதான் வரதக்ஷிணை. என் கலியாணத்திற்கு இரண்டாயிரம் வாங்கினால் அதைக்கொண்டு உன் கலியாணத்தை நடத்தி விடலாமென்று........” என்று சொல்லிக்கொண்டிருக்கையிலேயே, கோவிலுக்குச் சென்றிருந்தவர்கள் வரும் சத்தங்கேட்க, அவர்கள் பேச்சு அத்துடன் முற்றுப் புள்ளியிடப் பெற்றது.

## அத்தியாயம் 19

# ஆம், அவர்தான்!

"அம்மா! ரங்கன் நாளைக்கு வருகிறானும். அவனுடன் கூட அவன் யாத்திரைக்கு அழைத்துக்கொண்டு போன இருவரும் வருகிறார்களாம். சென்ற வாரம் நாகு அவனுக்குளெழுதிய கடிதத்தில் அவர்கள் நம்மகத்திலேயே இறங்கக் கூடியவர்களானால் நேரில் இங்கே வந்து கொஞ்சம் சிரமபரிகாரம் செய்து கொண்டு போகலாமென்றும் எழுதியிருந்தான். அப்படியே வந்து விடுவதாய் எழுதி யிருக்கிறான்....
"அம்மா, சியாமளம்! ஏதாவது வாங்க வேண்டியது உண்டானால் சொல்லு. சுந்தரியும் அம்மாளும் சுக ஜீவிகள். நீதான் உபசரிக்க வேண்டும் என்ன! நான் சொல்லுவது தெரிந்ததா? நன்றாய்ச் சுத்தமாய் எல்லா வேலைகளையும் செய்து வை. அப்பொழுதுதான் எந்தப் பிரம்மசாரிக்காவது சிபாரிசு செய்வார்கள்" என்று நகைத்த வண்ணம் கூறினார் பதஞ்சலி சாஸ்திரிகள்.

"போங்கப்பா! எப்பொழுதும் உங்களுக்குப் பரிகாசம் தான். அவர்கள் ஒருவருக்கும் சிபார்சு செய்ய வேண்டாம்" என்று கூறியவளாய்த் தலை குனிந்து உள்ளே சென்றாள் சியாமளி. அவள் நினையாதமுன் வந்து நிற்கும் அவ்விளைஞனது சுந்தர வதனம் அகக் கண்களின் முன்பு புலனாயிற்று.

"சீ இதென்ன பேதமை! எத்தனை முறைதான் மறக்க முயன்றாலும் முடிய வில்லையே? ரங்கனும் நாளைக்கு வந்து விடுகிறான். பகல் முழுவதும் அவனுடன் பேசச் சரிப்படாது. விருந்தினர்களை உபசரிக்கவும் கண்ணனுக்குப் பணிவிடை செய்யவும் சரியாகி விடும். இரவு தனித்திருக்

கும்பொழுதுதான் கேட்கவேண்டும்" என்று எண்ணிக் கொண்டாள்.

காலை எட்டு மணி அன்று அதிகாலையிலேயே எழுந்து தலை வாரிக்கொண்டு, வாசலுக்கும் பூஜை செய்யுமிடத்திற்கும் துளசிக் கருகிலும் நிரப்பவும் அழகாய்க் கோலமிட்டிருந்தாள் சியாமளி. காப்பிக்கடை முடிந்து குளிக்கச் செல்லும் தருணம். பாட்டி அடுப்படியில் மணையின் மீதுட்கார்ந்து 'ஆதித்யஹ்ருதயம்' சொல்லிக்கொண்டிருந்தாள். வெளியே சென்று திரும்பி வந்து கொண்டிருந்த நாகராஜன் யோசனையிலாழ்ந்த வண்ணம் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்த பதஞ்சலி சாஸ்திரியாரிடம் வந்து, "அப்பா! இந்த சியாமளி அசாத்ய வாயாடி! என்னை 'நையாண்டி' பண்ணுகிறாள்" என்றான்.

"நையாண்டியா? அது யார்? செந்தூர் வேலாண்டிக்குத் தம்பியோ?" என்று கேட்ட வண்ணம் சியாமளி அங்கே வந்தாள். "பார்த்தீர்களா? பேசுவதற்கெல்லாம் புரளி பண்ணுகிறாள். என்னுடன் கூட இருந்தவர்கள் மதுரை ஆஸாமிகள். அவர்களைப் போல் சில சமயம் பேசுகிறேனும். 'ஜோலி ரகளை இவைகளெல்லாம் என்ன பாஷை?' என்கிறாள். போன வருஷம் ஊமையா யிருந்தாள். இப்போது இவ்வளவு வாயாடியாகி விட்டாளே!" என்று நகைத்தான்.

இதற்குள் வாசல் புறத்தில் சத்தம் கேட்க, கண்ணனைச் சுமந்தவளாய் லக்ஷ்மியும், அவளையடுத்து ரங்கனும், மற்றுமிருவரும் வருவதைக் கண்டு, "அம்மா! அவா வராப்பலே யிருக்கு, பார்" என்று சொல்லியவராய், "ரங்கா! வாடாப்பா! உடம்பு சௌக்யமா?" என்று விசாரிக்கலானார்.

* * *

அன்று மாலையில் லிங்கி செட்டித் தெருவுக்குச் செல்ல வேண்டுமென்றும், ஜகதீசன் வந்துவிட்டால் ரங்கன் வர

வேண்டாமென்றும் சொன்னாள் செல்லம்மாள். கூடத்தில் அவளுடன் லக்ஷ்மி, கண்ணன், சுந்தரி, சேஷியம்மாள், கௌரி யாவரும் உட்கார்ந்திருந்தனர். இடையில் கௌரியம்மாள், "எங்கே, அந்த இன்னொரு குட்டியைக் காணோம்! அவளுக்குத்தான் வரன் தேடுகிறீர்கள் போலிருக்கிறது" என்றாள்.

"ஆம், எப்படியும் இந்த ஆனிக்குள் நடந்துவிட வேண்டும். வரன் சரியாய்த் தகையவில்லை. பணமுடையும் குறுக்கே நிற்கிறது" என்று பெருமூச் செறிந்தாள் சேஷியம்மாள்.

"நல்ல லக்ஷணம், பண்ணிக் கொள்கிறவன் பாக்கிய சாலிதான். பம்பரமாய்ச் சுற்றிக் காரியஞ் செய்கிறாள். என்ன படித்திருக்கிறாளோ? பாட்டுத் தெரியுமா?" என்று கேட்டாள் கௌரியம்மாள்.

"ஏழாவது வரையில் வாசித்தாள். பிறகு நிறுத்திவிடச் சொன்னேன். இந்த ஊரில் 'குதிர், குதிராய்' எல்லாம்தான் பள்ளிக்கூடம் போகிறதுகள். நான் பண்டை நாளைப் பைத்தாரி. எனக்கு இந்த அவலங்களெல்லாம் கூடி, பந்தாடப் போகிறதும், மீட்டிங்கு பேசறதும் பிடிக்காது. கலியாணமானால், பிறகு அகமுடையான் போகவேண்டுமென்றால் போகச் சொல்லுகிறது; இப்பொழுது வேண்டாமென்று சொல்லி விட்டேன். என் பிள்ளையும் இது வரையில் நான் கீறின கீற்றுத் தாண்ட மாட்டான். என்னமோ, போதாத வேளை குழந்தை சிரமப் படுகிறான்" என்றாள்.

இதற்குள் செல்லம்மாள், "அவைகளையெல்லாம் உங்கள் சின்னப் பேரன் சொன்னான்" என்றாள்.

அப்பொழுது சியாமளி சமையலறை வேலைகளை முடித்துக்கொண்டு கூடத்திற்கு வர, "அம்மா! சியாமளம்! இவர்களுக்கு நமஸ்காரம் பண்ணு" என்றாள் பாட்டியம்மாள்.

சியாமளி நாணத்தால் முகம் சிவக்க, மிகுந்த அடக்க ஒடுக்கத்துடன் அன்னம்போல் நடந்துவந்து அவ்விருவரை யும் வணங்கி, பிறகு தன் தாயாரையும், பாட்டியாரையும் வணங்கிவிட்டுத் தூண் ஓரமாய் நின்றாள். "உட்காரம்மா" என்று கூறினாள் கௌரியம்மாள்.

மறைந்தும் மறையாமலும் தூணோரமாய் உட்கார்ந் தாள், சியாமளி. "ஏண்டி யம்மா, நேற்று வாசித்தாயே, அதில் கொஞ்சம்தானே பாக்கி? இப்போது வாசிக்கிறாயா?" என்றாள் சேஷியம்மாள்.

"என்ன புத்தகம்?" என்று கேட்டாள் கௌரியம் மாள்.

அதுவா, வங்காளத்திலே பெரிய கெட்டிக்காரர். அவர் பெயர் பங்கிம் சந்த்ர சட்டர்ஜீ. அவர் எழுதிய கதை. அதன் பெயர், ஆனந்த மடம். நிரம்பவும் நன்றாயிருக்கும். எத் தனை முறை படித்தாலும் அலுக்காது. அவர் புஸ்தகங்கள் என்றாள் அவளுக்கு உயிர்" என்றாள் சேஷியம்மாள்.

"அப்படியா? நான் படித்ததில்லை. நீங்கள் படித்தான பிறகு எனக்கும் கொடுங்கள்" என்றாள் செல்லம்மாள்.

இதற்குள் கௌரியம்மாள், "படிப்பதிருக்கட்டும். உங் கள் பேத்திகளைக் கொஞ்சம் பாடச் சொல்லுங்கள், கேட் போம்" என்றாள்.

சியாமளி தம்பூரை ஸ்ருதி சேர்த்து, முகாரி ராகத்தைச் சற்று ஆலாபனம் செய்து, "என்றைக்கு சிவகிருபை வருமோ" என்று பாடினாள். செல்லம்மாள் பாட்டைக் கேட்டு பரவசமடைந்தாள். "ஜகதீசனுக்கு இந்தப் பாட்டு ரொம்பப் பிடிக்கும்" என்றாள்.

"சுந்தரி! தம்பூரை வாங்கி ச்ருதியைக் குறைத்துக் கொண்டு 'சிவசிவ யன' பாடம்மா" என, சுந்தரி "சிவ சிவ சிவ யனராதா" என்ற கீர்த்தனத்தைப் பாடினாள்.

இதுவரையில் பேசாமலிருந்த கண்ணன் தானும் நடுவில் வந்து உட்கார்ந்துகொண்டு தாளம் போட்டு, "சா, மா" என்று கூவலானான். "கோடி துக்கம் ஒரு குழந்தை முகத்தால் தெளியும்" என்று கூறியவளாய்ச் செல்லம்மாள் அவனை வாரி எடுத்துக்கொண்டாள். அவனோ ஒரே திமிறலாய்த் திமிறி சியாமளியின் மடியில் ஏறி உட்கார்ந்தான்.

"உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?" என்று செல்லம்மாளைக் கேட்டாள் லக்ஷ்மி.

"ஒரே ஒரு பிள்ளை."

"கலியாணமாகிவிட்டதா?"

"இன்னுமில்லை, இனிமேல்தான் ஆகவேண்டும்."

"நீங்கள் என்ன கோத்திரம்?"

"நைத்ருப காச்யப கோத்திரம்."

இதற்குள் ரங்கன் வேறு ஏற்பாடு என்று எழுதியிருந்ததை நினைத்து லக்ஷ்மி அவர்களிடம் ஏதாவது உளறிவிடப் போகிறாளோ என்று சுந்தரி தன் தாயாரை விழித்துப் பார்த்தாள்.

இதற்குள் சேஷியம்மாள், "உங்கள் பிள்ளைக்கு எவ்வளவு எதிர் ஜாமீன் எதிர்பார்க்கிறீர்களோ?" என்றாள்.

"எதிருமில்லை, ஜாமீனுமில்லை. பெண் நல்லதாய் அமைந்தால் சமயோசிதமாய்ப் பார்த்துக் கொள்ளுகிறது. பையனுக்குப் பெண்ணை பிடித்திருந்தால் நான் ஒன்றுமே சொல்லப் போகிறதில்லை. இருப்பதெல்லாம் அவன் ஒருவன். கொண்டுவந்தால் அவள்தான் வைத்துக்கொண்டு ஆளப் போகிறாள். கொண்டுவராவிட்டால் இருக்கவே இருக்கிறது. ஆசையிருந்தால் அவர்கள் பெண்ணுக்கு அவர்கள் எதை வேண்டுமானாலும் செய்வார்கள். ஆசையற்றவர்களாயிருந்தால் நாம் கேட்டால்மட்டும் செய்துவிடுவார்களா? குற்றம் சொல்லவும் ஏமாற்றவும்தான் வழிதேடுவார்கள்" என்றாள்.

" அம்மா ! நீங்கள் வயதில் இளையவளானாலும் கெட்டிக்காரியா யிருக்கிறீர்கள். சொல்வது வாஸ்தவந்தான். உங்கள் பிள்ளை கறுப்போ, சிவப்போ ?" என்றாள் சேஷியம்மாள்.

" நல்ல சிவப்பு. ஏறக் குறைய என் சாயல் என்றுதான் எல்லோரும் சொல்லுகிறார்கள். இப்போது சற்றுக் கருத்திருக்கிறான். அலைச்சல், ஓட்டல் சாப்பாடு எல்லாம்தான் " என்றாள்.

இவர்கள் பேச்சு சியாமளிக்கு மிகுந்த மனவேதனையை உண்டுபண்ணிற்று. " சரி, நம்பர் நாலு. நாகண்ணா சொன்னது ஒன்று, ரங்கண்ணா தேடியது ஒன்று, பாட்டி வலை வீசிப் பிடிப்பது வேறொன்று " என்று எண்ணியபோது முன் கண்ட இளைஞனின் உருவம் அவளை நோக்கி நகைப்பது போல் தோன்றிற்று. " அடாடா ! இவர்கள் என்ன பேசுகிறார்கள் ! பாட்டியும் அந்தம்மாளும் பேசி முடித்து இப்பொழுதே முகூர்த்தம்கூட நடத்தி விடுவார்கள்போலிருக்கிறதே ! சுதந்திரம், சுயேச்சை என்றெல்லாம் அண்ணாக்கள் தடபுடலாய்ப் பேசினார்களேயன்றி அனுபவத்தில் ஒன்றையும் காணோமே. அவன் என்னமோ ஏற்பாடு செய்திருக்கிறேன் என்றான். இவன் என்னமோ சொல்லுகிறான். ஒருவராவது என்னைத் தனிமையில் கண்டு, ' இந்த மாதிரி சங்கதி. உனக்குச் சம்மதந்தானா ? அவரைப் பார்க்கிறாயா ? என்று கேட்கக் காணோம். ' வைகாசி வந்துவிட்டது. ஆனி பிறந்துவிட்டது ' என்று கூத்தாடுகிறார்கள். கடைசிவரையில் என்னைக் கேட்பதாகவே உத்தேசமில்லைபோ லிருக்கிறது " என்றெண்ணுகையில், இடையிடையே அவள் கண்ட இளைஞனின் உருவமும் மனதில் தோன்றிக்கொண்டிருந்தது.

மணி நான்காயிற்று. " நாங்கள் புறப்பட வேண்டுமே, ரங்கநாதனைக் காணோமே ?" என்றாள் செல்லம்மாள்.

"எதற்கும் மனப்பொருத்த மிருந்தால் போதும். ஜாதகமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். உங்கள் பிள்ளை வந்து பார்த்து மனதிற்குப் பிடித்துவிட்டால் முகூர்த்தம் வைத்து விடுவோம்" என்றாள் சேஷியம்மாள்.

"என்ன? பாட்டி! என்ன சமாசாரம்?" என்று கேட்டவனாய் உள்ளே வந்தான் ரங்கன்.

"இந்தம்மாளுடைய பிள்ளைக்கு நம் சியாமளத்தைப் பண்ணிக்கொள்ளுவார்களாவென்று கேட்டேன். இந்தம்மாளுக்குப் பிடித்திருக்கிறது. பாதிக் கலியாணம் ஆனாற்போலத்தான். பிள்ளையாண்டான் வந்து பெண்ணைப் பார்த்துவிட்டு பிடித்திருக்கிறதென்று சொல்லவேண்டும். அவ்வளவுதான்" என்றாள் சேஷியம்மாள்.

"பூ! இவ்வளவு தானே! அடி சியாமளீ! இங்கே வா! நான் இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தேன், தெரியுமா? வரன் பிடிக்கத்தான். அவர்கள் நமக்கு முன்னாலேயே 'ஸ்வயம்வரம்' நடத்திவிட்டார்களென்று தெரியவந்தது. அது மெய்யா பொய்யா வென்று சியாமளிதான் சொல்ல வேண்டும். ஏண்டியம்மா, கலியாணப் பெண்ணே! தலைவி தலைவனை மாலை வேளையில் பூங்காவில் சந்திக்கிறாளாம். இருவரும் ஒருவரை யொருவர் பார்த்துப் புன்னகை கொள்ளுகிறார்களாம் 'கண்ணோடு கண்ணினை நோக்கொக்கின்...'" என்பதற்குள் "சீ போ அண்ணா! கேலி பண்ணத்தான் கூப்பிட்டாயாக்கும்!" என்று சியாமளி சமையலறைப்புறம் அடி எடுத்து வைத்தாள்.

"பாருங்கள் அம்மாமி! இந்த 'நேற்று முளைத்த நண்டு' என்னிடம் பொய் சொல்லுகிறாள். ஜகதீசன் வந்திருந்தாலும்! சும்மா நோட்டம் பார்க்க வந்தான்போ லிருக்கிறது. நான் அனுப்பியிருந்த கடிதத்தைச் சியாமளத்தினிடம் கொடுத்துவிட்டுப் போனானாம். அப்பொழுதே அவ

னுக்குப் பிடித்து விட்டதாம். இவள் சங்கதி இனிமேல்தான் தெரியவேண்டும். என் சியாமளி! நான் சொல்வது சரி தானே?'' என்றான்.

'பளிச்' சென்று சியாமளியின் மூளை இயந்திரம் வேலை செய்யத் தொடங்கிற்று. தன் உயிரைக் கொள்ளை கொண்ட அவ்விளைஞனே செல்லம்மாளின் புதல்வன் என்று தெளிவாய்த் தெரிந்துவிட்டது. மிதமீறிய சந்தோஷப் பெருக்கினாலும், எதிர் பாராத அவ்வாச்சர்யமான நிலைமையினாலும் அவள் நெஞ்சு பட படக்க, அவள் முகத்தில் அதுகாறுமில்லாத அற்புத எழிலுடன் கூடிய ஓர் இளமுறுவல் அரும்பிற்று. சட்டென்று தலை குனிந்தாள்.

"சோலை மலரொளியோ உனது சுந்தரப் புன்னகை தான்?'' என்று பாடினான் ரங்கசாமி.

சியாமளி அங்கு நிற்கவே யில்லை; ஒரே ஓட்டமாய் ஓடிவிட்டாள்.

## அத்தியாயம் 20

# வஸந்த விஹார்

செல்லம்மாள், கௌரியம்மாள், லக்ஷ்மி, கண்ணன், நாகு, சியாமளம், எல்லோரும் ஜகதீசனது வரவை எதிர் பார்த்தவர்களாய் வாசல் தாழ்வாரத்தில் நிலவில் உட்கார்ந்து ஊர்க் கதைகளைப் பற்றிப் பேசலாயினர்.

"ஏன் அம்மாமி! இவ்வளவு சிரமப்பட்டுத் தேடியும் அவர் அகப்படவில்லை என்கிறீர்களே? அவருடைய போட்டோவைப் பத்திரிகைகளில் போட்டீர்களா?" என்றான் நாகராஜன்.

"போட்டோவே கிடையாது. நான் ஒருத்திதான் அடையாளம் கண்டு பிடிக்கக்கூடும். வேறு அவரைத் தெரிந்துகொள்ளக் கூடியவர்கள் ஒருவருமே யில்லை. என்ன செய்யலாம்!" என்றாள் செல்லம்மாள்.

"இந்த ஊரில் குடிகாரச் சாமியார் என்றொருவ ரிருந்தார். அவர் ஊரூராய்ச் சுற்றுகிறவர். அவரை விசாரித்தால் ஒரு வேளை தெரிந்தாலும் தெரியலாம்."

"அவர் யாத்திரைபோய் ஒரு வருஷத்திற்குக் குறைவில்லை. இப்பொழுது வந்தாலும் வருவார். கண்ணன் பிறந்தநாள் கழிந்ததும் போனார்" என்று சியாமளி சொல்லுகையில் ஜகதீசன் வர, யாவரும் எழுந்து உள்ளே சென்றனர்.

*    *    *

அன்று பௌர்ணமி. மேல் மாடியில் நிலவில் உட்கார்ந்திருந்தான் ஜகதீசன். அவனருகில் சியாமளி கால்களை நீட்டிய வண்ணம் மடியில் வெற்றிலைத் தாம்பாளத்தை வைத்துக்

கொண்டு வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தாள். அவன் உட்கார்ந்திருந்த சாய்வு நாற்காலிக்கருகில் ஒரு முக்காலி யின்மேல் ஒரு பளிங்குக் கிண்ணியில் நறுக்கிய மாம்பழத் துண்டுகளும், வெள்ளிச் சொம்பில் பாலும் வைக்கப்பட்டிருந்தன. இப்போது அவர்கள் புதுமணம் புரிந்த தம்பதிகளாயிருந்தனர்.

வேனிற் காலம், பங்குனி மாதம். வசந்தன் இளமையோடு உலவுகிறான். புதிதாய்த் துளிர்த்த மரங்களும் செடி கொடிகளும், அந்நிலவொளியின் எழிலோடுகூடி, காண்போர் கண்களையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தன. மெல்லிய தென்றல் அருகிலுள்ள சண்பகம், மனோரஞ்சிதம், மகிழம் முதலிய மலர்களின் மணத்தை வாரிக்கொணர்ந்து வீடுகள் தோறும் இறைத்துச் சென்றது. மிக்க உயரமாய் வளர்ந்திருந்த தென்னைகளும், அதையடுத்த பெருமரங்களும் வானுலகிற்குச் செல்லும் படிகளோ வென்று ஐயமுறச் செய்தன.

அன்று அவ்வழகிய நிலவை அனுபவியாதார் ஒருவருமே இரார். தன்னையும் மறந்தவளாய் அந்நிலவின் அழகிலேயே ஈடுபட்டிருந்தாள் சியாமளி. அந்நில வொளியில் அதுகாறுமில்லாத அற்புத எழிலுடன் முகத்திற் புன்னகை ததும்ப, கூந்தல் காற்றினு லலைக்கப்பெற, கால்களை நீட்டியவளாய் அவள் சாய்ந்திருந்த கோலம் காணுதற்கரிய காட்சியாய்த் திகழ்ந்தது.

வெகு தூரத்தில் எங்கிருந்தோ ஓர் இனிய பாடல் கேட்டது. பிச்சைக்காரர்கள் தாளம் போடும் 'கிரி கிட்டகம்' என்னும் கட்டையின் சத்தமும் வெகு தூரத்திலிருந்து வர வரச் சமீபித்து வருவதுபோல் தோன்றிற்று. சற்று நேரம் திகைத்தாள் சியாமளி. முன்பு ஒரு நாள் நிலவில் உட்கார்ந்திருந்தபொழுது சுவாமியார் பாடியது ஞாபகம் வர, "என்ன! குடிகாரச் சாமியார் என்று சொன்னேனே. அவர் வந்துவிட்

டார் போலிருக்கிறது. ஒரு வருஷமாய்க் காணவேயில்லை. என்ன அற்புதமான சாரீரம், பாருங்கள் ; அவருக்குத் தெரி யாத பாட்டே கிடையாது. என்ன பேச்சு! என்ன இனிமை! அடாடா! என்ன அன்பு கனிந்த பார்வை! சாந்தமும் கருணையும் முகத்தில் தாண்டவமாடும் மகான் ; முகம்கூட இப்போது மறந்து விட்டது. அவருக்கு வயது அறுபதுக்கு மேலிருக்கும். முகத்தில் விழித்தாலே பாவம் போகும். இவ்வளவு கஷ்ட காலங்களுக்கிடையில் சுவாமியாரின் சிநேகம் கிடைத்தது ஒரு பெரிய பாக்கியம். கீழே போவோமா? மன்னி சம்பகம்கூடப் பார்க்க வேண்டுமென்று சொன்னாள்" என்று நிறுத்தினாள் சியாமளி.

சுவாமிகளின் குரல் வரவரச் சமீபத்தில் கேட்கலா யிற்று. "சரி, தெருக்கோடியில் கேட்கும்பொழுது நாம் போவோம்" என்று சொல்லிக்கொண் டிருக்கும் பொழுதே,

"இச்சகத்து ளோரெலாம் எதிர்த்துநின்ற போதினும்
அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமென்ப தில்லையே!"

என்ற பாடல் வெகு இனிமையுடன் வெகு சமீபத்தில் கேட் டது. இருவரும் அவசரமாய் இறங்கிச் சென்றனர்.

* * * *

தெருத் தாழ்வாரத்தில் பதஞ்சலி சாஸ்திரியாரும், அடுத்த பங்களாவி லிருக்கும் அகஸ்திய சர்மா, வாமன சர்மா இருவரும் இராஜீய விஷயங்களைப் பற்றித் தர்க்கித் துக்கொண் டிருந்தனர்.

சாமியாரைக் கண்டதும் பதஞ்சலி சாஸ்திரியார் உத்த ரீயத்தை இடையில் கட்டிக்கொண்டு சாஷ்டாங்கமாக நமஸ் கரித்தார். கக்க தண்டத்தையும் கிரிகிட்டகத்தையும் கீழே போட்டு விட்டு "அற்புதக் கற்பகம்" என்று கீழே உட் கார்ந்தார் சுவாமி.

"அம்மா! சம்பக லக்ஷ்மி! அம்மா குழந்தாய்!" என்று கூப்பிடலானார் சாஸ்திரியார். இதற்குள் அரைத் தூக்கமும் விழிப்புமா யிருந்த நாகராஜனும் சம்பகமும் எழுந்து வர, அப்பொழுதே இறங்கி வந்துகொண் டிருந்த சியாமளியும் ஜகதீசனும், தெருப்புறம் சென்றனர். "அம்மா! இவரை நமஸ்கரியுங்கள்" என்றார் சாஸ்திரிகள்.

சியாமளியும் சண்பகமும் முதலில் வணங்கிய பின், நாகுவும் ஜகதீசனும் அபிவாதனம் செய்து ஒரு புறமாய் ஒதுங்கி நின்றனர்.

"யார்?" என்று கைகளினால் கேட்டார் சுவாமியார்.

"அந்தப் பெண் மருமகள். இவர்தான் சியாமளியின் அகத்துக்காரர்."

"ஆஹா! அப்படியா? மங்களானி பவந்து. கற்பகமே துணை. வரனுக்காக நிரம்பவும் சிரமப்பட்டீர்கள். அம்மையின் கடைக்கண் பார்வை யிருந்தால் உலகில் எதுதான் நடவாது? மாப்பிள்ளை என்ன, உத்தியோகமோ? படிப்போ?"

"'சந்திரிகா' வென்று பத்திரிகை வருகிறதே, அது அவர்கள்தான் போடுகிறார்கள்."

"ஆசிரியரோ?"

"ஆம்" என்று மிகுந்த வணக்கத்துடன் கூறினான் ஜகதீசன்.

"அப்படியா? சந்தோஷம், அம்மா! சியாமளே! நல்ல சத்புத்ரனைச் சேர்த்து வைத்தாள் ஈசுவரி. கற்பகத்தை அண்டினவர் பழுதடைவதுண்டோ?........காங்கிரஸ் பையன் இவன்தானே?" என்று நாகராஜனைச் சுட்டிக் காட்டினார். "ஆம்" என்றார் சாஸ்திரியார்.

இதற்கிடையில் கண்ணன் அழுகைச் சத்தம் கேட்டுச் சம்பகம் உள்ளே செல்ல, சியாமளி சுவாமிகளையே பார்த்தவளாய் அங்கேயே நிற்கலானாள்.

"மருமகள், எவ்விடத்துப் பெண்? தாய் தந்தைய ருண்டோ?"

"ஆகா! எல்லோரும் இருக்கிறார்கள்" என்று சொல் லிக்கொண் டிருக்கும் பொழுதே, "இன்று திருவான்மியூரில் அப்பன் நடனம்; நேரமாயிற்று. ஏதோ இந்த வழி வந் தேன்" என்று கூறியவராய்க் கக்க தண்டத்தைக் கையி லெடுத்து விட்டார்.

சியாமளி, நாகராஜனிடம் நெருங்கி, பஞ்சமி இரவு கட் டாயம் வரச்சொல்ல வேண்டுமென்று கேட்டுக் கொள்ளும் படி கூற, நாகு அவரை யணுகி "உங்களை இப்பொழுது தாமதிக்கச் செய்வது நியாயமன்று. பஞ்சமியன்று இரவு கட்டாயம் வந்து தரிசனம் கொடுக்க வேண்டும் என்று கேட் கலா மல்லவா?" என்றான்.

"ஆகா! அதற்கென்ன?" என்று கூறி, "உலகத்து நாயகியே......" என்று பாடியவராய்ப் புறப்பட்டு விட் டார் சுவாமியார்.

அவர் நெடுந்தூரம் செல்லும் வரையில் மனோகரமான அந்த நிலவொளியில் அந்த தேவகானம் கொஞ்சங் கொஞ்ச மாய் ஒடுங்கிப் பிறகு காற்றுடன் கலந்துபோயிற்று.

அதுவரையில் மௌனமாயிருந்த அகஸ்திய சர்மா, "என்ன நடை! என்ன வேகம்! ஐம்பது வயதிருக்குமா?" என்றார்.

"முன்பே ஐம்பது என்றாரே. நான்கு வருடமாயிற்று அவர் சொல்லி" என்றான் நாகராஜன்.

"ஏண்டாப்பா! நீங்களெல்லாரும் பூலோகத்தில் தானி ருக்கிறீர்களா? நன்றாயிருக்கிறது! என்னமோ சிரமம், படுத் ததும் கண்ணயர்ந்துவிட்டோம். ஒரு குரல் கூப்பிடக் கூடாதோ? சம்பந்தி யம்மாள் வந்த நாள் முதல் 'பார்க்க வேண்டும், அவரைச் சில விஷயங்கள் கேட்கவேண்டும்'

என்று தவியாய்த் தவிக்கிருள். ஏனடீ சியாமளி! நீயாவது வந்து ஒரு வார்த்தை சொல்லக் கூடாதோ?" என்று மிகுந்த கோபத்துடன் கூறினாள் சேஷியம்மாள்.

சியாமளி மிகுந்த வருத்தத்துடன் தலை குனிந்தவளாய் "இல்லை பாட்டி, நீங்கள் கோபிப்பதும் நியாயந்தான். பஞ்சமியன்று ராத்திரி வரும்படி அண்ணாவைச் சொல்லும்படி சொன்னேன். அவரைப் பார்த்தவுடன் எங்களுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. சற்று உட்கார்ந்தார். திருவான்மியூர் நடனத்துக்குப் போகவேண்டுமென்று எழுந்துவிட்டார். எப்படியும், அம்மாவும் அம்மாமியும் நாலுநாள் கழித்துத் தானே போகவேண்டும்? அதற்குள் இவரும் வந்துவிடுவார். கேட்கவேண்டியவைகளைக் கேட்கிறது. இப்பொழுது நம்மெல்லோரையும் ஒரு வழிப்படுத்திய கற்பகாம்பாள் அவருக்கு ஒரு வழி காண்பிக்கமாட்டாளா?" என்று சொல்லிக் கொண்டிருக்கையில், "பாட்டிக்கும் பேத்திக்கும் என்ன யுத்தம்?" என்று சிரித்தவண்ணம் கேட்டுக்கொண்டே வந்தாள் செல்லம்மாள்.

"கேள், இந்த அதிசயத்தை! நேற்றிரவு சுவாமிகள் வந்திருந்தாராம். வெள்ளிக்கிழமை வரச்சொல்லி யிருக்கிருர்களாம். அவருக்கு இஷ்டமிருந்து வந்தாலுண்டு. இல்லாவிட்டால் நாம் அவரைக் கண்டுபிடிக்க முடியுமா? வந்திருக்கிருர் என்று சொல்லக்கூடாதோ? நாம் சற்று அயர்ந்து விட்டோம். இல்லாவிட்டால், அவர் பாட்டு தெருக்கோடியில் வரும்பொழுதே கணீர் கணீரென்று வெங்கலத்திலடித்தாற்போல் கேட்கும். நல்ல மகான். அவர் தரிசனம் கிடைப்பதென்ன சாமான்யமா? ஏதோ அவருடைய ஆசீர்வாதத்தினுல்தான் இந்த மட்டுமிருக்கிறது" என்றுள்.

* * * *

"அம்மா! பாட்டி!" என்று ஆனந்த மிகுதியினுல் உரத்துக் கூவினாள் சியாமளி. "என்னடீ! என்ன? மாமி

பார் மாப்பிள்ளை எல்லோரும் இருக்கும்பொழுது துளிக் கூட மரியாதையில்லாமல் கத்துகிறாயே?" என்று கடிந்த வண்ணம் கூடத்திற்கு வந்தாள் சேஷியம்மாள்.

"பாட்டி! கல்யாணி அக்கா வரப் போகிறாள். அவளே காகிதம் எழுதி யிருக்கிறாள். குழந்தை போட்டோவையும் அனுப்பியிருக்கிறாள்" என்று சந்தோஷம் தாங்காமல் துடி துடித்துக் கூறினாள் சியாமளி.

"எங்கே! படி! படி!" என்று அவசரப்படுத்தினாள் சேஷியம்மாள்.

ஜகதீசனும் நாகுவும் மாடியிலிருந்து இறங்கி வந்தார்கள். நாகு சியாமளியை நெருங்கி "எங்கே! கொண்டுவா!" என்று கடிதத்தை வாங்கிப் படிக்கலானான்.

அவன் கண்களினின்றும் கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகி யோடிற்று. படிக்க மாட்டாமல் கடிதத்தை ஜகதீசன் கையில் கொடுத்துவிட்டான். ஜகதீசன் பின்வருமாறு படிக்கலானான்:

ஸாலர்ஜங்பகதூர் தெரு,

கோலாலம்பூர்.

அன்பு மிக்க அண்ணாவுக்கு அனேக நமஸ்காரம். உபய குசலோபரி. நான் உங்களிடமெல்லாம் சொல்லிக்கொள்ளாமல் கிளம்பி வந்ததில் உங்களுக்கு ரொம்பவும் மனவருத்தம் உண்டாக்கியிருப்பேன். அதற்கு மேல் என்மனம் கஷ்டப் பட்டது. ஆனால் வேறு வழியில்லாமல் போய்விட்ட படியால் அவ்வாறு செய்தேன்.

மாப்பிள்ளை எனக்குக் கடிதம் எழுதி, அதில் தாம் செய்த காரியங்கள் எல்லாம் பிசகென்றும், மன்னிக்கவேண்டுமென்றும், அக்னி சாக்ஷியாய்க் கலியாணம் செய்துகொண்டு தம்மையே நம்பியிருக்கும் மனைவியைக் கைவிட்டது மகா

பாபமென்று உணர்வதாகவும், ஒருவரிடமும் சொல்லாமல் தம்முடன் வந்துவிட்டால் எங்கேயாவது போய்ப் பிழைத்துக் கொள்ளலாமென்றும் குறிப்பிட்டிருந்தார். நான் யோசனைசெய்து பார்த்தேன். சுகமோ கஷ்டமோ அவருடன் இருப்பதுதான் பெருமை என்று எனக்குப் பட்டது. ஆகவே, கிளம்பி விட்டேன்.

நான் இவ்வளவு நாளாய்க் கடிதம் எழுதாததைப் பற்றி நீங்கள் மிகவும் கோபங்கொள்ளக்கூடும். ஆனாலும் சில காரணங்களை முன்னிட்டுத்தான் எழுதவில்லை. அவைகளை நேரில் சொல்லுகிறேன். நாங்கள் கூடிய சீக்கிரத்தில் சென்னைக்கு வருவதாய் உத்தேசம். மாப்பிள்ளை இப்பொழுது ராம்டன் கம்பெனியில் மானேஜர் பதவியிலிருக்கிறார். என்னிடம் மிகவும் அன்பாகவும் ஒழுங்காகவும் நடந்து கொள்கிறார். பழைய துர்க்குணங்களெல்லாம் போய்விட்டன. இவ்வளவு நாளாய் அப்பா, அம்மா, சுந்தரி, ரங்கு, சியாமளி இவர்களைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்று எவ்வளவோ ஆவலாயிருந்தும் கடிதம் எழுதவேண்டாமென்றே எழுதவில்லை. மாப்பிள்ளை, உங்கள் முகத்தில் விழிக்கவே வெட்கப்படுகிறார். நான் எவ்வளவோ மன்றாடி, நல்ல வார்த்தை சொல்லி, சென்னைக்கு வர ஏற்பாடு செய்திருக்கிறேன். "இந்தக் கடிதத்தைக் கூட எழுதாமல் திடீரென்று வந்து நிற்கலாமா?" என்று எண்ணினேன். அப்பாவுக்கு முன் எச்சரிக்கை கொடுக்காமல் வந்தால், வந்த பின் மற்ற மாப்பிள்ளைகளுக் கெதிரில் ஏதாவது மரியாதைக் குறைவாய் நடந்துவிட்டால் என்ன செய்வதென்று எண்ணியே இதை எழுதினேன். நீ சிறையிலிருந்து வந்து விட்டதாகவும், தம்பி பிறந்து மூன்று வருஷமாகின்றதென்றும், சியாமளியை நல்ல இடத்தில் கொடுத்திருக்கிறதென்றும், எனக்கு அண்ணியார் வந்திருக்கிறாரென்றும் கேட்டுப்

பூரித்துவிட்டேன். இதெல்லாம் "சந்திரிகா" பத்திரிகைக்கு ஏஜெண்டாக இங்கே வந்திருப்பவர் சொன்னார். அம்மாவின் தேகஸ்திதியும் தேவலை என்று கேள்விப்பட்டேன். நீ பக்குவமாய்ச் சமயமறிந்து அப்பாவுக்கும் அம்மாவுக்கும் விஷயத்தைச் சொல்லிவை. நான் கூடிய சீக்கிரம் வந்து சேருகிறேன். புறப்படும் தேதியை மறு தபாலில் எழுது கிறேன். மற்றவை நேரில்.

இப்படிக்கு,
உன் அன்புள்ள தங்கை,
கல்யாணி.

கடிதத விஷயமாய் அம்மாவுக்குத் தெரிவிக்கலாமா என்பதை யோசித்துக்கொண்டு செய். போட்டோ அனுப்பியிருக்கிறேன். அதில் குறும்புச் சிரிப்புச் சிரித்துக் கொண்டிருப்பது உன் மருமாள் வஸந்தா. அவளுக்கு ஒரு வயதாகிறது.

கல்யாணி

இவ்வாறு வாசித்து முடித்தான் ஜகதீசன்.

"அம்மா! என் கண்மணி! கல்யாணி! உன்னை மறுபடியும் பெற்றெடுத்தேனடி! கற்பகத்தாயே! என்னம்மா! என் வயிற்றில் பாலைவார்த்தாயே! உனக்குக் குடம் குடமாய்ப் பாலபிஷேகம் செய்து வைக்கிறேனடி!" என்று சொல்லியவளாய் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள் சேஷியம்மாள்.

நாகராஜனது மனது தாங்கமுடியாத சந்தோஷத்தினால் துடிதுடித்தது. சுந்தரியும் சியாமளியும் சந்தோஷ மிகுதியினால் ஒன்றும் செய்ய முடியாமல், சொன்ன விஷயங்களையே திரும்பத் திரும்பச் சொல்லி ஆனந்தப் படலாயினர்.

லக்ஷ்மியோ ஏதோ சர்வசாதாரணமானதும், எதிர் பார்த்ததுமான விஷயம்போல் கேட்டுக்கொண்டு உள்ளே சென்றாள்.

தன் தாயின் மன நிலையைப்பற்றி நாகராஜனால் ஒன்றும் நிர்ணயிக்க முடியவில்லை. தானும் அவளைப் பின் தொடர்ந்து உள்ளே சென்றான்.

தொப்பென்று கீழே உட்கார்ந்து குலுங்கிக் குலுங்கி அழலானாள் லக்ஷ்மி. நாகு, அவளருகே உட்கார்ந்து மெதுவாய்ச் சமாதானப்படுத்துகையில், "என்ன? என்ன சங்கதி? என்ன ஒரே அமளி குமளிப் படுத்துகிறீர்களே!" என்று கேட்டவராய் உள்ளே வந்தார் பதஞ்சலி சாஸ்திரிகள்.

## அத்தியாயம் 21

# பஞ்சமி இரவு

அன்றுதான் பஞ்சமி. வீட்டு வேலைகளெல்லாம் முடிந்தன. பஞ்சமி இரவு சுவாமியின் வருகைக்காக ஒவ்வொருவரும் சிந்தனையில் ஆழ்ந்தவராய் மூலைக்கு மூலை உட்காருவதும், எழுந்திருப்பதும், வாசலுக்குப் போவதும், உள்ளே வருவதுமா யிருந்தனர். மணியும் பத்து அடித்து விட்டது. லக்ஷ்மி கண்ணனை மடியில் வைத்தவளாய் ஊஞ்சலில் உட்கார்ந்து விட்டாள். பதஞ்சலி சாஸ்திரியார் தாம் பாளத்தைக்காலி செய்த வண்ணம் தெருத் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கல்யாணியிடம் அவள் யோக க்ஷேமங்களை விசாரித்துக்கொண்டிருந்தார். நாகராஜன், ரங்கன், ஜகதீசன் இவர்கள் மாடியில் நிலா முற்றத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள்.

செல்லம்மாளின் மனம் துடியாய்த் துடித்துக்கொண்டிருந்தது. "சுவாமி என்ன சொல்லுவாரோ? காசியில் கண்டேனென்பாரோ! இல்லை, இறந்து விட்டாரென்பாரோ! சீ, இதென்ன பைத்தியக்கார எண்ணம்! இது வரையில் சுப சகுனங்கள்தான் தோன்றுகின்றன. ஆகையால் அப்படிச் சொல்லமாட்டார். ஒரு வேளை குடியும் குடித்தனமுமா யிருக்கிறாரோ? என்னமோ, எனக்கொன்றுமே புரியவில்லையே!" என்றெண்ணியவளாய்க் கூடத்தில் வந்து உட்கார்ந்தாள். இறந்த கால நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றாய்த் தோன்ற, முத்து முத்தாய்க் கண்ணீருகுத்தாள் செல்லம்மாள்.

மணி பன்னிரண்டடித்தது. "அம்மா சியாமளம்! சுவாமிகளுக்குப் பக்ஷணங்கள் எடுத்து வைத்திருந்தாயே; மூடி வைத்துவிட்டுப் போ, அம்மா! இனிமேல் எங்கே வரப் போகிறார்?" என்று படுக்கையை உதறிப் போடலானார் சாஸ்திரிகள்.

"இந்தக் கடிகாரம் வேகமாய்ப் போகிறது. மணி பன்னிரண்டு இருக்காது. பதினொன்றரைதா னிருக்கும். வருவார், வருவார். நீங்கள் படுத்துக் கொள்ளுங்கள். யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே என்பது போல் அவர் பாட்டு கால் மணி நேரம் முன்னதாகவே வந்து விடுமே. அப்பொழுது எழுந்து கதவைத் திறந்தால் போதும்! ரங்கன் வாசல் தாழ்வாரத்திலேயே படுத்துக் கொள்ளுகிறானும். அப்படி நாம் தூங்கிவிட்டாலும் அவன் கூப்பிடுவான்" என்றாள் லக்ஷ்மி.

சேஷியம்மாள் கால்களை நீட்டியவளாய் உட்கார்ந்த படியே தூணில் சாய்ந்து குறட்டை விட்டுக்கொண்டிருக்கிறாள். அவர்களுடைய குடும்பத்தில் எவ்வளவோ மாறுதல்கள் நேர்ந்து விட்டனவாயினும், சேஷிப் பாட்டியின் குறட்டைமட்டும் சிறிதும் மாறாமலிருந்தது. செல்லம்மாளும் கௌரியம்மாளும் படுக்கையில் புரண்டு சிந்தித்த வண்ண மிருந்தனர். ஊர் ஓசை அடங்கிவிட்டது. ரங்கன், நாகராஜன், ஜகதீசன் மூவரும் நிலா முற்றத்திலும், சியாமளியும் சம்பகமும் அதை யடுத்த தாழ்வாரத்திலும் உட்கார்ந்து பேசலாயினர். ரங்கன், "நான் போய்த் தூங்குகிறேன். இப்படிக் கொட்டமடித்துக் கொண்டிருந்தால் விடியற்காலம் எழுந்தாற் போலத்தான்!" என்று கிளம்பினான்.

* * *

"ஆம், ஆம்! அவர்தான்! அதோ கிரிகிட்டகத்தின் ஓசை—அற்புதமான பாடலுடன் கலந்து காற்றிலே

தவழ்ந்து வருகிறதே! அடடா! என்ன அற்புதமான குரல்!'' என்றான் ஜகதீசன்.

சியாமளி அப்பொழுதுதான் சற்றுக் கண்ணயர்ந்து இன்பக் கனவுகள் கண்டுகொண்டிருந்தாள். அன்றலர்ந்த புது மலரை யொத்த அவள் கன்னங்களைக் கரங்களால் தொட்டான் ஜகதீசன்.

சியாமளி திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள்.

"என்ன? தூங்கிவிட்டாயா?''

"இல்லை, சற்றுக் கண்ணயர்ந்தேன்'' என்றாள் சியாமளி.

"அரிச்சந்திரனைப் பொய் சொல்லும்படி இவ்வளவு நிர்ப்பந்தப்படுத்தினாரே இந்த விஸ்வாமித்திரர். இந்தச் சின்ன யுக்தி அவருக்குத் தோன்றவில்லை. என்றைக்காவது ஒரு நாள் பகலில் அவன் சாப்பிட்ட பிறகு பேசிக்கொண்டே இருந்துவிட்டுச் சற்றுக் கண் அயரும்பொழுது 'அரிச்சந்திரா! தூங்கிவிட்டாயா?' என்று கேட்டிருந்தால் போதும். உடனே, 'இல்லை, கண்ணை மூடினேன்' என்று சொல்லியிருப்பான். ஏ ராஜ ரிஷியே! உமக்கேன் இது தெரியவில்லை?'' என்று கூறிவிட்டு, "சுவாமியார் குரல் கேட்கிறது. எழுந்து வா! நான் போய் அம்மாவை எழுப்புகிறேன்'' என்று வெகு வேகமாய்க் கீழே இறங்கினான் ஜகதீசன்.

பாடிக்கொண்டே தம்மை மறந்து பரவசராய்ப் பித்தன் போல் குதித்துக்கொண்டும், கூத்தாடிக்கொண்டும் வந்துகொண் டிருந்தார் சுவாமியார். வழக்கம்போல் 'வஸந்தவிகா' ருக் கருகில் வந்ததும் பாட்டு முடிவுபெற்றது.

தாழ்வாரத்தை யணுகி, கக்க தண்டத்தைக் கீழே தடாலென்று போட்டுவிட்டு "அற்புதக் கற்பகம்........'' என்று கூறி உட்கார்ந்தார் சுவாமியார்.

ஏற்கனவே சித்தமாய்க் காத்திருந்த ரங்கன் கைகூப்பி வணங்கினான். மறு நிமிடம் கதவு திறக்கப்பட்டது. சியா

மணி, சம்பகம், நாகு, ஜகதீசன், செல்லம்மாள், கௌரியம்மாள்; சேஷியம்மாள் யாவரும் ஒருவர் பின் ஒருவராய் நாடக மேடையிற் தோன்றுவதே போல் வரிசையாய் வெளியே வந்தனர். கடைசியில் லக்ஷ்மியும் சாஸ்திரியாரும் வந்தனர்.

"அம்மா, சியாமளம்! சுவாமிக்குப் பக்ஷணம் வைத்திருப்பாயே, அதையும் எடுத்துக்கொண்டு, அக்காவையும் அழைத்து வா. அவளை முதலில் நமஸ்காரம் செய்யச் சொல்லு. பிறகு நீயும் சண்பகமும்........" என்றார் சாஸ்திரிகள்.

சியாமளி உள்ளே சென்று கையில் வெள்ளிக் கிண்ணியுடன் சுந்தரியை பின் தொடர்ந்து வந்தாள். அரைத் தூக்கமும் விழிப்புமாய் சுந்தரி வணங்கி நின்றாள். "தீர்க்க சுமங்கலீ பவ" என்று கூறி "இந்தக் குழந்தையின் புருஷன் என்ன செய்கிறான்?" என்று கேட்டார்.

"வடக்கே, சிம்லாவில் ஏதோ வேலை கிடைக்குமென்று போனான். ஒன்றும் சரிப்படவில்லை. இப்பொழுது கல்கத்தாவில் ட்ராம் வண்டித் தூண்கள், விளக்குத் தூண்கள் இவைகளின் மேல் வருஷக் கணக்காய் நிற்கக்கூடிய விளம்பரங்களாம். அவைகளை ஒரு லக்ஷ ரூபாய்க்கு ஆர்டர்வாங்கியிருக்கிறானும். நமக்கென்னமோ லக்ஷம், பதினாயிரம், என்ற பேச்சைக் கேட்டாலே பயமா யிருக்கிறது. அவர்கள் என்னமோ தண்ணீர் பட்டபாடாய்க் கணக்குச் சொல்லுகிறார்கள்" என்றார் சாஸ்திரிகள்.

"அவன் தகப்பனார் சுகந்தானே? பின்னென்ன பாவாயில்லை. வேலாயுதன் பிறக்கப் போகிறான். அவன் பெயரையே வை. கண்ணன் எங்கே, தூங்கிவிட்டானோ?" என்று கேட்டுக்கொண்டே சுவாமி கிண்ணத்திலிருந்த பட்சணங்களைத் தின்னலானார். தின்ற பிறகு "பஞ்சமி யன்று

எதன் பொருட்டு வரவேண்டு மென்றீர்கள்?" என்று கேட்டார்.

சாஸ்திரியார் மெதுவாய், "எங்கள் சம்மந்தி அம்மாள் —ஜகதீசனின் தாய்க்கு உங்களிடம் ஏதோ கேட்க வேண்டு மாம்" என்றார்.

"உம், எனக்கென்ன தெரியும்! சாமி என்று நீங்க ளெல்லோரும் பெயர்வைத்துவிட்டீர்கள். அதனால் அந்தம் மாள் ஏதாவது சோதிடம், மாந்திரீகம் தெரியுமென்றெண்ணி விட்டார்களோ என்னமோ? அவைகளெல்லாம் ஒன் றுமே தெரியாதே. எனக்குத் தெரிந்ததைக் கேட்டால் சொல்லுகிறேன். கற்பகத்தையும், அவள் குழந்தை, குட் டிகள், பரிவாரங்களையும் தெரியும்" என்றார்.

"இல்லை, இது வேறு விஷயம். அந்தம்மாளுடைய கணவர் காணுமல் போய்விட்டார். நீங்கள் பல ஊர் சுற்றி யிருக்கிறீர்கள். எங்கேயாவது கண்டிருக்கலாமோ வென்று கேட்க வேண்டுமாம். ஒரு துரோகி பொறாமையினால் இந்த அம்மாள்மீது அபவாதம் கற்பித்து, வீணாய்ப் பழிசுமத்தி அவரை ஓடும்படி செய்துவிட்டானும். அவன் மரண காலத் தில் நேரில் இந்தம்மாளிடம் விஷயத்தைச் சொல்லி மன்னிப் புக் கேட்டுக் கொண்டானும்" என்று சொல்லி, "சியா மளம்! மாமியாரை வந்தனம் செய்யச் சொல்லு" என்றார்.

வார்த்தை முடியுமுன்னமே செல்லம்மாள் சுவாமியின் எதிரில் நின்றாள். சுவாமிகள் கண்மூடி மௌனியா யிருந் தார். இள நகையுடன் கூடிய தாடியும் முகமும் இதற்கு முன் எங்கேயோ அவளுக்குக் கண்டதுபோல் தோன்றின. குரலும் பழகிய குரல் போல் தோன்ற, எங்கே கேட்டிருப் போம் என்று தயங்கி நின்றாள்.

* * *

சுவாமிகள் கண் திறக்கவேயில்லை. "சொல்லுங்கள்" என்று கைகளினால் சமிக்ஞை செய்தார் பதஞ்சலி சாஸ்திரி கள்.

"மதுரையை அடுத்த தேவாரத்தில்........" என்று தொடங்கினாள் செல்லம்மாள்.

"செல்லமா?" என்று மிகவும் ஆச்சர்யமும் கம்பீரமும கலந்த குரலில் கேட்டார் சுவாமிகள்.

"ஆ! நீங்கள் தானா?" என்று உரத்துக் கூறிய வண்ணம் தடாலென்று அடியற்ற மரம்போல் அவர் கால்களில் வீழ்ந்து விட்டாள் செல்லம்மாள்.

ஜகதீசன் "அப்பா!" என்று கதறியவண்ணம் அவர் அருகில் சென்று நின்று மாலை மாலையாய்க் கண்ணீர் சொரிந்தான்.

மற்றவர் யாவரும் திகைப் பூண்டு மிதித்தவர்போல் திகைத்துக் கற்சிலைபோல் அசைவற்று நின்று விட்டனர்.

சுவாமியார் மெல்ல மெல்லப் பேசலானார். அந்த அமைதியான இரவில் அங்கிருந்த மரம், செ டி, கொடிகள் யாவும் அவரது பேச்சையே கேட்பவை போல் அசைவற்றிருந்தன. இன்னும் அவர் காலடியிலேயே வீழ்ந்து கிடந்தாள் செல்லம். அவரது பாதங்கள் அவளது புனிதமான கண்ணீரால் நனைந்துகொண் டிருந்தன.

"எழுந்திரு! செல்லம்! எழுந்திரு! இப்பொழுதென்ன நேர்ந்துவிட்டது? நீ இவ்வளவு கண்ணீர் சொரிய உனக்கென்ன குறை? இந்த உலகத்தில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவது இயல்பே யல்லவா? கடந்த இருபத்திரண்டு வருஷங்களாய் உன்னைக் கொடுமைக் காளாக்கிய 'பதர்' இதோ இருக்கிறது. அன்று நீ கண்டு களித்த உன் காந்தனன்று இச் சடலம். இது வெறும் கட்டை. வாழ்வாவது மாயம்; இது மண்ணாவது திண்ணம். இந்தச் சரீரம் வெறும் மண். அழியக்கூடிய இந்தச் சரீரத்தில் என்ன இருக்கிறது? அழியாத வஸ்துவை யல்லவா தேடவேண்டும்? இந்த சரீரத்தைத் தேடச்செய்த காலத்தை அழியாத வஸ்துவாகிய பராசக்தியைத் தேடுவதில் செலவிட்டிருக்கலாமே? அது உனக்குத் தோன்ற நியாயமில்லை. என்னையே கடவுளாய்க்

கருதித்தான் வழிபட்டிருக்கிறாய். நான் உண்மையை உணராத நீசன் ஆகிவிட்டேன். செல்லம், எழுந்திரு! கற்பகம் உனக்கு நல்ல சற்புத்திரனையும் அவனுக்கேற்ற மனைவியையும் அளித்துவிட்டாள். இனி உனக்கென்ன கவலை? என் கால்களை விடு!'' என்றார்.

ஜகதீசன் இருகரங்களாலும் தன் தாயின் தோள்களைப் பற்றி "அம்மா, அம்மா! எழுந்திரேன்! தெய்வானுக்ரஹம் நம்மை ஒன்று சேர்த்துவிட்டது. எழுந்திரம்மா!'' என்று கூறினான்.

செல்லம் மெதுவாய் அவர் கால்களைப் பற்றியிருந்த கரங்களையும் பாதங்களில் பதிந்து கிடந்த முகத்தையும் எடுத்தவளாய்க் கைகூப்பி, "இந்த வேஷத்தைக் கலைக்க வேண்டும். மறுபடி இந்தக் கோலத்தில் கண்டால் என் நெஞ்சு வெடிக்கும்போலிருக்கிறது. எங்களோடிருக்க வரம் கொடுக்கவேண்டும். இந்த ஒரு வரம் தந்தால் போதும். உங்களைத் தவிர எனக்கு வேறு தெய்வமேது? கடந்த இருபத்திரண்டு வருஷங்களாய் என் இதயமாகிற கோயிலில் நான் வேறெந்தத் தெய்வத்தை வழிபட்டேன்? எழுந்து உள்ளே வாருங்கள். கடந்துபோனவைகளை மறந்துவிடுவோம். வெயிலிலும் குளிரிலும், காற்றிலும், மழையிலும் கட்டைபோல் திரிய உங்களுக்கெப்படி மனம் துணிந்ததோ? நேரில் வந்து என்னை விசாரித்துத் தீரத் தெளிந்துகொள்ளாமல் நின்ற நிலையிலேயே ஓடிவிடும்படி உங்களுக்கெப்படித் தோன்றிற்று?'' என்று மேலே பேசமாட்டாதவளாய் விம்மி விம்மி அழலானாள் செல்லம்மாள்.

* * *

சுவாமியாருக்குக் கூடக் கண்ணீர் ததும்பியது. பரம வேதாந்தியான அவர் நெஞ்சமும் சலித்தது. நீர் மல்கும் கண்களுடன், ஜகதீசனை நோக்கினார். ஜகதீசனோ அசை

வற்று மரம்போல் நின்றான். கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகி அவன் உத்தரீயத்தை நனைத்தது.

"அப்பா! குழந்தாய்! அழாதே. உன் தாயையும் உன் மனைவியையும் குறைவறப் போஷி. மனங் கோணாமல் நடந்துகொள். கற்பகத்தை மறவாதே. அவ்வளவே நான் உனக்குக் கூறவேண்டியது. மிகப் பெரிதான பத்திரிகைத் தொழிலில் தலையிட்டுக் கொண்டிருக்கிறாய். அதனால் தமிழ் மூன்னைக்கு மட்டுமே யன்றி, பாரதத் தாய்க்கும் நன்மை உண்டாகும்" என்றார்.

"ஆனால், நீங்கள் சொல்லுவதென்ன? எழுந்து உள்ளே வர விருப்பமில்லையா? நான் குற்றமற்றவள். என்னை மன்னித்து அங்கீகரிப்பது உங்கள் கடமை. எழுந்திருங்கள்!" என்றாள் செல்லம்மாள்.

சுவாமிகள் நகைத்தவராய், "செல்லம், இனி மறுபடி என்னை வீட்டிற்கு இழுப்பது நியாயமா? நீயே யோசித்துப் பார். கடந்த இருபத்திரண்டு வருஷங்களாய்க் காட்டிலும் நாட்டிலும் திரிந்த இக்கட்டை இனி ஒரு கட்டுக் கடங்கி ஓரிடத்தில் கிடக்குமா? கிடந்தும் பயனென்ன? வறுத்த பயறு முளைப்பதுண்டா? இந்தக் கட்டை எப்பொழுது ஒரு முறை உலகைத் துறந்துவிட்டதோ, அத்துடன் முடிந்து விட்டது. சுட்ட மண்ணும், பச்சை மண்ணும் ஒட்டுமா? மறுபடி இல்லறத்தி லிருப்பது இந்த கட்டைக்குத் தகுமா? கற்பகம் ஒப்புவாளா?" என்றார்.

"அப்படியானால் இன்னமும் நீங்கள் என்னைக் குற்றவாளியாகக் கருதித்தானே வர மறுக்கிறீர்கள்?"

"செல்லம்! அப்படிச் சொல்லாதே. அது ஒரு நாளுமில்லை. நீ உன் மாசற்ற தன்மையை நிரூபித்துவிட்டாய். நான்தான் கடமை தவறியவன். நானே குற்றவாளி. என் குற்றங்களின் பொருட்டு நீதான் என்னை மன்னித்து மோக்ஷ

வழிக்கு ஒரு தீபமாய், நான் ஆரம்பித்துவிட்ட இந்தப் பெரிய விரதத்திற்குப் பங்கம் நேராமல் என்னைக் காப்பாற்றவேண்டும். நான் வீட்டிலிருந்தாலென்ன? காட்டிலிருந்தாலென்ன? பைத்தியம் கிழித்த கந்தை பந்தம் கட்ட உதவியது போல், பஞ்சு செய்த சூழ்ச்சி முதலில் கெடுதலாய்க் காணப்பட்டாலும், மோட்ச மெனும் விடுதலைக்கு அது வழி காட்டியாயிற்று. பஞ்சு நம்மால் போற்றத் தக்கவன். அவன் செய்த பேருதவி, பவசாகரத்தையே கடக்கும் வழியைச் செப்பனிட்டு விட்டது. செல்லம்! அவனை நிந்தியாதே. விதியானது மனித உருவாய் வந்து, நம்மைப் பிரித்து, நன்மையைக் கொடுத்துவிட்டது. இனி எஞ்சியுள்ள உன் வாழ்நாளைத் தேச சேவைக்கும், ஈசுவர சேவைக்கும் செலவிடு. ஏழைகளுக் கிரங்கு. சாக்ஷாத் ஜகதீஸ்வரியின் பிரதிபிம்பமென்றே யாவரையும் கருதி வழிபடு. வேறென்ன சொல்லப் போகிறேன்" என்று கூறி, "வந்தே மாதரம் பகவதீம் அம்பிகாம் வாணீரமாஸேவிதாம்" என்று பாடிய வண்ணம் எழுந்துவிட்டார் சுவாமிகள். கைகளைக் கூப்பியவளாய்ச் செல்லம்மாள் அவரைப் பின் தொடரலானாள்.

"செல்லம்! இன்னும் உன் மனம் தெளியவில்லையா? என் வார்த்தைப்படி நடப்பதுதான் உனக்கழகு. தொடராதே!" என்று சொல்லிவிட்டு ஸ்வாமிகள் அதி விரைவாய்ச் சென்றார். அவர் பாட்டின் சப்தம் படிப் படியாய்க் குறைந்து, பாட்டின் மூன்றாவது அடி முடியுமுன்னரே சுவாமி வெகு தூரம் சென்றுவிட்டாரென் றுணர்ந்தாள் சியாமளி.

முற்றும்.

Kesari Printing Works, Madras.